# பொருளதிகாரம்.

## அகத்திணையியல், புறத்திணையியல்



வ. உ. சிதம்பரம் பிள்ளை,

பதிப்பாசிரியன்.



வேலாயுதம் பிரிண்டிங் பிரஸ், அத்திக்குடி.

**1928.**

# தொல்காப்பியம்

## இளம்பூரணம்



### பொருளதிகாரம்

இவ்வதிகாரம் என்ன பெயர்த்தோ வெனின்,

பொருளதிகாரம் என்னும் பெயர்த்து. இது, பொருள் உணர்த்தினமையாற் பெற்ற பெயர். நிறுத்த முறையானே எழுத்தும் சொல்லும் உணர்த்தினூர்: இனிப் பொருள் உணர்த்த வேண்டுதலின், இவ்வதிகாரம் பிற் கூறப்பட்டது.

பொருளென்பது யாதோ வெனின், மேற் சொல்லப்பட்ட சொல்லின் உணரப் படுவது. அது, முதல் கரு உரிப் பொருள் என மூவகைப்படும்; " முதல்கரு வுரிப் பொரு ளென்ற மூன்றே, நுவலுங் காலை முறைசிறந் தனவே, பாடலுட் பயின்றவை நாடுங் காலை " [அகத்-ங]
என்ரு ராகலின்.

முதற்பொருளாவது, நிலமும் காலமும் என இருவகைப்படும்; " முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டின், இயல்பென மொழிப வியல்புணர்ந் தோரே" [அகத்-ச] என்றூ ராகலின். நிலமெனவே, நிலத்திற்குக் காரணமாகிய நீரும், நீர்க்குக் காரணமாகிய தீயும், தீயிற்குக் காரணமாகிய காற்றும், காற்றிற்குக் காரணமாகிய ஆகாயமும் பெறுதும். காலமாவது, மாத்திரை முதலாக நாழிகை, யாமம், பொழுது, நாள், பக்கம், திங்கள், இருது, அயநம், ஆண்டு, உகம் எனப் பலவகைப் படும்.

கருப்பொருளாவது, இடத்தினும் காலத்தினும் தோற்றும் பொருள். அது, தேவர் மக்கள் விலங்கு முதலாயினவும், உணவு செயல் முதலாயினவும், பறை யாழ் முதலாயினவும், இன்னவானபிறவுமாகிப் பலவகைப் படும். "தெய்வ முணவே மாமரம் புட்பறை, செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ, அவ்வகை பிறவுங் கருவென மொழிப" [அகத்-உ0] என்றூ ராகலின்.

உரிப்பொருளாவது, மக்கட் குரிய பொருள். அஃது, அகம் புறம் என இருவகைப் படும். அகமாவது, புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடல் எனவும், கைக்கிளை பெருந்திணை எனவும் எழுவகைப் படும்; " புணர்தல் பிரித லிருத்த லிரங்கல், ஊட லிவற்றி னிமித்த மென்றிவை, தேருங் காலத் திணைக்குரிப் பொருளே" [அகத்-கரு]

எனவும், "காமஞ் சாலா விளமை யோள்வயின், ஏமஞ் சாரா விடும்பை யெய்தி, நன்மையுந் தீமையு மென்றிரு திறத்தால், தன்னொடு மவளொடுந் தருக்கிய புணர்த்துச், சொல்லெதிர் பெறாஅன் சொல்லி யின்புறல், புல்லித் தோன்றுங் கைக்கிளைக் குறிப்பே" [அகத்-௫௩] எனவும், "ஏறிய மடற்றிற மிளமை தீர்திறம், தேறுத லொழிந்த காமத்து மிகுதிறம், மிக்க காமத்து மிடலொடு தொகைஇச், செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே" [அகத்-௫௪] எனவும் ஓதினாராகலின். அஃதேல், கைக்கிளை பெருந்திணை யென்பனவற்றை உரிப்பொருள் என ஓதியது யாதினாலெனின், எடுத்துக்கொண்டகண்ணே "கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்"

என ஓதி, அவ்வற்றுள் நடு

வண் ஐந்திணைக்குரியன இவை யென்ப் புணர்தல்

முதலாக வகுக்கப்படுதலின், மூன்



வகுக்கப்படாத கைக்கிளை பெருந்திணையும் உரிப்பொருளா மென்றுணர்க. புறமாவது,

நிரைகோடற்பகுதியும், பகைவயிற் சேறலும், எயில் வளைத்தலும், இரு பெருவேந்தரும்

ஒரு களத்துப் பொருதலும், வென்றி வகையும், நிலையாமை வகையும், புகழ்ச்சி வகையும்

என எழுவகைப் படும். அஃதேல், புறப்பொருளை உரிப்பொருளென ஓதிற்றிலரா லெ

னின், “ வெட்சி தானே குறிஞ்சியது புறனே ” [புறத்-டுக] எனவும், பிறவும் இவ்வாறு

மாட்டேறு பெற ஓதலின் அவையும் உரிப்பொருளாம் என்க. அகம் புறம் என்பன கார

ணப்பெயர். அகப்பொருளாவது போக நுகர்ச்சியாகலான் அதனுனாய பயன் தானே யறி

தலின் அகம் என்றார். புறப்பொருளாவது மறஞ்செய்தலும் அறஞ்செய்தலு மாகலான்

அவற்றானாய பயன் பிறர்க்குப் புலனாதலின் புறமென்றார்.

அஃதற்றாக, அறம் பொருள் இன்பம் வீடு என உலகத்தோரும் சமயத்தோரும்

கூறுகின்ற பொருள் யாதனுள் அடங்கும் எனின், அவையும் உரிப்பொருளினுள் அடங்

கும். என்னை ? வாகைத்திணையுள் “ அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும், ஐவகை

மரபி னரசர் பக்கமும், இருமூன் று மரபி னேனோர் பக்கமும் ” [புறத்-கரு] என இல்ல

றத்திற் குரியவும், “காமஞ் சான்ற கடைக்கோட் காலை, ஏமஞ் சான்ற மக்களொடு துவ

ன்றி, அறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியும், சிறந்தது பயிற்ற லிறந்ததன்பயனே ”

[கற்பு-ருக] என நான்கு வருணத்தா ரியல்பும், " நாலிரு வழக்கிற் றாபதப் பக்கமும் "
[புறத்-கூ] எனவும், "காம நீத்த பாலின் கண்ணும்" [புறத்-எள] எனவும் புறமாகிய வீடு
பேற்றிற்குரிய வானப்பிரத்த சந்நியாசிக ளியல்பும் கூறுதலின், அறமும் வீடும் அடங்கின.
வெட்சி முதலாகத் தும்பை ஈறாகக் கூறப்பட்ட பொருண்மையும், வாகையிற் கூறப்பட்ட
ஒரு சாரனவும், காஞ்சிப்படலத்து நிலையாமையும், பாடாண்பகுதியிற் கூறப்பட்ட
பொருண்மையுமாகிய இவையெல்லாம் பொருளின் பகுதியாதலின் அப்பொருள் கூறி
னாராம். அகத்திணையியலானும் களவியலானும் கற்பியலானும் இன்பப்பகுதி கூறினாராம். அஃதேல், பிறநூலாசிரியர் விரித்துக்கூறினாற்போல அறமும் பொருளும் விரித்துக் கூறாதது என்னையோவெனின், உலகத்தில் நூல் செய்வார் செய்கின்றது அறிவிலா
தாரை அறிவுகொளுத்த வேண்டியன்றே; யாதானும் ஒரு நூல் விரித்தோதிய பொருளைத் தாமும் விரித்தோதுவராயின் ஓதுகின்றதனாற் பயனின்றாமாதலால், முன்னூலா
சிரியர் விரித்துக்கூறின பொருளைத் தொகுத்துக்கூறலும், தொகுத்துக்கூறின் பொருளை விரித்துக்கூறலும்

நூல்செய்வார் செய்யும் மரபென் றுணர்க. அஃதேல், இந் நூலகத்து விரித்துக்கூறிய பொருள் யாதெனின், காமப்பகுதியும் வீரப்பகுதியும் என்க. இன்பம் காரணமாகப் பொருள் தேடு மாதலானும், பொருளானே அறஞ் செய்யு மாகலானும், இன்பமும் பொருளும் ஏற்றமென ஓதினுர் என வுணர்க.

அஃதற்றாக, இது பொருளதிகாரமாயின் உலகத்துப் பொருளெல்லாம் உணர்த்

தல் வேண்டுமெனின், அது முதல் கரு உரிப் பொருளெனத் தொகைநிலையான் அடங்கும். அவ்வாறு வகுக்கப்பட்ட பொருளை உறுப்பினுலும் தொழிலினுலும் பண்பினுலும் பாகுபடுத்தி நோக்க வரம்பிலவாய் விரியும். இக்கருத்தினனே இவ்வாசிரியர் உலகத்துப் பொருளெல்லாவற்றையும் முதல் கரு உரிப் பொருளென ஓதினுர் என வுணர்க. அஃதற்றாக, இவ்வதிகாரத்துள் உரைக்கின்ற பொருளை யாங்ஙனம் உணர்த்தினரோ வெனின், முற்பட இன்பப்பகுதியாகிய கைக்கிளை முதலாகப் பெருந்திணை ஈறாக அகப்பொருளிலக்கண முணர்த்தி, அதன்பின் புறப்பொருட்பகுதியாகிய வெட்சி முதலாகப் பாடாண்டிணை ஈறாகப் புறப்பொருளிலக்கண முணர்த்தி, அதன்பின் அகப்பொருட்பகுதியாகிய களவியல் கற்பியல் என இரண்டு வகைக் கைகோளு



முணர்த்தி, அதன்பின் அகம் புறம் என இரண்டினையும் பற்றிவரும் பொருளியல் புணர்

த்தி, அதன்பின் அவ்விருபொருட்கண்ணும் குறிப்புப்பற்றி நிகழும் மெய்ப்பா டுணர்த்தி, அதன்பின் வடிவும் தொழிலும் பண்பும் பயனும் பற்றி உவமிக்கப்படும் உவமவிய லுணர்த்தி, அதன்பின் எல்லாப் பொருட்கும் இடமாகிய செய்யுளிய லுணர்த்தி, அதன்பின் வழக்கிலக்கணமாகிய மரபிய லுணர்த்தினு ரென்றுகொள்க. இவ்வகையி ஞனே அகத்திணையியல், புறத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல், மெய்ப் பாட்டியல், உவமவியல், செய்யுளியல், மரபியல் என ஓத்து ஒன்பதாயின.

## முதலாவது—அகத்திணையியல்.

இவ்வதிகாரத்துள், இம்முதற்கண் ஓத்து அகப்பொருளிலக்கணம் நுதலிற்று.

க. கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்
முற்படக் கிளந்த வெழுதிணை யென்ப.

இத்தலைச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், அகப்பொருள் இத்துணையென வரையறுத் துணர்த்துதல் நுதலிற்று.

இதன்பொருள் :—கைக்கிளை முதலாக பெருந்திணை

இறுவாய் (ஆக)-கைக்கிளை என்று சொல்லப்படும் பொருள்

முதலாகப் பெருந்திணை என்று சொல்லப்படும் பொருள்

ஈறாக, எழுதிணை முற்பட கிளந்த என்ப-எழு பொருள்

முற்படக் கூறப்பட்டன என்று சொல்வர்.

முதலா என்பது முதலாக என்னும்

பொருள்பட நின்றது: விகார மெனினும்

அமையும். "இறுவாயாக" என்பதன்கண் ஆக என்பது எஞ்சிநின்றது. எழுதிணையும் முற்படக் கிளந்த என றபாலது மொழிமாறி நின்றது. கிளந்த என்பது கிளக்கப்பட்டன என்னும் பொருள்படவந்த முற்றுச்சொல். முற்படக்கிளந்த எழுதிணை கைக்கிளை முதலாகப் பெருந்திணை இறுதிய எனினும் இழுக்காது. "முற்படக் கிளந்த" என்றமையான், அவை யேழும் அகப்பொருள் என்று கூறினருமாம், அகம் புறம் எனப் பொருளை வரையறுத்தல் இவர் கருத்தாகலின். அன்னதாதல் "அகத்திணை மருங்கி னரிறப வுணர்ந்தோர், புறத்திணை யிலக்கணந் திறப்படக் கிளப்பின்" [புறத்-க] என்பதனுற் கொள்க. முற்படக் கிளந்த எழுதிணை யெனவே, பிற்படக் கிளக்கப்படுவன

எழுதிணை உள என்பது பெறுதும். அவையாவன,

வெட்சி முதலாகப் பாடாண்

டிணை ஈறாகக் கிடந்த எழுதிணையும். இவ்வகையினுன் இவ்வதிகாரத்திற் கூறப்பட்ட பொருள் பதினுன் கென்பதூஉம், அவையும் "வெட்சி தானே குறிஞ்சியது புறனே" [புறத்-க] எனவும், "வஞ்சிதானே முல்லையது புறனே" [புறத்-சு] எனவும் இவ்வாறு

கூறுதலின் ஏழாகி அடங்கு மென்பதூஉம் கொள்க.

அஃதேல், மெய்ப்பாட்டியலானும் உவமவியலானும்

செய்யுளியலானும் மரபிய

லானும் கூறப்பட்ட பொருள் யாதனுள் அடங்கு மெனின், அவை கருப்பொருளும் அப்பொருளாற் செய்யப்பட்டனவும் அப்பொருளின் குணம் முதலியனவும் அப்பொரு ளின் குறிப்பு நிகழ்ச்சியு மாதலின், அவையும் கருப்பொருளின்பால் நடுவணைந்திணை

யுள் அடங்கும் என்ப. அவை சிறுபான்மை கைக்கிளை பெருந்திணையினும் வரும். அவ் வெழுதிணையுமாவன:—கைக்கிளை, முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல், பெருந் திணை. கைக்கிளை என்ற பொருண்மை யாதோ வெனின், கை என்பது சிறுமை

பற்றி வரும்;

அது தத்தங்குறிப்பிற் பொருள்செய்வதோர் இடைச்சொல் : கிளை என்



பது உறவு ; பெருமையில்லாத தலைமக்கள் உறவு என்றவாறு ; கைக்குடை, கையேடு கைவாள், கைபொலியல், கைவாய்க்கால், எனப் பெருமையில்லாதவற்றை வழங்குப வாதலின்.

நடுவணைந்திணைக்கண் நிலமும் காலமும்
கருப்பொருளும் அடுத்துப் புணர்தல்
பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடல் எனச் சொல்லப்பட்ட அவ்வுரிப் பொருள், ஒத்த அன்பும் ஒத்த குலனும் ஒத்த வடிவும் ஒத்த குணனும் ஒத்த செல்வமும் ஒத்த இளமை யும் உளவழி நிகழுமாதலின், அது பெருங்கிளைமை யாயிற்று.

முல்லை முதலாகிய ஐந்தும் முன்னர்க் கூறப்படும்.
பெருந்திணை நடுவணைந்திணையாகிய ஒத்த காமத் தின்
மிக்கும் குறைந்தும் வருதலானும், எண்வகை மணத்தினும்
பிரமம் பிரசாபத்
தியம் ஆரிடம் தெய்வம் என்பன அத்திணைப்பாற்
படுதலானும், இந்நான்கு மண
மும் மேன்மக்கள்மாட்டு நிகழ்தலானும், இவை உலகினுள்
பெருவழக்கெனப் பயின்று வருதலானும், அது பெருந்திணை
எனக் கூறப்பட்டது. அஃதேல், நடுவணைந்திணையாகிய ஒத்த
கூட்டம் பெருவழக்கிற்றன்றோ வெனின், அஃது அன்பும்
குலனும் முதலாயின ஒத்துவருவது உலகினுள் அரிதாகலின்
அருகியல்லது வாராதென்க.

இந்நூலகத்து ஒருவனும் ஒருத்தியும் நுகரும்
காமத்திற்குக் குலனும் குணனும் செல்வமும் ஒழுக்கமும்
இளமையும் அன்பும் ஒருங்கு உளவழி இன்பம் உளதா
மெனவும், கைக்கிளை ஒருதலை வேட்கை யெனவும்,
பெருந்திணை ஒவ்வாக் கூட்டமாய் இன்பம் பயத்தல்
அரிதெனவும் கூறுதலான், இந்நூலுடையார் காமத்துப்
பயனின்மை உய்த்து ணர வைத்தவாறு அறிந்து கொள்க.
(க)

உ. அவற்றுள்,
நடுவணைந்திணை நடுவண தொழியப்

படுதிரை வையம் பாத்திய பண்பே.

இது, மேற் சொல்லப்பட்ட எழுதிணையுள், நிலம் பெறுவன வரையறுத் துணர்த் துதல் நுதலிற்று.

இ-ள் :—அவற்றுள்-மேற் சொல்லப்பட்ட எழுதிணையுள், நடுவணது ஒழிய-நடு வெனப்பட்ட பாலை யொழிய, நடுவண் ஐந்திணை-(கைக்கிளை பெருந்திணைக்கு) நடுவணதாகி நின்ற ஐந்திணை, படு திரை வையம் பாத்திய பண்பு-ஒலிக்கின்ற திரைகடல் சூழ்ந்த உலகம் பகுக்கப்பட்ட இயல்பு.

இதனாற் சொல்லியது, எழுவகைத் திணையினும் நிலம்பெறுவன நான்கென்ற வாறாயிற்று. நடுவணது பாலை யென்று எற்றாற் பெறுதுமெனின், வருகின்ற சூத்திரங்களுள் "முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல்" [அகத்-ரு] என நிலம் பகுத்தோதினமையின் நடுவணது பாலை எனக் கொள்ளப்படும். நடுநிலைத்திணை யெனினும், பாலை யெனினும் ஒக்கும். பாலை என்னும் குறியீடு எற்றாற் பெறுதுமெனின், "வாகை தானே [புறத்-கரு] பாலையது புறனே" என்பதனாற் பெறுதும்.

இச்சூத்திரத்துள் ஒழிய என்
னும் வினையெச்சம் எவ்வாறு முடிந்த தெனின், அது
பாத்திய என்னும் பெயரெச்சத்
தோடு முடிந்தது. அப்பெயரெச்சம் பண்பென்னும்
பெயர்கொண்டு, ஐந்திணை என்
னும் எழுவாய்க்குப் பயனிலையாகி நின்றதென உரைப்ப.

இவ்வா றுரைப்பவே, ஐந்திணை பண்பென வரூஉங்
காலத்துப் பயன்பட நில்லா
மையின் அஃது உரையன் றென்பார் உரைக்குமாறு:—ஒழிய என்பதனை எச்சப்படுத்
தாது முற்றுப்படக் கூறி, “படுதிரை வையம் பசுத்த பண்பு டுவேண தொழிய” எனப்



பொருளுரைப்ப. அஃதேல், வினையெச்ச வாய்பாட்டால்
வரும் முற்றுளவோ வெனின்,
“வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய” [எச்ச-௬௩]
என்று முற்று வாய்பாட்
டால் வினையெச்சம் வருதலின் வினையெச்ச
வாய்பாட்டால் முற்று வருமென்பதும்,

அச்சூத்திரத்தின் அமைத்துக்கொள்ளப்படு மென்ப.
இவ்வுரை இரண்டினும் ஏற்ப தறி
ந்து கொள்க. 'நடுவணைந்திணை' என்பன யாவை
யெனின், முல்லை குறிஞ்சி பாலை மரு
தம் நெய்தல் என்பனவாம். எற்றுக்கு? இந்நூலகத்து
அகமும் புறமும் ஆகிய உரிப்பொ
ருள் கூறுகின்றாராதலான் புணர்தல் பிரிதல் இருத்தல்
இரங்கல் ஊடல் என அமையுமே
யெனின், புறப்பொருட்கண் நிரைகோடலை வெட்சி
யெனக் குறியிட்டாரு மாகலான்
ஈண்டு இப்பொருளையும் முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல்
என ஆளும் என்க. இதனாற்
பயன் என்னை யெனின், உரிப்பொருளே திணையென
உணர்த்துவாராயின் முதற்பொ
ருளும் கருப்பொருளும் திணையாதல் தோன்றாதாம்.
அவையெல்லாம் அடங்குதற்
பொருட்டு முல்லை குறிஞ்சி பாலை மருதம் நெய்தல்
என்றார் என்பது. அவை
யாமாறு வருகின்ற சூத்திரங்களான் விளங்கும். [ஏகாரம்
ஈற்றசை.] (உ)

௩. முதல்கரு வுரிப்பொரு ளென்ற
மூன்றே

நவலும் காலை முறைசிறந் தனவே

பாடலுட் பயின்றவை நாடுங் காலை.

இது, மேற்சொல்லப்பட்ட நடுவணைந்திணை
யாமாறும், ஒரு வகையான் உலகத்
துப் பொருளெல்லாம் மூவகையாகி அடங்கு
மென்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—பாடலுள் பயின்றவை நாடும்
காலை-சான்றோர் செய்யுளகத்துப் பயின்ற
பொருளை ஆராயுங்கால், முதல் கரு உரிப் பொருள் என்ற
மூன்றே-முதற்பொருளென
வும் கருப்பொருளெனவும் உரிப்பொருளெனவும்
சொல்லப்பட்ட மூன்று பொருண்
மையுமே [காணப்படும்]. நுவலும் காலை முறை
சிறந்தன-அவை சொல்லும் காலத்து
முறைமையாற் சிறந்தன.

இச்சூத்திரத்துள் பாடலுட் பயின்ற பொருள்
மூன்றெனை ஓதி அவற்றுள் உரிப்
பொருள் என ஒன்றை ஓதினமையால்,
புறப்பொருளும் உரிப்பொருளாகியவாறு
கண்டுகொள்க. முறைமையாற் சிறத்தலாவது,
யாதானும் ஒரு செய்யுட்கண் முதற்

பொருளும் கருப்பொருளும் உரிப்பொருளும் வரின், முதற்பொருளால் திணையாகு

மென்பதூஉம், முதற்பொரு ளொழிய ஏனை யிரண்டும் வரின் கருப்பொருளால் திணை

யாகு மென்பதூஉம், உரிப்பொருள்தானே வரின் அதனுல் திணையாகு மென்பதூஉ

மாம். அவையாமாறு முன்னர்க் காணப்படும்.

அஃதேல், ஒரு பொருட்கு ஒரு காரணம் கூறுது மூன்று காரணம் கூறியது

என்னை யெனின், உயர்ந்தோர் என்றவழிக் குலத்தினன் உயர்ந்தாரையும் காட்டும்,

கல்வியான் உயர்ந்தாரையும் காட்டும், செல்வத்தான் உயர்ந்தாரையும் காட்டும். அது

போலக் கொள்க. [முதல் ஏகாரம் பிரிநிலையாகவும், இரண்டாம் ஏகாரம் அசைநிலையா

கவும் வந்தன.]
(௩)

௪. முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டின்

இயல்பென மொழிப வியல்புணர்ந் தோரே.

இது, மேற்சொல்லப்பட்ட மூன்றுவகைப்

பொருளினும் முதற்பொருளாமாறு

உணர்த்துதல் நுதலிற்று.



இ-ள் :—முதல் எனப்படுவது நிலம் பொழுது இரண்டின் இயல்பு-முதல் என்று சொல்லப்படுவது நிலமும் காலமுமாகிய அவ்விரண்டினது இயற்கை, என மொழிப இயல்பு உணர்ந்தோர்—என்று சொல்லுவர் உலகினியல் உணர்ந்தோர்.

இயற்கை என்பதனால் செய்துகோடல் பெருமை அறிந்துகொள்க. நிலம் என்பதனால் பொருள் தோற்றுதற்கு இடமாகிய ஐம்பெரும் பூதமும் கொள்க. [ஏகாரம் ஈற்றசை.] (ச)

ரு. மாயோன் மேய காடுறை யுலகமும்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புன லுலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்

சொல்லிய முறையாற்

சொல்லவும் படுமே.

இது, நிறுத்த முறையானே நிலத்தால் திணையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:—மாயோன் மேய காடு உறை உலகமும்-மாயவன் மேவிய காடு பொருந்திய

உலகமும், சேயோன் மேய மை வரை உலகமும்-முருகவேள் மேவிய மை வரை உலக

மும், வேந்தன் மேய தீம்புனல் உலகமும்-இந்திரன் மேவிய தீம்புனல் உலகமும், வரு

ணன் மேய பெருமணல் உலகமும்-வருணன் மேவிய பெருமணல் உலகமும், முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனசொல்லிய முறையால் சொல்லவும் படும்-முல்லை குறி

ஞ்சி மருதம் நெய்தல் எனச் சொல்லிய முறையினானே சொல்லவும் படும்.

நிரனிறை. உம்மை எதிர்மறை யாகலான் இம்முறையன்றிப் பிற வாய்பாட்டாற்

சொல்லவும் படுமென்றவாறு. காடு, நாடு, மலை, கடல் என்பதே பெருவழக்கு. இன்னும்

"சொல்லிய முறையாற் சொல்லவும் படும்" என்றதனான், இம்முறையன்றிச் சொல்

லவும் படுமென்று கொள்க. அஃதாவது, அவற்றுள் யாதானும் ஒன்றை முன்னும் பின்

னுமாக வைத்துக் கூறுதல். அது சான்றோர் செய்யுட் கோவையினும் பிறநூலகத்தும்

கண்டுகொள்க. இச்சூத்திரத்துள் காடுறை நில

மென்றது உலக மென்றதனுன், ஐவ

கைப் பூதத்தானும் ஐந்து இடமென்பது உய்த்துணர வைத்தவாறு கண்டுகொள்க. முல்

லை குறிஞ்சி யென்பன இடுகுறியோ காரணக்குறியோ எனின், ஏகதேச காரணம் பற்றி

முதலாசிரியர் இட்டதோர் குறியென்று கொள்ளப்படும். என்னை காரணமெனின்,

"நெல்லொடு, நாழி கொண்ட நறுவீ முல்லை, யரும்ப விழலரி தூஉய்" [முல்லைப்பாட்டு]

என்றமையால், காடுறை யுலகிற்கு முல்லைப்பூச் சிறந்த தாகலானும், " கருங்கோற் குறி

ஞ்சிப் பூக்கொண்டு, பெருந்தே னிழைக்கும் நாடனொடு நட்பே" [குறுந்-௩] என்றவழி மைவரை யுலகிற்குக் குறிஞ்சிப்பூச் சிறந்த தாகலானும், " ஆர லருந்திய சிறுசிரன் மரு

தின், தாழ்சினை யுறங்குந் தண்டுறை யூரன்" [அகம்] என்றவழி தீம்புனல் உலகிற்கு

மருது சிறந்தமை யானும், " பாசடை நிவந்த கணைக்கா னெய்தல், இனமீ னிருங்கழி

யோத மல்குதொறுங், கயமூழ்கு மகளிர் கண்ணின்
மானும்" [குறுங்கூ] என்றவழிப்
பெருமணல் உலகிற்கு நெய்தல் சிறந்தமையானும்,
இந்நிலங்களை இவ்வாறு குறியிட்டா
ரென்று கொள்ளப்படும். பாலை யென்பதற்கு நிலம்
இன்றேனும், வேனிற்காலம் பற்றி
வருதலின் அக்காலத்துத் தளிரும் சினையும் வாடுதலின்றி
நிற்பது பாலை யென்பதோர்
மரம் உண்டாகலின் அச்சிறப்பு நோக்கிப் பாலை
யென்று குறியிட்டார். கைக்கிளை
பெருந்திணை யென்பன வற்றிற்கு நிலமும் காலமும்
பகுத்து ஓதாமையின் இவ்வாறன்
றிப் பிறிதோர் காரணத்தினாற் குறியிட்டார். [ஔாரம்
ஈற்றசை] (ரு)



சு. காரு மாலையு முல்லை.

இனிக் காலத்தால் திணையாமாறு உணர்த்துவான்
எடுத்துக்கொண்டார். இஃது,
அவற்றுள் முல்லைத்திணைக்குக் காலம் வரையறுத்து

உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:—காரும் மாலையும் முல்லை-கார்காலமும் மாலைப்பொழுதும் முல்லைத்திணைக்

குக காலமாம.

காராவது மழை பெய்யுங் காலம். அஃது ஆவணித்திங்களும் புரட்டாசித்திங்களும்.

மாலையாவது இராப்பொழுதின் முற்கூறு.

(சு)

எ. குறிஞ்சி, கூதிர் யாம மென்மனார் புலவர்.

இது, குறிஞ்சிக்குக் காலமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—குறிஞ்சி-குறிஞ்சித்திணைக்குக் காலமாவது, கூதிர் யாமம் என்மனார் புல

வர்-கூதிர்க்காலமும் யாமப்பொழுதும் என்று கூறுவர் புலவர்.

கூதிராவது ஐப்பசித்திங்களும் கார்த்திகைத்திங்களும். யாமமாவது இராப்பொ

ழுதின் நடுக்கூறு.

(எ)

அ. பனியெதிர் பருவமு முரித்தென

மொழிப.

இஃது, எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

இ-ள் :—பனி எதிர் பருவமும் உரித்து என

மொழிப-(குறிஞ்சித்திணைக்கு) முன்

பனிக் காலமும் உரித்தென்று சொல்லுவர்.

இதனைக் கூதிர்க்காலத்தோடு ஒருங்கு கூறாமையின்,

அத்துணைச் சிறப்பிற்றன்

றெனக் கொள்க. குறிஞ்சி என்றது அதிகாரத்தான்

வந்தது.

முன்பனிக்காலமாவது மார்கழித்திங்களும்

தைத்திங்களும். உம்மை இறந்தது

தழீஇய எச்சவும்மை.

(அ)

கூ. வைகறை விடியன் மருதம்.

இது, மருதத்திணைக்குக் காலம் உணர்த்துதல்

நுதலிற்று.

இ-ள் :—வைகறை விடியல் மருதம்-வைகறையும்

விடியலும் மருதத்திற்குக் கால

மாம.

வைகறையாவது இராப்பொழுதின் பிற்கூறு. விடியலாவது பகற்பொழுதின் முற்கூறு. பருவம் வரைந்தோதாமையின், அறுவகைப் பருவமும் கொள்ளப்படும். இது நெய்தற்கும் ஒக்கும். (கூ)

ய. எற்பாடு,

நெய்த லாதன் மெய்பெறத் தோன்றும்.

இது, நெய்தற் றிணைக்குக் காலம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—எற்பாடு-எற்படுபொழுது, நெய்தல் ஆதல் மெய் பெற தோன்றும்-நெய் தற்றிணைக்கு காலமாதல் பொருண்மை பெறத் தோன்றும்.

எற்பாடாவது பகற்பொழுதின் பிற்கூறு.

(ய) கக. நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு

முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே.

இது, பாலைக்குக் காலமும் இடனும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—நடுவுநிலைத்திணை-நடுவுநிலைத்திணையாகிய பாலையாவது, நண்பகல் வேனிலொடு முடிவுநிலைமருங்கின் முன்னிய நெறித்து-நண்பகற்பொழுது வேனிற்காலத்தொடு புணர்ந்துநின்றவழிக் கருதிய நெறியை யுடைத்து.

இஃது, இளவேனில் முதுவேனில் என்னும் இருவகைப் பருவத்தின்கண்ணும் வரும் நண்பகற்பொழுது காலமா மென்பதூஉம், ஆண்டு இயங்கும் நெறி நிலமா மென்பதூஉம் உணர்த்தியவாறு. இளவேனிலாவது சித்திரைத்திங்களும் வைகாசித்திங்களும். முதுவேனிலாவது ஆனித்திங்களும் ஆடித்திங்களும். நண்பகலாவது பகற்பொழுதின் நடுக்கூறு. [முதல் ஏகாரம் பிரிநிலை. இரண்டாம் ஏகாரம் ஈற்றசை.] (கக)

கஉ. பின்பனி தானு முரித்தென மொழிப.

இஃது, எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

இ-ள் :—பின்பனியும் உரித்து என மொழிப-பின்பனிக்காலமும் உரித்து என்று கூறுப (பாலைக்கு).

இது வேறோதினமையான், வேனில்போலச் சிறப்பின்றெனக் கொள்க. பின்பனியாவது மாசித்திங்களும் பங்குனித்திங்களும்.

அஃதற்றாக, இவ்வறுவகைப்பருவமும் அறுவகைப்பொழுதும் இவ்வைந்திணைக்

குரியவா றென்னை யெனின், சிறப்பு நோக்கி என்க. என்னை சிறந்தவாறு எனின், முல்லையாகிய நிலனும், வேனிற்காலத்து வெப்பம் உழந்து மரனும் புதலும் கொடியும்

கவினழிந்து கிடந்தன புயல்கள் முழங்கக் கவின்பெறு மாகலின், அதற் கது சிறந்ததாம்.

மாலைப்பொழுது இந்நிலத்திற் கின்றியமையாத முல்லை மலரும் கால மாதலானும், அந்

நிலத்துக் கருப்பொருளாகிய ஆனிரை வரும் கால மாதலானும், ஆண்டுத் தனியிருப்பார்

க்கு இவை கண்டுழி வருத்தம் மிகுதலின், அதுவும் சிறந்த தாயிற்று. குறிஞ்சிக்குப்

பெரும்பான்மையும் களவிற்புணர்ச்சி பொருளாதலின், அப்புணர்ச்சிக்குத் தனியிடம்

வேண்டு மன்றே, அது கூதிர்க்காலத்துப் பகலும் இரவும் நுண்துளி சிதறி இயங்குவார்

இலரா மாதலான், ஆண்டுத் தனிப்படல் எளிதாகலின், அதற் கது சிறந்தது. நடு

நாள் யாமமும் அவ்வாறாகலின் அதுவும் சிறந்தது. மருதத்திற்கு நிலன் பழனஞ் சார்ந்த இடமாதலான், ஆண்டு உறைவார் மேன்மக்களாதலின், அவர் பரத்தையிற் பிரிவுழி அம்மனையகத்து உறைந்தமை பிறர் அறியாமை மறைத்தல்வேண்டி வைகறைக் கண் தம்மனையகத்துப் பெயரும்வழி, ஆண்டு மனைவி ஊடலுற்றுச் சாரகில்லாளா மாத லால் அவை அந்நிலத்திற்குச் சிறந்தன. நெய்தற்குப் பெரும்பான்மையும் இரக்கம் பொருளாதலின், தனிமையுற்று இரங்குவார்க்குப் பகற்பொழுதினும் இராப்பொழுது மிகுமாதலின், அப்பொழுது வருதற் கேதுவாகிய எற்பாடு கண்டார் இனி வருவது மாலையென வருத்தமுறுதலின் அதற்கது சிறந்த தென்க.

பாலைப்பொருளாவது பிரிவு. அப்பிரிவின்கண் தலைமகற்கு வருத்தமுறு மென்று தலைமகள் கவலுங்கால், நிழலும் நீரும் இல்லாத வழி எங்ஙனர் எனவும் கவலுமாகலின், அதற் கது சிறந்ததென்க. [தான் என்பது அசை]

(கஉ)

கா. இருவகைப் பிரிவு நிலைபெறத்

தோன்றலும் உரிய தாகு

மென்மனார் புலவர்.

இது, பாலைக்குரிய பொருளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.



இ-ள் :—இரு வகை பிரிவும்-[இருவகைப் பிரிவான] தலைமகளைப் பிரிதலும் தலை மகளை உடன்கொண்டு

தமர்வரைப் பிரிதலும், நிலைபெற தோன்றலும்-நிலைபெறத் தோன்றலும், உரியது ஆகும் என்மனார் புலவர்-பாலைக்குரிய பொருளாம் என்று கூறுவார் புலவர்.
[தமர்வரை-தமரை மட்டும்.]

உம்மை எச்சவும்மையாகலான், நிலைபெறத் தோன்றாது பிரிதற்குறிப்பு நிகழ்ந் துழியும் பாலைக்குரிய பொருளா மென்றுகொள்க. அதிகாரப்பட்டு வருகின்றது பாலை யாகலின், இருவகைப் பிரிவும் பாலைக்குரிய பொருளாயின. (கரு)

கசா. திணைமயக் குறுதலுங் கடிநிலை யிலவே
நிலனொருங்கு மயங்குத லில்லென
மொழிப
புலனன் குணர்ந்த புலமை யோரே.

இது, மேல் அதிகரிக்கப்பட்ட நிலத்தினும் காலத்தினும் ஆகிய திணை மயங்கு மாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—திணை மயக்குறுதலும் கடிநிலை இல-ஒரு திணைக்குரிய முதற்பொருள் மற்றோர் திணைக்குரிய முதற்பொருளொடு சேரநிற்றலும் கடியப்படாது. நிலன் ஒருங்கு மயங்குதல் இல் என மொழிப-ஆண்டு நிலம்சேரநிற்றல் இல்லை என்று சொல்லுவர், புலன் நன்கு உணர்ந்த புலமையோர்-புலன் நன்கு உணர்ந்த புலமையோர்.

எனவே, காலம் மயங்குமென்ற வாறாயிற்று. அதற்குச் செய்யுள்:—

"தொல்லூழி தடுமாறித் தொகல்வேண்டும் பருவத்தாற்

பல்வயி னுயிரெல்லாம் படைத்தான்கட் பெயர்ப்பான்போல்

எல்லுறு தெறுகதிர் மடங்கித்தன் கதிர்மாய

நல்லற நெறிநிறீஇ யுலகாண்ட வரசன்பின்

அல்லது மலைந்திருந் தறநெறி நிறுக்கல்லா

மெல்லியான் பருவம்போன் மயங்கிருள் தலைவர

எல்லைக்கு வரம்பாய விடும்பைகூர் மருண்மாலை;

பாய்திரை பாடோவாப் பரப்புநீர்ப் பனிக்கடல்

தூவறத் துறந்தனன் றுறைவனென் றவன்றிறம்

நோய்தெற வுழப்பார்க ணிமிழ்தியோ.

வெம்போலக்

காதல்செய் தகன்றாரை யுடையையோ நீ;

மன்றிரும் பெண்ணை மடல்சே ரன்றில்

நன்றறை கொன்றன ரவரெனக் கலங்கிய

என்றுய ரறிந்தனை நரறியோ வெம்போல

இன்றுணைப் பிரிந்தாரை யுடையையோ நீ;

பனியிருள் சூழ்தரப் பைதலஞ் சிறுகுழல்

இனிவரி னுயருமற் பழியெனக் கலங்கிய
தனியவ ரிடும்பைகண் டினைதியோ வெம்போல
இனியசெய் தகன்றாரை யுடையையோ நீ ;
எனவாங்கு
அழிந்தய லறிந்த வெவ்வ மேற்படப்
பெரும்பே துறுதல் களைமதி பெரும !
2



வருந்திய செல்லற்றீர் திறனறி யொருவன்
மருந்தறை கோடலிற் கொடிதே யாழநின்
அருந்தியோர் நெஞ்ச மழிந்துக விடினே."
[கலி-நெய்-கஉ] (கச)

[முதல் ஏகாரம் அசைநிலை. இரண்டாம் ஏகாரம் ஈற்றசை.]

கரு. உரிப்பொரு ளல்லன மயங்கவும் பெறுமே.

இஃது, எய்தாத தெய்துவித்தல் நுதலிற்று.
இ-ள் :—உரிப்பொருள்

அல்லன-உரிப்பொருளல்லாத கருப்பொருளும் முதற்
பொருளும், மயங்கவும் பெறும்-மற்றொரு திணையொடு
சேரநிற்கவும் பெறும்.

உம்மை எதிர்மறை யாகலான் மயங்காமை
பெரும்பான்மை. எனவே, “ உய்த்துக்
கொண்டுணர்தல்” [மரபு-கக0] என்னும்
தந்திர உத்தியான் எடுத்தோதிய காலமாகிய
முதற்பொருளும், பூவும் புள்ளுமாகிய கருப்பொருளும்
மயங்கியும் மயங்காமையும் வரும்.
எனவே, உரிப்பொருள் மயங்கி வாரா தென்றவாறு.
மயங்கிவருதல் கலி முதலாகிய
சான்றோர் செய்யுளகத்துக் கண்டுகொள்க.

“ ஒண்செங் கழுநீர்த் தண்போ லாயிதழ்
ஊசி போகிய சூழ்செய் மாலையன்
பக்கஞ் சேர்த்திய செச்சைக்
கண்ணியன்
குய்மண் டாகஞ் செஞ்சாந்து நீவி”
[அகம்-சஅ]

என்றவழி மருதத்தின் கருப்பொருளாகிய கழுநீரும்
குறிஞ்சிக்குரிய வெட்சிப் பூவும்
அணிந்தோன் என்றமையாற் கருப்பொருள் மயக்க

மாயிற்று. பிறவும் அன்ன. (கரு)

கசு. புணர்தல் பிரித லிருத்த லிரங்கல்
ஊட லவற்றி னிமித்த மென்றிவை

தேருங் காலைத் திணைக்குரிப்

பொருளே.

இஃது, உரிப்பொருளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்

ஊடல் அவற்றின் நிமித்தம்

என்று இவை-புணர்தலும் பிரிதலும் இருத்தலும் இரங்கலும் ஊடலும் அவற்றின் நிமித்தமும் என்று சொல்லப்பட்ட இவை, தேரும் காலை திணைக்கு உரிப்பொருள்-ஆராயுங் காலத்து ஐந்திணைக்கும் உரிப்பொருளாம்.

பிரிவு பாலைக்கு உரித்தாமாறு மேற்சொல்லப்பட்டது. ஏனைய, "மொழிந்த பொருளோடொன்ற வைத்தல்" [மரபு-ககவ] என்னுந் தந்திரவுத்தியால், புணர்தல் என்பது குறிஞ்சிக்கும், இருத்தல் என்பது முல்லைக்கும், இரங்கல் என்பது நெய்தற்கும், ஊடல் என்பது மருதத்திற்கும் பெரும்பான்மையும் உரித்தாகவும், சிறுபான்மை எல்லாப்பொருளும் எல்லாத்திணைக்கும் உரித்தாகவும் கொள்ளப்படும். இருத்தலாவது தலைமகன் வரும் துணையும் ஆற்றியிருத்தல். இரங்கலாவது ஆற்றாமை. [என்று என்பது எண்ணிடைச்சொல். ஏகாரம் ஈற்றசை.]

(கசு)

கஎ. கொண்டுதலைக் கழிதலும்

பிரிந்தவ ணிரங்கலும்

உண்டென மொழிப வோரிடத் தான.

இதுவும், ஒருசார் உரிப்பொருள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.



இ-ள் :—கொண்டுதலைக்கழிதலும் (உண்டு) பிரிந்து அவண் இரங்கலும் உண்டு- கொண்டுதலைக்கழிதலும் உண்டு பிரிந்தவண் இரங்கலும் உண்டு, ஓர் இடத்தான் என மொழிப-ஒரோவிடத்துக்கண் என்று கூறுப.

உண்டு என்பதை இரண்டிடத்தும் கூட்டுக. அன்றியும் உண்டென்பதனை இல்லென்பதன் மாறுக்கி விரவுத்திணையாக்கிப் பொதுப்பட நின்றதெனவுமாம். ஓரிடத்தென்றமையான், மேற்சொல்லப்பட்ட ஐவகை உரிப்பொருளும்போல் எல்லாத் திணைக்கும் பொதுவாகி வருதலின்றி, கொண்டுதலைக்கழிதல் பாலைக்கண்ணும்,

பிரிந்தவணிரங் கல் பெருந்திணைக்கண்ணும் வருமென்று கொள்க. கொண்டுதலைக்கழிதலாவது உடன் கொண்டு பெயர்தல். அது, நிலம் பெயர்தலின் புணர்தலின் அடங்காமையானும்,

உடன்கொண்டு பெயர்தலின் பிரிதலின் அடங்காமையானும், வேறு ஓதப்பட்டது. பிரிந்தவணிரங்கலாவது ஒருவரை ஒருவர் பிரிந்தவிடத்து இரங்கல். அது, நெட்டாறு

சென்றவழி இரங்குதலின்மையானும், ஒருவழித் தணந்தவழி ஆற்றுதலின்றி வேட்கை மிகுதியால் இரங்குதலானும், வேறு ஓதப்பட்டது. [இதற்கு] ஏறியமடற்றிறமும், தேறுதலொழிந்த காமத்து மிகுதிறமும் முதலாயின பொருள். இது பெருந்திணைக்கு உரித்து. [இடத்தான் என்பது வேற்றுமை மயக்கம். ஈற்றகரம் சாரியை.] (யள)

கஅ. கலந்த பொழுதுங் காட்சியு மன்ன.

இதுவும் அது.

இ-ள் :—[கலந்த பொழுதும்-தலைமகளைக் கண்ணுற்றவழி மனநிகழ்ச்சி உளதாங்

காலமும் [அதன்] பின்னர்க் குறிப்பறியுந்துணையும் நிகழும் நிகழ்ச்சியும்,காட்சியும்-தலைவியை எதிர்ப்படுதலும், அன்ன-ஓரிடத்து நிகழும் உரிப்பொருள்.]

கலந்த பொழு தென்பது தலைமகளைக் கண்ணுற்றவழி மன நிகழ்ச்சி யுளதாங் காலம்; அக்காட்சிப் பின்னர்க் குறிப்பறியுந் துணையும் நிகழும் நிகழ்ச்சி. காட்சியாவது தலைவியை எதிர்ப்படுதல். குறிப்பறிந்த பின்னர்ப் புணரும் துணையும் நிகழும் முன்னிலையாக்கல் முதலாயின புணர்தல்நிமித்தம். இவை அந்நிகரனவன்றிப் பொதுப்பட நிற்றலின் வேறு ஓதப்பட்டன. அன்னவென்பது (இவையும்) ஓர் இடத்து நிகழும் உரிப்பொரு ளென்றவாறு. ஓரிடமாவது கைக்கிளை. அஃதேல், இவையும் புணர்தல் நிமித்தமா யினல் வரும் குற்றம் என்னை யெனின், ஒருவன் ஒருத்தியை எதிர்ப்பட்டுழிப் புணர்ச்சி வேட்கை தோற்றலும் தோற்றாமையும் உண்மையின், காட்சி பொதுப்பட நின்றது. ஐயம் முதலாகக் குறிப்பறிதல் ஈறாக நிகழும் மன நிகழ்ச்சி, தலைமகள்மாட்டுக் காமக்குறி ப்பு இல்வழிக் காமக்குறிப்பு உணராது கூறுதலின், புணர்தல்நிமித்தம் அன்று யிற்று.

(கஅ)

கக. முதலெனப் படுவ தாயிரு வகைத்தே.

இதுவும், ஐயம் அறுத்தலை நுதலிற்று.

இ-ள் :—முதல் எனப்படுவது-மேல் எடுத்தோதப்பட்டவற்றில் முதல் என்று சொல்லப்படுவது, அ இருவகைத்து-நிலமும் காலமுமாகிய அவ்விருவகையை உடையது.

எனவே, ஏனயவெல்லாம் உரிப்பொருள் என்றவாறும். இதனாற் பெற்ற தென்னை யெனின், முதல் கரு உரிப்பொருள் என அதிகரித்து வைத்தார்; இனிக் கருப்பொருள் கூறுகின்றார்; உரிப்பொருள் யாண்டுக் கூறினார் என ஐயம் நிகழும்; அது விடுத்தல் என்க. [சுட்டு நீண்டுநின்றது.]

(கக)



உ0. தெய்வ முணவே மாமரம் புட்பறை

செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவுங் கருவென மொழிப.

இது, கருப்பொருள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—தெய்வம் உணா மா மரம் புள் பறை செய்தி யாழின்பகுதியொடு தொகைஇ-தெய்வம் முதலாகச் சொல்லப்பட்டனவும், அவ்வகை பிறவும் கரு என மொழிப-அத்தன்மைய பிறவும் கருப்பொருள் என்று கூறுப.

அவையாவன முதற்பொருட்கண் தோன்றும் பொருள்கள். 'மாயோன் மேய காடுறை யுலகம்' [அகத்-ரு] என்றதனுன் முல்லைக்குத் தெய்வம் கண்ணன். 'காடுறை யுலகம்' என்றதனுனும் 'காரு மாலையும் முல்லை' [அகத்-சு] என்றதனுனும் காட்டினும் கார்காலத்தினும் மாலைப்பொழுதினும் நிகழ்பவை கொள்க. "எந்நில மருங்கிற் பூவும் புள்ளும், அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்" [அகத்-உக] என்றதனுலும், நிலமும் காலமும் பற்றிவருவன கருப்பொருள் என்பது உணர்க. உணவு-வரகும் முதிரையும். மா-மானும் முயலும். மரம்-கொன்றையும் குருந்தும் புதலும். புள்-கானங்கோழி. பறை-ஏறுகோட்பறை. செய்தி-நிரைமேய்த்தல். யாழின்பகுதி யென்பது பண். அது சாதாரி. பிறவும் என்றதனுல், பூ-முல்லையும் பிடவும் தளவும்; நீர்-கான்யாறு. பிறவும் இந்நிகரன கொள்க.

குறிஞ்சிக்குத் தெய்வம் முருகவேள். மைவரையுலகமும் கூதிர்காலமும் நள்ளிருளும் கூறினமையான், அந்நிலத்தினும் காலத்தினும் நிகழ்பவை கொள்க. உணவு-தினையும் ஐவனமும் வெதிர்நெல்லும். மா-யானையும் புலியும் பன்றியும் கரடியும். மரம்-வேங்கையும் கோங்கும். புள் - மயிலும் கிளியும். பறை - வெறியாட்டுப்பறையும் தொண்டகப்பறையும். செய்தி-தேனழித்தல். பண்-குறிஞ்சி. பிறவும் என்றதனுல், பூ-

வேங்கைப்பூவும் காந்தட்பூவும் குறிஞ்சிப்பூவும் ; நீர்-சுனைநீரும் அருவிநீரும். பிறவும் அன்ன.

பாலைக்கு நிலம் ஓதாது வேனிற்காலமும் நண்பகலும் ஓதினமையானும், "முல்லை யுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து, நல்லியல் பிழந்து நடுங்கு துயருறுத்துப், பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்" [சிலப்-காடுகாண்-சுச-சுஎ.] எனப் பிற சான்றோர் செய்யுளகத்து வருதலானும், இந்நிலங்களில் வேனிற்காலத்து நிகழ்வன கருப்பொருளாகக் கொள்ளப்படும்.

தெய்வம்-கொற்றவை. உணவு-ஆறலைத்தலான் வரும் பொருள். மா- வலியழிந்த யானையும், வலியழிந்த புலியும், வலியழிந்த செந்நாயும். மரம்-பாலை, இருப் பை, கள்ளி, சூரை. புள்-எருவையும் பருந்தும்.
பறை-ஆறலைப்பறையும், சூறைகொண்ட பறையும். செய்தி-ஆறலைத்தல். பண்-பாலை. பிறவும் என்றதனால், பூ-மராம்பூ ; நீர்- அறுநீர்க் கூவலும் அறுநீர்ச்சுனையும். பிறவும் இந்நிகரன கொள்க.

மருதத்திற்குத் தெய்வம் இந்திரன். 'தீம்புனலுலகம்' [அகத்-ரு] எனவும் 'வைகறை விடியல்' [அகத்-கூ] எனவும் ஓதினமையால் அவ்விடத்தினும் காலத்தினும் நிகழ்பவை கொள்க. உணவு-நெல். மா-எருமையும் நீர்நாயும். மரம்-மருதும் காஞ்சியும். புள்-அன்னமும் அன்றிலும். பறை-நெல்லரிபறை.

செய்தி-உழவு. பண்-மருதம். பிறவும் என்றதனல், பூ-தாமரையும் கழுநீரும் ; நீர்-ஆற்றுநீரும் பொய்கை நீரும். பிறவும் அன்ன.

நெய்தற்குத் தெய்வம் வருணன். 'மணலுலகம்' [அகத்-௫] என்றதனுனும், 'எற் பாடு' [அகத்-௰] என்றதனுனும், ஆண்டு நிகழ்பவை கொள்க. உணவு-உப்பு விலையும் மீன் விலையும். மா-கராவும் சுறவும். மரம்-புன்னையும் கைதையும். புள்-கடற்காக்கை.



பறை-நாவாய்ப் பறை. செய்தி-மீன்படுத்தலும் உப்புவிளைத்தலும். பண்-செவ்வழி. பிற வும் என்றதனல், பூ-நெய்தல் ; நீர்-கேணி நீரும் கடல் நீரும். பிறவும் அன்ன. (௨௦)

௨௧. எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்
அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்
வந்த நிலத்தின் பயத்த வாகும்.

இது, மேலதற்கு ஓர் புறனடை உணர்த்துதல்

நுதலிற்று.

இ-ள் :—எ நிலமருங்கின் பூவும் புள்ளும்-யாதானும் ஓர் நிலத்திற் குரிய பூவும் புள்ளும், அ நிலம் பொழுதொடு வாராவாயினும்-அந்நிலத்தொடும் பொழுதொடும் வந்தில வாயினும், வந்த நிலத்தின் பயத்த ஆகும்-வந்த நிலத்தின் பயத்த வாகும்.

"வந்ததுகொண்டு வாராதது முடித்தல்" [மரபு-கக0] என்பதனால் சிறுபான்மை ஏனையவும் வந்தவழிக் கண்டுகொள்க. இவ்வாறு வருவன திணைமயக்கம் அன்றென்ற வாறு.

(உக)

உஉ. பெயரும் வினையுமென் றாயிரு வகைய
திணைதொறு மரீஇய திணைநிலைப் பெயரே.

இதுவும், கருப்பொருளின் பாகுபாடாகிய மக்கட்டிறம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—பெயரும் வினையும் என்று இருவகைய-குலப்பெயரும் தொழிற்பெயரும் என அவ்விருவகைப்படும், திணைதொறும் மரீஇய திணைநிலைப்பெயர்-திணைதொ

றும் மருவிப்போந்த திணைநிலைப்பெயர்.

திணைநிலைப்பெயர் என்றதனான் அப்பெயருடையார் பிற நிலத்து இலர் என்று
கொள்ளப்படும். அதனானே எல்லா நிலத்திற்கும் உரியராகிய மேன்மக்களை ஒழித்து
நிலம்பற்றி வாழும் கீழ்மக்களையே குறித்து ஓதினார் என்று கொள்க. பெயர் என்றத
னால் பெற்ற தென்னை? மக்கள் என அமையாதோ? எனின், மக்களாவார் புள்ளும்
மாவும்போல வேறு பகுக்கப்படார், ஒரு நீர்மைய ராதலின். அவரை வேறுபடுக்குங்கால்
திணைநிலைப்பெயரா னல்லது வேறுபடுத்தல் அருமையின், பெயர் என்றார். [சுட்டு
நீண்டு நின்றது. ஏகாரம்-ஈற்றசை. திணைநிலப்பெயர் எனவும் பாடம்.] (உஉ)

உங. ஆயர் வேட்டுவ ராடூஉத் திணைப்பெயர்

ஆவயின் வரூஉங் கிழவரு முளரே.

இது, நிறுத்தமுறையானே முல்லைக்குரிய மக்கட்பெயர் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—ஆடூஉ திணைப்பெயர் ஆயர் வேட்டுவர்-ஆண்மக்களைப்பற்றி வரும் திணைப்

பெயர் ஆயர் எனவும் வேட்டுவர் எனவும் வரும். அ வயின்
வரும் கிழவரும் உளர்-அவ்
விடத்து வரும் கிழவரும் உளர்.

ஆயர் என்பார் நிரைமேய்ப்பார். வேட்டுவர்
என்பவர் வேட்டைத் தொழில்
செய்வார். அஃது எயினர் என்னும் குலப்பெய
ருடையார்மேல் தொழிற்பெயராகி
வந்தது. "வந்தது கொண்டுவாராதது முடித்தல்"
[மறபு-ருகம] என்பதனுன் ஆய்ச்சி
யர் எனவும் கொள்க. அவ்விருதிறத்தாரும் காடுபற்றி
வாழ்தலின் அந்நிலத்தின் மக்க
ளாயினர். அவ்வயின் வரூஉம் கிழவர் இருவகையர்,

அந்நிலத்தை ஆட்சிபெற்றோரும்
அந்நிலத்து உள்ளோரும் என. குறும்பொறைநாடன்
என்பது போல்வன ஆட்சிபற்றி
வரும். பொதுவன் ஆயன் என்பன குலம்பற்றி வரும்.
[சுட்டு நீண்டிசைத்தது. ஏகாரம்
ஈற்றசை.]

உச. ஏனோர் மருங்கினு மெண்ணுங் காலை
ஆனு வகைய திணைநிலைப் பெயரே.

இது குறிஞ்சி முதலாய திணைக்கண் வரும் திணைநிலைப்பெயர் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—ஏனோர் மருங்கினும் எண்ணும் காலை-ஏனை நிலத்துள்ள மக்கண்மாட்டும் ஆராயுங் காலத்து, ஆன் அ வகைய திணைநிலைப்பெயர்-அவ்விடத்து அவ்வகைய திணைநிலைப்பெயர்.

என்றது, திணைதொறும் குலப்பெயரும் தொழிற்பெயரும் கிழவர்பெயரும் வரும் என்றவாறு. ஆன் என்பது அவ்விடம்; அ என்னும் சுட்டு நீண்டிசைத்தது. அவை வருமாறு :—குறிஞ்சிக்கு மக்கட்பெயர், குறவன் குறத்தி என்பன: தலைமக்கட்பெயர், மலைநாடன் வெற்பன் என்பன. பாலைக்கு மக்கட்பெயர், எயினர் எயிற்றியர் என்பன: தலைமக்கட் பெயர், மீளி விடலை என்பன. மருதத்திற்கு மக்கட்பெயர், உழவர் உழத்தியர் என்பன: தலைமக்கட்பெயர் ஊரன் மகிழ்நன் என்பன. நெய்தற்கு

மக்கட்பெயர், நுளையர் நுளைச்சியர் என்பன:
தலைமக்கட்பெயர் சேர்ப்பன் துறைவன் கொண்கன்
என்பன. பிறவும் அன்ன. [ஏகாரம் ஈற்றசை.]

"கைக்கிளை முதலா" [அகத்-க] என்னும் சூத்திரம் முதலாக இத்துணையும் கூறப் பட்டது, நடுவணைந்திணை நிலத்தானும் காலத்தானும் கருப்பொருளானும் உரிப் பொருளானும் நிலமக்களானும் தலைமக்களானும் வரும் எனவும், அவை இலக்கணநெறி யானும் வழக்குநெறியானும் வரும் எனவும், கைக்கிளை பெருந்திணை உரிப்பொருளான் வரும் எனவும், அகத்திணை ஏழிற்கும் இலக்கணம் ஓதியவாறு.

உதாரணம்:

முல்லைத்திணைக்குச் செய்யுள் :—

> "முல்லை வைந்நுனை தோன்ற வில்லமொடு
> பைங்காற் கொன்றை மென்பிணி யவிழ
> இரும்பு திரித்தன்ன மாயிரு மருப்பிற்
> பரலவ லடைய் விரலை தெறிப்ப
> மலர்ந்த ஞாலம் புலம்புபுறக் கொடுப்பக்
> கருவி வானங் கதழுறை சிதறிக்
> கார்செய் தன்றே கவின்பெறு கானம்
> குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி
> நரம்பார்ப் பன்ன வாங்குவள் பரிய
> பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த

தாதுண் பறவை பேதுற வஞ்சி
மணிநா வார்த்த மாண்வினைத் தேரின்
உதுக்காண் டோன்றுங் குறும்பொறை

நாடன்

கறங்கிசை விழவி னுறந்தைக் குணாது
நெடும்பெருங் குன்றத்து மன்ற காந்தட்
போதவி ழலரி நாறும்

ஆய்தொடி யரிவைநின் மாணலம் படர்ந்தே." [அகம்-சு]

இதனுள், முல்லைக் குரித்தாகிய நிலமும் காலமும் கருப்பொருளும், இருத்தலாகிய உரிப்பொருளும் வந்தவாறு கண்டுகொள்க.



" இல்லொடு மிடைந்த கொல்லை முல்லைப்
பல்லான் கோவலர் ஞ்பையு ளாம்பல்
புலம்புகொண் மாலை கேட்டொறுங்
கலங்குங்கொ லளியணங் காத லோளே."

என்பதும் அது.

" திருநகர் விளங்கு மாசில் கற்பின்
அரிமதர் மழைக்கண் மாஅ யோளொடு

நின்னுடைக் கேண்மை யென்றோ முல்லை
இரும்பல் கூந்த னூற்றமு
முருந்தேர் வெண்பல் லொளியுநீ பெறவே."

இது, முதற்பொருள் வாராது கருப்பொருளானும் உரிப்பொருளானும் முல்லையாயின வாறு.

" கரந்தை விரைஇய தண்ணறுங் கண்ணி
இளைய ரேவ வியங்குபரி கடைஇப்
பகைமுனை வலிக்குந் தேரொடு
வினைமுடித் தனர்நங் காத லோரே."

இது, முதலும் கருவும் இன்றி உரிப்பொருளான் முல்லையாயிற்று.

" கதிர்கை யாக வாங்கி ஞாயிறு
பைதறத் தெறுதலிற் பயங்கண் மாறி
வீடுவாய்ப் பட்ட வியன்கண் மாநிலம்
காடுகவி னெய்தக் கணமழை பொழிதலிற்
பொறிவரி யினவண் டார்ப்பப் பலவுடன்
நறுவீ முல்லையொடு தோன்றி தோன்ற
வெறிவென் றன்றே வீகமழ் கானம்
எவன்கொன் மற்றவ னிலையென மயங்கி
இரும்பனி யுறைக்குங் கண்ணொ டினையாங்
கின்னா விறைவி தொன்னலம் பெறூஉம்
இதுமற் காலங் கண்டிசிற் பகைவர்

மதின்மூடு கதவ முருக்கிய மருப்பிற்
கந்துகா லொசிக்கும் யானை
வெஞ்சின வேந்தன்
வினைவிடப் பெறினே" [அகம்-கசுரு.] இது, பிரிதற்
பகுதியாகிய பாசறைப்புலம்ப லெனினும் நிலம்பற்றி
முல்லையாயிற்று.

"மலிதிரை யூர்ந்துதண் மண்கடல் வெளவலின்"
[கலி-முல்லை-ச] என்னும் முல்லைக்கலி
புணர்தற்பொருண்மைத்தாயினும் முல்லைக்குரிய
கருப்பொருளான் வருதலின் முல்லையாயிற்று. பிறவும் அன்ன.

குறிஞ்சித்திணைக்குச் செய்யுள்:—

"விடிந்த ஞாலம் கவின்பெறத் தலைஇ
இடிந்த வாய வெவ்வங் கூர
நிலமலி தண்டுளி தவிராது புலந்தாய்



நீர்மலி கடாஅஞ் செருக்கிக் கார்மலைந்து

கனைபெயல் பொழிந்த நள்ளென் யாமத்து
மண்புரை மாசுணம் விலங்கிய நெறிய
மலைஇ மணந்த மயங்கரி லாரலிற்
றிலைபொலிந் திலங்கு வைவே லேந்தி
இரும்பிடி புணர்ந்த செம்மல் பலவுடன்
பெருங்களிற் றுத் தொழுதியோ

டெண்குநிரை யிரிய

நிரம்பா நெடுவரை தத்திக் குரம்பமைந்
தீண்டுபெயி லெறும்பி னிழிதரு மருவிக்
குண்டுநீர் மறுசுழி நீந்தி யொண்டொடி
அலமரல் மழைக்க ணல்லோள் பண்புநயந்து
சுரன்முத லாரிடை நீந்தித் தந்தை
வளமனை யொருசிறை நின்றனே மாகத்
தலைமனைப் படலைத் தண்கமழ் நறுந்தா
தூதுவண் டிமிரிசை யுணர்ந்தனள் சீறடி
அரிச்சிலம் படக்கிச் சேக்கையி னியலிச்
செறிகினை நல்லி லெறிகத வுயவிக
காவலர் மடிபத நோக்கி யோவியர்
பொறிசெய் பாவையி னறிவுதளர் பொல்கி
அளக்க ரன்ன வாரிரு டெமிய
விளக்குநிமிர் பனைய மின்னிப் பாம்பு
படவரைச் சிமையக் கழலுறு மேரே
டிணைப்பெய லின்னலங் கங்குலும் வருபவோ

வென் றுதன்

மெல்விரல் சேப்ப னொடியின ணல்யாழ்
வடியுறு நரம்பிற் றீவிய மிழற்றித்
திருகுபு முயங்கி யோளே வென்வேற்
களிறுகெழு தானைக் கழலொடி மலையன்
ஒளிறுநீ ரடுக்கங் கவைஇய காந்தள்
மணங்கமழ் முள்ளூர் மீமிசை

யணங்குகடி கொண்ட மலரினுங் கமழ்ந்தே."

இது, முதலும் கருவும் புணர்தலாகிய உரிப்பொருளும் வந்த குறிஞ்சிப்பாட்டு.

"நறைபரந்த சாந்த மறவெறிந்து நாளால்

உறையெதிர்ந்து வித்தியஏ

னேனற்—பிறையெதிர்ந்து

தாமரைபோல் வாண்முகத்துத் தாழ்குழலீர் காணீரோ

ஏமரை போந்தன வீண்டு."—[திணைமாலை நூற்-க]

இது, முதற்பொருள் இன்றிக் கருப்பொருளும் உரிப்பொருளும் வந்தமையாற் குறிஞ்சித் திணையாயிற்று.

"முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தன்ளே
மலைய னொள்வேற் கண்ணி
முலையும் வாரா முதுக்குறைந் தனளே."

இஃது, உரிப்பொருள் ஒன்றுமே வந்த குறிஞ்சிப்பாட்டு.



அகத்திணையியல்

"பருவ மென்றினை பாலும் பெய்தன
கருவிரற் கிள்ளை கடியவும் போகா
பசுமூ தந்திக் கடைவன வாடப்
பாசிப் பக்கப் பனிநீர்ப் பைஞ்சுனை
விரியிதழ்க் குவளை போல வில்லிட்
டெரிசுடர் விசும்பி னேறெழுந்து முழங்கக்
குன்றுபனி கொள்ளுஞ் சாரல்

இன்றுகொ ரேழி யவர்சென்ற நாட்டே."

இஃது இருத்தற்பொருண்மைக்கண் வந்ததேனும்,

முதற்பொருளானும் கருப்பொரு ளானும் குறிஞ்சியாயிற்று.

"வாடாத சான்றோர் வரவெதிர்

கொண்டிராய்க்

கோடாது நீர்கொடுப்பி னல்லது—கோடா
எழிலு மிலையு மிரண்டிற்கு மூங்கீர்ப்
பொழிலும் விலையாமோ போந்து."

[திணைமாலை நாற்-கடு]

இது கற்பிற் புணர்வு; பொருளாற் குறிஞ்சியாயிற்று.

"படாஅ தோழி யெங்கண்ணே கொடுவரி
கொன்முரண் யானை கனவு
நன்மலை நாட னசையி னானே."

இஃது இரங்கற்பொருண்மையேனும் முதற்பொருளானும்
கருப்பொருளானும் குறிஞ் சியாயிற்று. பிறவும் அன்ன.

பாலைத்திணைக்குச் செய்யுள் :—

"அறியாய் வாழி தோழி யிருளற
விசும்புடன் விளக்கும் விரைசெலற் றிகிரிக்
கடுங்கதி ரெறித்த விடுவாய் நிறைய
நெடுங்கான் முருங்கை வெண்பூத் தாஅய்
நீரற வறந்த நிரம்பா நீளிடை
வள்ளெயிற்றுச் செந்நாய் வருந்துபசிப்
பிணவொடு
கள்ளியங் காட்ட கடத்திடை யுழிஞ்சில்
உள்ளூன் வாடிய சுரிமூக்கு நொள்ளை

பொரியரை புதைத்த புலம்புகொ ளியவின்
விழுத்தொடை மறவர் வில்லிட வீழ்ந்தோர்
எழுத்துடை நடுக லின்னிழல் வதியும்
அருஞ்சுரக் கவலை நீந்தி யென் றும்
இல்லோர்க் கில்லென் றியைவது கரத்தல்
வல்லார் நெஞ்சம் வலிப்ப நம்மினும்
பொருளே காதலர் காதல்
அருளே காதல ரென் றி நீயே." [அகம்-ருக]

இதனுள் பாலைக்குரிய முதற்பொருளும் கருப்பொருளும் பிரிவும் வந்தவாறு கண்டு கொள்க.

3



" வளங்கெழு திருநகர்ப் பந்துசிறி
தெறியினும்
இளந்துணை யாயமொடு கழங்குட னாடினும்
உயங்கின் றன்னையென் மெய்யென்

றசைஇ

மயங்கு வியர்பொறித்த நுதல டண்ணென
முயங்கினள் வதியு முன்னே யினியே
தொடிமாண் சுற்றமு மெம்மு முள்ளாள்
நெடுமொழித் தந்தை யருங்கடி நீவி
நொதும லாள னெஞ்சுறப் பெற்றவென்
சிறுமுதுக் குறைவி சிலம்பார் சீறடி
வல்லகொல் செல்லத் தாமே கல்லென
ஊரெழுந் தன்ன வுருகெழு செலவின்
நீரி லத்தத் தாரிடை மடுத்த
கொடுங்கோ லுமணர் பகடுதெழி

தெள்விளி

நெடும்பெருங் குன்றத் திமிழ்கொள

வியம்புங்

கருங்கதிர் திருகிய வேய்பயில் பிறங்கற்
பெருங்களி றுரிஞ்சிய மண்ணரை யாஅத்
தருஞ்சுரக் கவலை யதர்படு மருங்கின்
ஈழுரை யிலவத் தூழழி பன்மலர்
விழவுத் தலைக்கொண்ட பழவிறன் மூதூர்
நெய்யுமிழ் சுடரிற் கால்பொரச் சில்கி
வைகுறு மீனிற் றோன்றும்
மைபடு மால்வரை விலங்கிய சுரனே."

[அகம்-கள]

இஃது உடன்போக்கின்கண் வந்தது.

" நாளு நாளு மாள்வினை யழுங்க
இல்லிருந்து மகிழ்வோர்க் கில்லையாற் புகழெ‌ன

ஒண்பொருட் ககல்வர்நங் காதலர்
கண்பனி துடையினித் தோழி நீயே."

[சிற்றடக்கம்]

இது பிரிவுப்பொருளாற் பாலையாயிற்று.

" உயர்கரைக் கானியாற்

றவிர றலகன் றுறை

வேனிற் பாதிரி விரிமலர் குவைஇத்
தொடலை தைஇய மடவரன் மகளே
கண்ணினுங் கதவநின் முலையே
முலையினுங் கதவநின் றடமென்

றோளே." [ஐங்குறு-கூகூக] இது
புணர்தற்பொருளாயினும் கருப்பொருளாற் பாலையாயிற்று.

" சிலைவிற் பகழிச் செந்துவ ராடை"

[ஐங்குறு-கூகூங] என்னும் பாட்டினுள்
" கொலைவி லெயினர் தங்கை" எனப்

புணர்தற்பொருண்மை வந்ததாயினும் பாலைக்
குரிய மக்கட்பெயர் கூறுதலிற் பாலையாயிற்று.
பிறவும் அன்ன.

மருதத்திணைக்குச் செய்யுள் :—

"சேற்றுநிலை முனைஇய செங்கட்

காரான்.

ஊர்மடி கங்குலி னோண்டளை பரீஇக்



கூர்முள் வேலி கோட்டி னீக்கி
நீர்முதிர் பழனத்து மீனுட னிரிய
அந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை
வண்டூது பனிமல ராரு மூர
யாரை யோநிற் புலக்கேம் வாருற்
றுறையிறந் தொளிர்வருந் தாழிருங் கூந்தற்
பிறரு மொருத்தியை யெம்மனைத் தந்து
வதுவை யயர்ந்தனை யென்ப வஃதியாங்

கூடுறேம் வாழிய ரெந்தை செறுநர்
களிறுடை யருஞ்சமந் ததைய நூறும்
ஒளிறுவாட் டானைக் கொற்கைச் செழியன்
பிண்ட நெல்லி னள்ளூ ரன்னவெம்
ஒண்டொடி நெகிழினு நெகிழ்க
சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே." [அகம்-சசு]

இதனுள் மருதத்திற்கு ஓதிய நிலனும் பொழுதும் கருப்பொருளும் ஊடற்பொருண் மையும் வந்தன. "தாமரை வண்டூது பனிமல ராரூமுர" என்றமையான் வைகறை வந்தமை அறிக.

"பூங்கொடி மருங்கி னெங்கை கேண்மை
முன்னும் பின்னு மாகி
இன்னும் பாண னெம்வயி னோனே."

இஃது உரிப்பொருளால் மருதமாயிற்று.

"ஓரை யாய மறிய வூரன்
நல்கினன் றந்த நறும்பூந் தண்டழை
மாறுபடி னெவனோ தோழி

வீறுசிறந்து

நெடுமொழி விளங்குந் தொல்குடி
வடுநாம் படுத லஞ்சுது மெனவே."

இது புணர்தற்பொருண்மையேனும்,

திணைநிலைப்பெயரால் மருதமாயிற்று.

பிறவும் அன்ன.

**நெய்தல் திணைக்குச் செய்யுள் :—**

"கானல் மாலைக் கழிப்பூக் கூம்ப
நீனிறப் பெருங்கடல் பாடெழுந்
தொலிப்ப
மீனார் குருகின் மென்பறைத் தொழுதி
குவையிரும் புன்னைக் குடம்பை சேர
அசைவண் டார்க்கு மல்குறு காலைத்
தாழை தளரத் தூக்கி மாலை
அழிதக வந்த கொண்டலொடு
கழிபடர்க்
காமர் நெஞ்சங் கையறு பினையத்
துயரஞ் செய்துநம் மருளா ராயினும்
அறாஅ லியரோ வவருடைக் கேண்மை



அளியின் மையி னவணுறை வுமுனை இ
வாரற்க தில்ல தோழி கழனி

வெண்ணெல் லரிஞர் பின்றைத் ததும்புந்
தண்ணுமை வெரீஇய தடந்தா ளாரை
செறிமடை வயிரிற் பிளிற்றிப் பெண்ணை
அகம்டற் சேக்குந் துறைவன்
இன் றுயின் மார்பிற் சென்றவென் னெஞ்சே." [அகம்-சய]

இது முதலும் கருவும் இரங்குதற் பொருண்மையும் வந்த நெய்தற்பாட்டு.

" அங்கண் மதிய மரவின்வாய்ப்
பட்டெனப்
பூசல் வாயாப் புலம்புமனைக் கலங்கி
ஏதின் மாக்களு நோவர் தோழி
என்று நோவா ரில்லைத்
தெண்கடற் சேர்ப்ப னுண்டவென்
னலக்கே."

இது திணைநிலைப்பெயரானும் இரங்கற்பொருண்மையானும் நெய்தலாயிற்று.

" கங்குலும் பகலுங் கலந்துக வொன்றி
வன்புறை சொல்லி நீத்தோ
ரன்புறு செய்தி யுடையரோ மற்றே."

இஃது இரங்கற்பொருண்மையான் நெய்தலாயிற்று.

" சுறவுப்பிற ழிருங்கழி நீந்தி வைகலு

மிரவுக்குறிக் கொண்கனும் வந்தனன்
விரவுமணிக் கொடும்பூண் விளங்கிழை யோயே." [சிற்றடக்கம்]

இது புணர்தற்பொருளாயினும் நிலத்தான் நெய்தலாயிற்று.

"கோட்டக மலர்ந்த கொழுங்கொடி யடம்பி
னற்றுறை யணிநீர்ச் சேர்ப்பவிப்
பொற்றொடி யரிவையைப் போற்றினை யளிமே."

இது பாலைக்குரித்தாகிய பிரிவுநிமித்தமாயினும் நிலத்தான் நெய்தலாயிற்று. (உச)

உரு. அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினுங்
கடிவரை யிலபுறத் தென்மனார் புலவர்.

இது, நடுவணைந்திணைக் குரிய தலைமக்களைக் கூறி, அதன் புறத்தவாகிய கைக்கிளை பெருந்திணைக்குரிய மக்களை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—அடியோர் பாங்கினும் வினைவலர்

பாங்கினும்-அடித்தொழில் செய்வார் பக்கத்தினும்
வினைசெய்வார் பக்கத்தினும், கடிவரை இல (மேற்
சொல்லப்பட்ட புணர் தல் முதலான பொருளைக் கூறல்)
கடிந்து நீக்கும் நிலைமையில்லை, புறத்து என்மனார்
புலவர்-ஐந்திணைப் புறத்தவாகிய கைக்கிளை பெருந்திணைக்கண்
என் று சொல்வர் புலவர்.

'புணர்தல் முதலான பொருள்' என்பது
அதிகாரத்தான் வந்தது. 'வினைசெய் வார்' என்பதனல்
அடியரல்லாதார் என்பது கொள்க. இவர் அகத்திணைக்கு
உரியரல்ல ரோ வெனின், அகத்திணையாவது அறத்தின்
வழாமலும் பொருளின் வழாமலும் இன் பத்தின் வழாமலும்
இயலல்வேண்டும்; அவை யெல்லாம் பிறர்க்குக் குற்றேவல்
செய்



வார்க்குச் செய்தல் அரிதாகலானும், அவர் நாணுக்
குறைபாடுடைய ராகலானும், குறிப் பறியாது
வேட்கைவழியே சாரக் கருதுவாராகலானும், இன்பம்
இனிது நடத்துவார் பிறரேவல் செய்யாதார் என்பதனுனும்,
இவர் புறப்பொருட்குரியராயினர் என்க எனவே,

இவ்வெழுவகைத் திணையும் அகம் புறம் என இருவகையாயின.

"என்னோற் றனைகொல்லோ,
நீரு ணிழல்போ னுடங்கிய மென்சாயல்
ஈங்குச் சுருங்கி,
இயலுவாய் நின்னொ டுசாவுவெ னின் றீத்தை

;

அன்னையோ, காண்டகை யில்லாக் குறளுழிப் போழ்தினன்
ஆண்டலைக் கீன்ற பறழ்மகனே நீயெம்மை
வேண்டுவ லென்று விலக்கினை

நின் போல்வார்

தீண்டப் பெறுபவோ மற்று ;

மாண்ட, எறித்த படைபோன் முடங்கி மடங்கி
நெறித்துவிட் டன்ன நிறையோரா

லென்னைப்

பொறுக்கல்லா நோய்செய்தாய் போறி

நிறுக்கல்லேன்

நீநல்கி னுண்டென் னுயிர் ;

குறிப்புக்காண், வல்லுப் பலகை யெடுத்து நிறுத்தன்ன
கல்லாக் குறளே கடும்பகல் வந்தெம்மை
இல்லத்து வாவெனக் கைகொளிய

வெல்லாநின்

பெண்டி ருளர்மன்னோ கூறு ;

நல்லாய்கேள், உக்கத்து மேலு நடுவுயர்ந்து வாள்வாய
கொக்குரித் தன்ன கொடுமேடாய்
நின்னையான்
புக்ககலம் புல்லினெ னெஞ்சூன் றும்
புறம்புல்லி
னக்குளுத்துப் புல்லலு மாற்றே னருளீமோ
பக்கத்துப் புல்லச் சிறிது;
போசித்தை, மக்கண் முரியேனீ மாறினித் தொக்க
மரக்கோட்டஞ் சேர்ந்தெழுந்த பூங்கொடி
போல
நிரப்பமில் யாக்கை தழீஇயின ரெம்மைப்
புரப்பேமென் பாரும் பலராற் பரத்தையன்
பக்கத்துப் புல்லீயா யென்னுமாற் றொக்க
உழுந்தினுந் துவ்வாக் குறுவட்டா நின்னின்
இழிந்ததோ கூனின் பிறப்பு;
கழிந்தாங்கே, யாம்வீழ்து மென்றுதன் பின்செலவு
முற்றீயாக்
கூனி குழையுங் குழைவுகாண்;
யாமை, எடுத்து நிறுத்தற்றூற் றேளிரண்டும் வீசி,
யாம்வேண்டே மென்று விலக்கவு
மெம்வீழுங்
காமர் நடக்கு நடைகாண் கவர்கணைச்

சாமனார் தம்முன் செலவுகாண் ;
ஓஒகாண், நம்மு ணகுதற் றொடீஇயர் நம்முணும்
உசாவுவங் கோனடிதொட் டேன் ;



ஆங்காக, சாயலின் மார்ப வடங்கினேன் ஏஎ
பேயும் பேயுந் துள்ள லுறுமெனக்

கோயிலுட் கண்டார் நகாஅமை வேண்டுவல்
தண்டாத் தகடுருவ வேறாகக் காவின்கீழ்ப்
போத ரகடாரப் புல்லி முயங்குவேம்
துகடீர்பு காட்சி யவையத்தா ரோலை
முகடுகாப் பியாத்துவிட் டாங்கு."

[கலி-மரு-உக]

இதனுள் ஒருவரையொருவர் இழித்துக் கூறினமையான் அடியார் என்பதூஉம் மிக்க காமத்தின் வேறுபட்டு வருதலாற் பெருந்திணைப்பாற் படும் என்பதூஉம் கண்டு கொள்க. இதுதானே கைக்கிளைக்கும் உதாரணமாம். வினைவலர்மாட்டு வருவன வந்தவழிக்

கண்டுகொள்க.

(உரு)

உசு. ஏவன் மரபி னேனோரு முரியர்
ஆகிய நிலைமை யவரு மன்னர்.

இதுவும், கைக்கிளை பெருந்திணைக்குரிய தலைமக்களை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:—ஏவல் மரபின் ஏனோரும்

உரியர்-(மேற்சொல்லப்பட்ட அடியோரும், வினை வலரும்) ஏவுதல் மரபையுடைய ஏனையோரும் (கைக்கிளை பெருந்திணைக்கு) உரியர் ; அவரும் ஆகிய நிலைமை அன்னர்-அவரும் உரியராகிய நிலைமை அத்தன்மைய ராகலான்.

அவரு மாகிய நிலைமை என மொழிமாற்றுக. கைக்கிளை பெருந்திணை என்பது அதிகாரத்தான் வந்தது. இதனாற் சொல்லியது தலைமக்களும் கைக்கிளை பெருந்திணைக்கு உரியராவர் என்பதாம். உரியராயினவாறு அறம்பொருள் இன்பங்கள் வழுவ மகளிரைக் காதலித்தலான் என்றவா றாயிற்று.

"ஏஎ யிஃதொத்த னாணிலன் றன்னொடு
மேவேமென் பாரையு மேவினன்

கைப்பற்றும்

மேவினு மேவாக் கடையு மஃதெல்லா
நீயறிதி யானஃ தறிகல்லேன் பூவமன்ற
மெல்லிணர் செல்லாக் கொடியன்னுய்

நின்னையான்

புல்லினி தாகலிற் புல்லினே னெல்லா
தமக்கினி தென்று வலிதிற் பிறர்க்கின்னு

செய்வது நன்றாமோ மற்று;

சுடர்த்தொடீ, போற்ருய் களைநின்

முதுக்குறைமை போற்றிக்கேள்
வேட்டார்க் கினிதாயி னல்லது

நீர்க்கினிதென்

றுண்பவோ நீருண் பவர்;
செய்வ தறிகல்லேன் யாதுசெய்

வேன்கொல்லோ

ஐவா யரவி னிடைப்பட்டு நைவாரா
மையின் மதியின் விளங்கு முகத்தாரை
வெளவிக் கொளலு மறனெனக் கண்டன்று;
அறனு மதுகண் டற்ருயிற் றிறனின்றிக்
கூறுஞ்சொற் கேளா னலிதரும் பண்டுநாம்

வேறல்ல மென்பதொன் றுண்டா

லவனொடு

மாறுண்டோ நெஞ்சே நமக்கு."

[கலி-குறிஞ்-உசு]

இதனுள் "வௌவிக் கொளலு மறனெனக் கண்டன்று" எனவும், "நீர்க்கினி
தென் றுண்பவோ நீருண்பவர்" எனவும் தலைமகன் கூறுதலானும், தலைமகள் முன் இழித்
துரைத்தலானும், ஊடியுணர்வாள்போல உடன்பட்டமையானும், இஃது உயர்ந்தோர்
மாட்டு வந்த கைக்கிளை. பெருந்திணை வந்தவழிக் கண்டுகொள்க. (உசு)

உஎ. ஓதல் பகையே தூதிவை பிரிவே.

மேல் கைக்கிளை முதலாக எழுதிணையு முணர்த்தினார், அவற்றுள் நிலம் பகுக்கப்
பட்ட முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்னும் நான்கு திணையும் களவு கற்பு என்

னும் இருவகைக் கைகோளினும் நிகழ்தலின் அவற்றை யொழித்து நிலம் பகுக்கப்படாத
கைக்கிளை பெருந்திணையும் பாலையும் இவ்வோத்தினுள் உணர்த்துகின்றன ராதலின்,
அவற்றுள் பாலைக் குரித்தாகிய பிரிவு உணர்த்துவான் பிரிவுக்கு நிமித்தம் ஆமாறு உண
ர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—ஓதல் பகை தூது இவை பிரிவு-ஓதலும் பகையும் தூதும் என்று சொல்
லப்பட்ட இத்தன்மைய பிரிவிற்கு நிமித்தமாம்.
'இவை' என்பது இத்தன்மைய என்னும் பொருள்பட நின்றது. நிமித்தம்
என்பது உய்த்துணர்ந்து கொள்ளக் கிடந்தது. ஓதற்குப் பிரிதலாவது, தமது நாட்ட
கத்து வழங்காது பிறநாட்டகத்து வழங்கும் நூல் உளவன்றே, அவற்றினைக் கற்றல்
வேண்டிப் பிரிதல். பகையிற் பிரிதலாவது மாற்றுவேந்தரொடு போர்கருதிப் பிரி
தல். தூதிற்குப் பிரிதலாவது இருபெரு வேந்தரைச் சந்து செய்தற்பொருட்டுப் பிரி
தல். [முதல் ஏகாரம் அசைநிலை. இரண்டாம் ஏகாரம் ஈற்றசை.] (உஎ)

ஓதலுந் தூது முயர்ந்தோர் மேன.

இது மேற்கூறப்பட்டவற்றுள் ஓதற்கும் தூதுபோதற்கும் உரிய தலைமக்களை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—அவற்றுள்-மேற் கூறப்பட்டவற்றுள், ஓதலும் தூதும்-ஓதல் காரணமாகப் பிரியும் பிரிவும் தூதாகிப் பிரியும் பிரிவும், உயர்ந்தோர்மேன-நால்வகை வருணத்தினும் உயர்ந்த அந்தணர்க்கும் அரசர்க்கும் உரிய.

இவர் ஒழுக்கத்தானும் குணத்தானும் செல்வத்தானும் ஏனையரினும் உயர்புடை யராதலின் 'உயர்ந்தோர்' என்றார். அரசர்தாம் தூதாகியவாறு வாசுதேவனால் உணர்க. ['மேல என்பது ஈறு திரிந்து 'மேன' என நின்றது.]

"வயலைக் கொடியின் வாடிய மருங்குல்
உயவ லூர்திப் பயலைப் பார்ப்பான்
எல்லி வந்து நில்லாது புக்குச்
சொல்லிய சொல்லுச் சிலவே யதற்கே
ஏணியுஞ் சீப்பு மாற்றி

மாண்வினை யானையு மணிகளைந் தனனே ” [புறம்-௩௦௯]

இதனுள் பார்ப்பார் தூதாகியவாறு கண்டுகொள்க.



௨௬. தானே சேறலுந் தன்னொடு சிவணி
ஏனோர் சேறலும் வேந்தன் மேற்றே.

இது, பகையிற் பிரிதற்குரிய தலைமக்களை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—தானே சேறலும்-(பகைவர் காரணமாகி அரசன்) தானே சேறலும், தன்னொடு சிவணி ஏனோர் சேறலும்-அவனொடு கூடி ஒழிந்தோர் சேறலும், வேந்தன் மேற்று-வேந்தன் கண்ணது.

பகையென்றது மேனின்ற அதிகாரத்தான் உய்த்துணர்ந்து கொள்ளக்கிடந்தது. ‘ தானே ’ என்பதன் ஏகாரம் பிரிநிலை ; படையை யொழிய என்றவாறு. போரைக் குறித்துப் பிரிதலும் அரசர்க்கு உரித்தென்று கொள்க. இதனுள் அரசன் தலைமகனாயுழிப் பகைதணிவினைப்பிரிவு எனவும், அவனொடு சிவணி ஏனோர்

தலைவராயுழி வேந் தற்குற்றுழிப்பிரிவு எனவும் இதனை இருவகையாகக் கொள்க. [ஏகாரம் ஈற்றசை.]

௩௰. மேவிய சிறப்பி னேனோர் படிமைய
முல்லை முதலாச் சொல்லிய முறையாற்
பிழைத்தது பிழையா தாகல்
வேண்டியும்
இழைத்த வொண்பொருண் முடியவும்
பிரிவே.

இது, மேற்சொல்லப்பட்ட மூவகை நிமித்தமுமன்றி வருவன உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:—[மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய-நால்வகை நிலத்தினும் மேவிய சிறப்பையுடைய மக்களையல்லாத தேவரது பூசையும் விழவும் முதலாயினவும், முல்லை முதலாக சொல்லிய-முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச் சொல்லிய நிலத்தின் மக்களும்; முறையால் பிழைத்தது பிழையாது ஆகல் வேண்டியும்-முறைமையில் தப்பிய வழி தப்பாது அறம் நிறுத்தல் காரணமாகவும், இழைத்த

ஒண்பொருள் முடியவும்
பிரிவு-செய்யப்பட்ட ஒள்ளிய பொருள் ஆக்குதல்
காரணமாகவும் பிரிவு உளதாம்.] மேவிய சிறப்பின்
ஏனோர் படிமைய என்பது நால்வகை நிலத்தினும் மேவிய சிறப்
பையுடைய மக்களையல்லாத தேவரது படிமையவாகிய
பொருள்கள் என்றவாறு. முல்லை முதலாச்
சொல்லிய என்பது முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்
சொல் லிய நிலத்தின் மக்கள் என்றவாறு. முறையால்
பிழைத்தது பிழையாதாகல் வேண்டி யும் பிரிவே என்பது
மேற்சொல்லப்பட்டன முறைமையில் தப்பியவழித்
தப்பாது அறம் நிறுத்தற்பொருட்டும் பிரிவுளதாம்
என்றவாறு. இழைத்த ஒண்பொருள் முடியவும் பிரிவே
என்பது செய்யப்பட்ட பொருள் முடியவேண்டியும் பிரிவு
உளதாம் என்ற வாறு.

[இதன் பொழிப்பு, தேவரது பூசை முதலாயின வும் மக்களும் முறைமை தப்பிய வழி தப்பாது அறம் நிறுத்தல் காரணமாகவும், பொருளாக்குதல் காரணமாகவும் பிரிவு உளதாம் என்றவாறு.]

காவல், பொருட்பிரிவு எனப் பிறநூலகத்து ஓதப்பட்ட இருவகைப்பிரிவும் ஈண்டு

ஓதப்பட்டதென்று கொள்க. 'மேவிய' என்பது "மாயோன் மேய காடுறை யுலகமுஞ், சேயோன் மேய மைவரை யுலகமும்" [அகத்-டு] என்பதனால் நால்வகை நிலத்தினும் மேவிய எனப் பொருளாயிற்று. 'சிறப்பினோர்' என்றதனால் சிறப்புடையார் மக்க ளும் தேவருமாகலின், மக்களல்லாதாரே தேவர் என்று பொருளாயிற்று. 'படிமை'



என்பது ப்ரதிமா என்னும் வடமொழித்திரிபு. அது தேவர்க்கு ஒப்புமையாக நிலத்தின் கண் செய்து அமைத்த தேவர்மேல் வந்தது. அவருடைய பொருளாவன பூசையும் விழா வும் முதலாயின.

'முல்லை முதலாச் சொல்லிய' என்பது "பிறந்தவழிக்கூறல்" [சொல்-கக௭] என்னும் ஆகுபெயரான் அந்நிலத்தின்மக்களை நோக்கிற்று. 'பிரிவு' என்பதனை, பிழைத்தது பிழையாதாகல் வேண்டியும் பிரிவுளதாம், இழைத்த வொண்பொருண் முடியவும் பிரிவுளதாம் என இரண்டிடத்துங் கூட்டுக. ஆம் என்பது எஞ்சிநின்றது.

தேவர் காரணமாகப் பிரியும் பிரிவுக்குச் செய்யுள்:—

"அரம்போ ழவ்வளை தோணிலை நெகிழ
நிரம்பா வாழ்க்கை நேர்தல் வேண்டி
ஈர்ங்கா ழன்ன வரும்புமுதி ரீங்கை
ஆலி யன்ன வால்வீ தாஅய்

வைவா லோதி மையண லேய்ப்பத்
தாதுறு குவளைப் போதுபிணி யவிழப்
படாஅப் பைங்கட் பாவடிக் கயவாய்க்
கடாஅ மாறிய யானை போலப்
பெய்துவறி தாகிய பொங்குசெலற் கொண்மூ
மைதோய் விசும்பின் மாதிரத் திழிதரப்
பனிபட நின்ற பானாட் கங்குல்
தமியோர் மதுகை தூக்காய் தண்ணென
முனிய வலைத்தி முரணில் காலைக்
கைதொழு மரபிற் கடவுள் சான்ற
செய்வினை மருங்கிற் சென்றோர் வலவரின்
விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்
வெருவரு தானையொடு வேண்டுபுலத் திறுத்த
பெருவளக் கரிகால் முன்னிலைச் செல்லார்
சூடா வாகைப் பறந்தலை யாடுபெற
ஒன்பது குடையும் நண்பக லொழித்த
பீடின் மன்னர் போல
ஓடுவை மன்னால் வாடைநீ யெமக்கே"

[அகம்-கஉ௬] எனவரும்.

சேரன் செங்குட்டுவனார் கண்ணகியைக் கடவுள்மங்கலம் செய்தற்குப் பிரிந்த

பிரிவு சிலப்பதிகாரத்திற் கண்டுகொள்க. இத்துணையும் பிரிவு அறுவகைப்படும் என்றவா

றுமிற்று. அஃதேல் பரத்தையிற் பிரிவு என்பதோ எனின், அது நிலம் பெயர்ந்து உறையாமையானும், இவைபோற் சிறக்காமையானும், அறமுறைமை செய்யப் பிரித

லும் பொருள்காரணமாகப் பிரிதலுமின்றிப் பிரிதலினானும், கற்பியலுள் கூறப்படும்

என்க. ஈண்டும் சிறுபான்மை கூறுப.

(௩௰)

௩௧. மேலோர் முறைமை நால்வர்க்கு முரித்தே.

இது, நிறுத்த முறையானே அறம்காரணமாகப் பிரிதற்குரிய தலைமக்களை உணர்த்

துதல் நுதலிற்று.

4



இ-ள் :—மேலோர் முறைமை நால்வர்க்கும் உரித்து-மேலோராகிய தேவரது முறைமையை நிறுத்தற்குப் பிரியும்பிரிவு நான்குவருணத்தார்க்கும் உரித்து. [ஏகாரம் ஈற்றசை.]

௩௨. மன்னர் பாங்கிற் பின்னோ ராகுப.

இது, காவற்பகுதியாகிய முறைசெய்வித்தற்கு

உரியமக்களை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—மன்னர் பாங்கின்-மன்னர்க்குரிய பக்கத்திற்கு, பின்னோர் ஆகுப-(அவ் வாறு முறை செய்தற்கு அரசன் தான் சேறல் வேண்டாமையின், அதற்குரியராய் அவனது ஏவல் வழி வரும்) வணிகரும் வேளாளரும் உரியர் ஆகுப.

மன்னர்க்குரிய பக்கமாவது காவல்; அஃதாவது நெறியின் ஒழுகாதாரை நெறியின் ஒழுகப் பண்ணுதல். (௩௨)

௩௩. உயர்ந்தோர்க் குரிய வோத்தி னான.

இது, வணிகர்க்கு உரியதோர் பிரிவு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—உயர்ந்தோர்க்கு-மேல் அதிகரிக்கப்பட்ட பின்னோராகிய இருவகையோரி லும் உயர்ந்தோராகிய வணிகர்க்கு, ஓத்தினான உரிய-ஓதுதல் நிமித்தமாகப் பிரிதலும் உரித்து.

ஓத்துப் பலவாதலின் 'உரிய' என்றார். ஈண்டு ஓத்து என்பது வேதம் ; அது நால்வகை வருணத்தினும் மூவர்க்கு உரித் தென்பது இத்துணையெனக் கூறப்பட்டது.

௩௪. வேந்துவினை யியற்கை வேந்த
னொரீஇய

ஏனோர் மருங்கினு மெய்திட
னுடைத்தே.

இது, வணிகர்க்கும் வேளாளர்க்கும் உரியதோர் பிரிவு
உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:—வேந்து வினை இயற்கை-வேந்தனது வினை
இயற்கையாகிய தூது, வேந்தன் ஒரீஇய ஏனோர்
மருங்கினும்-வேந்தனை ஒழிந்த வணிகர்க்கும்
வேளாளர்க்கும், எய்து இடன் உடைத்து-ஆகுமிடன்
உடைத்து.

வேந்தனது வினை-வேந்தற்குரிய வினை
'இடனுடைத்து' என்றதனன் அவர் தூதாங்காலம் அமைச்ச
ராகியவழியே நிகழும் என்றுகொள்க. [ஏகாரம் ஈற்றசை.]

௩௫. பொருள்வயிற் பிரிதலு மவர்வயி
னுரித்தே.

இதுவும் அது.

இ-ள் :— பொருள்வயின் பிரிதலும் அவர்வயின்
உரித்து-பொருள்வயிற் பிரிவும் மேற்சொல்லப்பட்ட வணிகர்
வேளாளரிடத்தில் உரியதாகும். [ஏகாரம் ஈச்றசை.] ()

௩௬. உயர்ந்தோர் பொருள்வயி னொழுக்கத்
தான.

இஃது, அந்தணர் பொருட்குப் பிரியுந்திறன் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—உயர்ந்தோர் பொருள்வயின் ஒழுக்கத்தான்-உயர்ந்தோராகிய அந்தணர் பொருள்வயிற் பிரியுங்காலத்து ஒழுக்கத்தானே பிரிப.

இதனாற் சொல்லியது, வணிகர்க்கும் வேளாளர்க்கும் வாணிகம் முதலாயின பொருணிமித்தம் ஆகியவாறுபோல, அந்தணர்க்கு இவை பொருணிமித்தம் ஆகா என்



பதூஉம், அவர்க்கு இயற்கையொழுக்கமாகிய ஆசாரமும், செயற்கையொழுக்கமாகிய கல்வியுமே பொருட்குக் காரணமாம் என்பதூஉம் கண்டவாறு. [ஏற்றகரம் சாரியை.] ௩௬

௩௭. முந்நீர் வழக்க மகடூஉ வோ டில்லை.

இதுவும், பொருள்வயிற் பிரிவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—முந்நீர் வழக்கம் மகடூஉவோடு இல்லை-(ஈண்டு அதிகரிக்கப்பட்ட பிரிவு காலிற்பிரிவும் கலத்திற்பிரிவும் என இருவகைப்படும் ; அவற்றுள்) கலத்திற்பிரிவு தலை மகளுடன் இல்லை.

எனவே, காலிற்பிரிவு தலைமகளை உடன்கொண்டு பிரியவும்பெறும் என்றவாறும்.

கலத்திற் பிரிவு.

தலைமகளை யொழியப் பிரிந்தமைக்குச் செய்யுள் :—

" உலகுகிளர்ந் தன்ன வுருகெழு வங்கம்
புலவுத்திரைப் பெருங்கட னீரிடை போழ
இரவு மெல்லையு மசைவின் றாகி
விரைசெல லியற்கை வங்கூ ழாட்டக்
கோடுயர் திணிமண லகன்றுறை நீகான்
மாட வொள்ளெரி மருங்கறிந் தொய்ய
ஆள்வினை புரிந்த காதலர் நாள்பல
கழியா மையி னழிபட ரகல
வருவர் மன்னாற் றோழி தண்பணைப்
பொருபுனல் வைப்பி னம்மூ ராங்கட்
கருவிளை முரணிய தண்புதற் பகன்றைப்
பெருவன மலர வல்லி தீண்டிப்
பலவுக்காய்ப் புறத்த பசும்பழப் பாகல்
கூதளை மூதிலைக் கொடிநிறை தூங்க
அறனின் றலைக்கு மாறு வாடை
கடிமனை மாடத்துக் கங்குல் வீசத்

திருந்திழை ஞெகிழ்ந்து பெருங்கவின்

சாஅய

நிரைவளை யூருந் தோளென
உரையொடு செல்லு மன்பினர்ப்
பெறினே" [அகம்-உருச] எனவரும். காலிற் பிரிவுக்கு உதாரணம் வந்துழிக் காண்க. (கஎ)

கஅ. எத்திணை மருங்கினு மகடூஉ
மடன்மேற்
பொற்புடை நெறிமை யின்மை யான.

இத்துணையும் பாலைக்குரித்தாகிய பிரிவிலக்கணம் கூறினர்; இது கைக்கிளை பெருந்திணைக்கு உரிய இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—எ திணை மருங்கினும்-எல்லாக் குலத்தினிடத்தினும், மகடூஉ மடல்மேல் (இல்லை)-பெண்பால் மடலேறுதல் இல்லை; பொற்புடை நெறிமை இன்மையான்- பொலிவுபெறு நெறிமை இல்லாமையான்.

'மடன்மேல்' என்பது மடலேறுதல் என்னும் பொருள் குறித்தது. இல்லை என்பது மேலைச் சூத்திரத்தினின்று தந்துரைக்கப்பட்டது. 'பொற்புடை நெறிமை' என்பது

பெண்பாற்கு இன்றியமையாத நாணம் முதலாயின. மகடூஉ மடலேறுதல் இல்லை எனவே ஆடூஉ மடலேறுதல் உண்டு என்பது பெற்றும். இது புணராவிரக்கமாகிய கைக்கிளைக் கும், "தேறுதலொழிந்த காமத்து மிகுதிறன்" [அகத்-டுக] ஆகிய பெருந்திணைக்கும் உரித்தாகியவாறு கண்டுகொள்க. [ஈற்றகரம் சாரியை.]
(௩அ)

௩௯. தன்னு மவனு மவளுஞ் சுட்டி
மன்னு நிமித்த மொழிப்பொரு டெய்வம்
நன்மை தீமை யச்சஞ் சார்தலென்
றன்ன பிறவு மவற்றொடு தொகைஇ
முன்னிய கால மூன்றொடு விளக்கித்
தோழி தேஎத்துங் கண்டோர்
பாங்கினும்
போகிய திறத்து நற்றாய் புலம்பலும்
ஆகிய கிளவியு மவ்வழி யுரிய.

இது, மேற்கூறப்பட்ட இருவகைப் பிரிவினுள் [அகத்-கக] தமரைப்பிரிதலாகிய உடன்போக்கில் நிகழ்ந்த நற்றாய்மாட் டுளதாய கிளவி உணர்த்துதல் நுதலிற்று.

தன்னும்அவனும் அவளும் சுட்டியென்பது, தன்னையும் தலைமகனையும் தலைமகளை யும் குறித்து என்றவாறு. மன்னுநிமித்தமாவது, ஆட்சிபெற்ற நிமித்தம்; அது பல்லி முதலாயினவாம். மொழிப்பொருளாவது, பிறர் தம்முள் கூறும் மொழிப்பொருளை நிமித்தமாகக் கோடல்; அதனை நற்சொல் என்ப. தெய்வம் என்பது, உலகினுள்வா ழும் இயக்கர் முதலாயினர் ஆவேசித்துக் கூறும் சொல். நன்மை தீமை அச்சம் என் பது, தனக்கும் அவர்க்கும் உளதாகிய நன்மையும் தீமையும் அச்சமும் என்றவாறு. சார்தல் என்பது, அவர் தன்னை வந்து சார்தல். என்று என்பது இடைச்சொல். அன்னபிறவும் என்பது, அத்தன்மைப் பிறவும் என்றவாறு. அவற்றொடு தொகைஇ என்பது, மேற்சொல்லப்பட்ட நிமித்தம் முதலாயினவற்றோடு கூட்டி என்றவாறு. அவ்வழியாகிய கிளவியும் உரிய என்பது, அவ்விடத்தாகும் கூற்றும் உரிய என்றவாறு.

இ-ள்:-[போகிய திறத்து நற்றாய் தன்னும் அவனும் அவளும் சுட்டி-தலைமகள் உடன் போகியவழி நற்றாய் தன்னையும் அவனையும் அவளையும் சுட்டி, மன்னும் நிமித்தம்-நிலை பெற்ற நிமித்தம், மொழிப்பொருள்

தெய்வம் அவற்றொடு-மொழிப்பொருள் தெய்வம் என்பனவற்றொடு, நன்மை தீமை அச்சம் சார்தல்-தனக்கும் அவர்க்கும் உளதாகிய நன்மை தீமை அச்சம் சார்தல் என்பனவும், அன்னபிறவும் அவற்றொடு தொகைஇ- அத்தன்மைய பிறவும் அவற்றோடு கூட்டி, முன்னிய காலம் மூன்றொடு விளக்கி-குறித்த காலம் மூன்றும் ஒருங்குதோற்றுவித்து, தோழி தேஎத்தும் கண்டோர்பாங்கினும்
புலம்பலும்-தோழிமாட்டும் கண்டோர்மாட்டும் புலம்புதலும், அவ்வழி ஆகிய கிளவியும் உரிய-அவ்வழி நிகழும் கூற்றும் உரிய.]

"போகிய திறத்து நற்றாய்" என்றதனை முன்னே கூட்டுக. "அவற்றொடு" என்பதனைத் தெய்வம் என்பதனோடும் கூட்டுக. முன்னியகாலம் மூன்றுடன் விளக்குதலாவது, முன்பு இத்தன்மையளாயினள்; இப்பொழுது இத்தன்மையளாகாநின்றாள்; மேல் இன்னளாகுவள் என மூன்றுகாலமும் ஒருங்கு தோற்றுவித்துப் புலம்புதல். அவ்வழி ஆகிய கிளவியும் என மொழிமாற்றுக. அவற்றிற்குச் சில உதாரணங்கள் :—

“ தோழியர் சூழத் துறைமுன் றி லாடுங்கால
வீழ்பவள் போலத் தளருங்கா—ளூழாது
கல்லத ரத்தத்தைக் காதலன் பின்போதல்
வல்லவோ மாதர் நடை” [ஐந்திணை
ஐம்பது-௩௭]

என்பது தலைமகள் உடன்போயவழி நற்ராய்
கவன் றுரைத்தது.

“ மறுவி றூவிச் சிறுகருங் காக்கை
அன்புடை மரபினின் கிளையோ டாரப்
பச்சூன் பெய்த பைந்திணை வல்சி
பொலம்புனை கலத்திற் றருகுவென் மாதோ
வெஞ்சின விறல்வேற் காளையோ
டஞ்சி லோதியை வரக்கரைந் தீமே” [ஐங்குறு-௩௯௧]

என்பது நற்ராய் உடன்போய தலைமகள் பொருட்டாகக்
காகத்திற்குப் பராய்க் கடன்

உரைத்தது.

“ வேறாக நின்னை வினவுவேன் றெய்வத்தாற் கூறாயோ
கூறுங் குணத்தினை-வேறாக

என் மனைக் கேறக் கொணருமோ வெல்வினையைத்
தன் மனைக்கே யுய்க்குமோ தான்" [திணைமாலை நூற்-கூய]

என்பது நற்றாய் தலைமகளின் உடன்போக் கெண்ணிப் படிமத்தாளை வினாஅயது.

பிறவும் அன்ன. 'ஈன்றவள் புலம்பலும்' என்ற உம்மையால், செவிலி புலம்பலும் கொள்ளப்படும்.

உதாரணம் :—

"பெயர்த்தனென் முயங்கயான் வியர்த்தனெ னென்றனள்
இனியறிந் தேனது துனியா குதலே
கழலொடி யாஅய் மழைதவழ் பொதியில்
வேங்கையுங் காந்தளு நாறி
ஆம்பன் மலரினுந் தான்றண் ணியளே" [குறுந்-அச]

என்பது உடன்போக்கிய செவிலி கவன் றுரைத்தது.

"என்னு முள்ளினள் கொல்லோ தன்னை
நெஞ்சுணத் தேற்றிய வஞ்சினக்
காளையோ டுழுங்கன் மூதூ ரலரெழச்
செழும்பல் குன்ற மிறந்தவென் மகளே." [ஐங்குறு-ஙஎஉ]

என்பது தலைமகள் கொடுமைநினைந்து கூறியது.

"ஈன்றுபுறந் தந்த வெம்மு முள்ளாள்

வான்ஞே யிஞ்சி நன்னகர் புலம்பத்
தனிமணி யிரட்டுந் தாழுடைக் கடிகை
நுழைநுதி நெடுவேற் குறும்படை மழவர்
முனையாத் தந்து முரம்பின் வீழ்த்த
வில்லேர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்
வல்லரண் பதுக்கைக் கடவுட் பேண்மார்

நடுகற் பீலி சூட்டித் துடிபடத்
தொப்பிக் கள்ளொடு துரூஉப்பலி கொடுக்கும்



போக்கருங் கவலைய புலவுநா றருஞ்சுரந் துணிந்துபிற ளாயின
ளாயினு மணிந்தணிந் தார்வ நெஞ்சமோ டாய்நல
னளைஇத்தன் மார்புதுணை யாகத் துயிற்றுக தில்ல துஞ்சா
முழவிற் கோவற் கோமான் நெடுந்தேர்க் காரி கொடுங்கான்
முன்றுறைப் பெண்ணையம் பேர்யாற்று நுண்ணறல் கடுக்கும்
நெறியிருங் கதுப்பினென் பேதைக் கறியாத் தேஎத் தாற்றிய
துணையே” [அகம்-௩௫]

என்பது செவிலி தெய்வம் பராஅயது. பிறவும் அன்ன.

சயி. ஏமப் பேரூர்ச் சேரியுஞ் சுரத்துந்
தாமே செல்லுந் தாயரு முளரே.

இது, தலைமகள் உடன்போகியவழிச் செவிலிக்கு உரியதோர் திறன் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—ஏமம் பேர் ஊர் சேரியும்-ஏமம்பொருந்திய பெரிய ஊரகத்துச் சேரியின் கண்ணும், சுரத்தும்-ஊரினின்றும் நீங்கிய சுரத்தின்கண்ணும், தாமே செல்லும் தாய ரும் உளர்-தாமே செல்லுந் தாயரும் உளர்.

"தாமே செல்லுந் தாயர்" என்பதனால் செவிலி என்பது பெற்றும். 'தாயரும்' என்றதனால் கைத்தாயர் பலர் என்று கொள்ளப்படும். அவ்வழிச் சேரியோரை வினு தலும், சுரத்திற் கண்டோரை வினுதலும் உளவாம். சேரியிற் பிரிதலும் பாலையாகுமோ எனின், அது வருகின்ற சூத்திரத்தினல் விளங்கும். [ஈற்றேகாரம் அசை.]

சேரியோரை வினுஅயதற்குச் செய்யுள் :—

"இதுவென் பாவைக் கினியநன்
பாவை
இதுவென் பைங்கிளி யெடுத்த
பைங்கிளி
இதுவென் பூவைக் கினியசொற்

பூவையென்

நலம்வரு நோக்கி னலம்வரு சுடர்நுதல்
காண்டொறுங் காண்டொறுங் கலங்கி
நீங்கின ளோவென் பூங்க ணோளே"

[ஐங்குறு-௩௭௫] எனவரும்.

சுரத்திடை வினவியதற்குச் செய்யுள்:—

"எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடைநீழல்
உறித்தாழ்ந்த கரகமு
முரைசான்ற முக்கோலும்
நெறிப்படச் சுவலசைஇ வேறோரா
நெஞ்சத்துக்
குறிப்பேவல் செயன்மாலைக் கொளைநடை
யந்தணீர்
வெவ்விடைச் செலன்மாலை யொழுக்கத்தீ
ரிவ்விடை
என்மக ளொருத்தியும் பிறண்மக னொருவனுந்
தம்முளே புணர்ந்த தாமறி புணர்ச்சியர்

அன்னா ரிருவரைக் காணிரோ பெரும."

[கலி-பாலை-௮]

" செய்வினை பொலிந்த செறிகழ னோன்றாள்
மையணற் காளையொடு பைய வியலிப்
பாவை யன்னவென் னாய்தொடி மடந்தை
சென்றன ளென்றிரைய
ஒன்றின வோவவ ளஞ்சிலம் படியே." (ஐங்குறு-௩௮௬)

என வருவதும் அது.

" காலே பரிதப் பினவென் கண்ணே
நோக்கி நோக்கி வாளிழந் தனவே
அகலிரு விசும்பின் மீனினும்
பலரே மன்றவிவ் வுலகத்துப் பிறரே "

[குறுந்-௪௪]

என வருவது, சுரத்திடை விளைஅயது நிகழ்ந்தபின்னர்க் கூறியது (௪௰)

௪௧. அயலோ ராயினு மகற்சி மேற்றே.

இதுவும், பாலைக்கு உரியதோர் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:—அயலோராயினும்-(சேரியினும் சுரத்தினும் பிரிதலன்றித்) தமது மனையயற்

கண் பிரிந்தாராயினும், அகற்சிமேற்றே-பிரிவின்கண்ணதே.

எனவே, ஓர் ஊரகத்து மனையயற்கண்ணும் பரத்தையிற்பிரிவு பாலையாம் என்பதூஉம் உய்த்துணர்ந்து கொள்ளப்படும். (சக)

சஉ. தலைவரு விழுமநிலையெடுத்

துரைப்பினும்

போக்கற் கண்ணும் விடுத்தற் கண்ணும்

நீக்கலின் வந்த தம்முறு

விழுமமும்

வாய்மையும் பொய்ம்மையுங் கண்டோற் சுட்டித்

தாய்நிலை நோக்கித் தலைப்பெயர்த்துக் கொளினும்

நோய்மிகப் பெருகித் தன்னெஞ்சு கலுழ்ந்தோளை

அழிந்தது களையென மொழிந்தது கூறி

வன்புறை நெருங்கி வந்ததன் றிறத்தோ

டென்றிவை யெல்லா மியல்புற நாடின்

ஒன்றித் தோன்றுந் தோழி மேன.

இது, பிரிவின்கண் தோழிக்குக் கூற்று நிகழும் இடன் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:—தலைவரு விழும......தோழிமேன-தலைவரு விழும நிலையெடுத் துரைத்தல் முதலாகச் சொல்லப்பட்டன தோழிமாட்டுப் பொருந்தித் தோன்றும்.

தலைவரும் விழுமநிலை எடுத்துரைத்தலாவது பின்பு வரும் நோய்நிலையை எடுத்

துக் கூறுதல் என்றவாறு.

**உதாரணம்:—**"பாஅ வஞ்செவிப் பணைத்தாண் மாநிரை
மாஅல் யானையொடு மறவர் மயங்கித்
தூறதர்ப் பட்ட வாறுமயங் கருஞ்சுரம்
இறந்துநீர் செய்யும் பொருளினும்
யாநுமக்குச்
சிறந்தன மாத லறிந்தனி ராயின்



நீளிரு முந்நீர் வளிகலன் வௌவலின்
ஆள்வினைக் கழிந்தோர் போற லல்லதைக்
கேள்பெருந் தகையோ டெவன்பல மொழிகுவ
மாளுங் கொண்மீன் றகைத்தலுந் தகைமே;

கல்லெனக் கவின்பெற்ற விழவாற்றுப் படுத்தபிற்

புல்வென்ற களம்போலப் புலம்புகொண்
டமைவாளோ;

ஆள்பவர் கலக்குற வலைபெற்ற நாடுபோற் பாழ்பட்ட
முகத்தொடு பைதல்கொண் டமைவாளோ;

ஓரிரா வைகலுட் டாமரைப் பொய்கையுள்
நீர்நீத்த மலர்போல நீநீப்பின் வாழ்வாளோ;

எனவாங்கு;

பொய்ந்நல்கல் புரிந்தனை புறந்தரல் கைவிட்
டெந்நாளோ நெடுந்தகாய் நீசெல்வ
தந்நாள்கொண் டிறக்குமிவ ளரும்பெற லுயிரே" (கலி
பாலை-௨)

எனவரும். இதனுள் "யாம் நமக்குச் சிறந்தன மாத
லறிந்தனிராயின்" என்றமை யாலும், "பொய்ந் நல்கல்
புரிந்தனை" என்றமையாலும் வரைவதன்முன்பென்று
கொள்ளப்படும். இவள் இறந்துபடும் என்றமையால்
உடன்கொண்டுபோவது குறிப்பு.

போக்கற்கண்ணும் என்பது 'உடன்கொண்டு பெயர்'
என்று கூறுதற்கண்ணும் என்றவாறு.

உதாரணம்:—"மரையா மரல்கவர மாரி வறப்ப

வரையோங் கருஞ்சுரத் தாரிடைச் செல்வோர்
சுரையம்பு மூழ்கச் சுருங்கிப்

புரையோர்தம்

உண்ணீர் வறப்பப் புலர்வாடு நாவிற்குத்
தண்ணீர் பெறூஅத் தடுமாற் றருந்துயரங்
கண்ணீர் நனைக்குங் கடுமைய

காடென்றால்

என்னீ ரறியாதீர் போல விவைகூறல்
நின்னீர வல்ல நெடுந்தகா யெம்மையும்
அன்பறச் சூழாதே யாற்றிடை

நும்மொடு

துன்பந் துணையாக நாடி னதுவல்ல
தின்பமு முண்டோ வெமக்கு"

[கலி-பாலை-௫] எனவரும்.

விடுத்தற்கண்ணும் என்பது தலைமகள் உடன்போக்கொருப்பட்டமை தலைமகளுக் குக் கூறி அவளை விடுத்தற்கண்ணும் என்றவாறு.

உதாரணம்:—"உன்னங் கொள்கையொ

டுளங்கரந் துறையும்

அன்னை சொல்லு முய்க வென்ன தாஉம்
ஈரஞ் சேரா வியல்பில் பொய்ம்மொழிச்
சேரியம் பெண்டிர் கவ்வையு மொழிக
நாடுகெ ணகற்றிய வுதியஞ் சேரற்
பாடிச் சென்ற பரிசிலர் போல

உவவினி வாழி தோழி யவரோ

பொருளதிகாரம் - அகத்திணையியல்
௲௲

பொம்ம லோதி நம்மொ டொராங்குச்
செலவயர்ந் தனரா லின்றே பரந்தெழு
மலைதொறு மால்கழை மிசைந்த நால்வாய்
கூரெரி மீன்கொள் பரதவர் கொடுந்திமில்
நளிசுடர் வான்றோய் புணரிமிசைக் கண்டாங்கு
மேவரத் தோன்றும் யாவுயர் நனந்தலை
உயவல் யானை வெரிநுச்சென் றன்ன
கல்லூர் பிழிதரும் புல்சாய் சிறுநெறி
காடுமீக் கூறுங் கோடேந் தொருத்தல்
ஆறுகடி கொள்ளு மருஞ்சுரம் பணைத்தோள்
நாறைறங் கூந்தற் கொம்மை வரிமுலை
நிரையித ழுண்கண் மகளிர்க்
கரிய வாலென வழுங்கின செலவே"

[அகம்-௬௫] எனவரும். இஃது உடன்போக்கு நயப்பித்தது.

"வேலும் விளங்கின வினையரு மியன்றனர்
தாருந் ததையின தழையுந் தொடுத்தன

நிலநீ ரற்ற வெம்மை நீங்கப்
பெயனீர் தலைஇய வுலவை யிலை நீத்துக்
குறுமுறி யீன்றன மரனே நறுமலர்
வேய்ந்தன போலத் தோன்றிப் பலவுடன்
தேம்படப் பொதுளின பொழிலே கானமும்
நனிநன் றாகிய பனிநீங்கு வழிநாட்
பாலெனப் பரத்தரு நிலவின் மாலைப்

போதுவந் தன்றாற் றூதே நீயும்
கலங்கா மனத்தை யாகி யென்சொல்
நயந்தனை கேண்மோ நெஞ்ச மாக்குவி
தெற்றி யுலரினும் வயலை வாடினும்
நொச்சி மென்சினை வணர்குரல் சாயினும்

நின்னினு மடவ ணனிநீ நயந்த
அன்னை யல்ல றாங்கிநின் னையர்
புலிமருள் செம்ம லேறுகி
வலிமா வின்னுந் தோய்கநின்

முலையே" [அகம்-உருகூ]

எனவரும். இது விடுத்தவழிக் கூறியது.

நீக்கலின் வந்த தம்முறு விழுமமும் என்பது, தமரை

நீக்குதலால் தமக்குற்ற நோயின்கண்ணும் என்றவாறு.

உதாரணம்:—"விளம்பழங் கமழும் கமஞ்சூற் குழிசிப்

பாசந் தின்ற தேய்கான் மத்த

நெய்தெரி யியக்கம் வெளின்முதன்

முழங்கும்

வைகுபுலர் விடியன் மெய்கரந்து

தன்கால்

அரியமை சிலம்பு கழீஇப் பன்மாண்

5



வரிப்புனை பந்தொடு வைஇய செல்வோள்

இவைகாண் டோறு நோவர் மாதோ

அளியரோ வளியரென் னாயத் தோரென

நும்மொடு வரவுதா னயரவுந்

தன்வரைத் தன்றியுங் கலுழ்ந்தன கண்ணே" [நற்-கஉ]

எனவரும். இஃது உடன்போக்குத்

தவிர்தற்பொருட்டுக் கூறியது.

இன்னும் "நீக்கலின் வந்த தம்முறு விழுமம்"

என்றதனால் தலைமகட்குக் கூறின

வும் கொள்க.

உதாரணம்:—"நாளு நாளு மாள்வினை யழுங்க
இல்லிருந்து மகிழ்வோர்க் கில்லையாற் புகழெ
ஒண்பொருட் ககல்வர்நங் காதலர்
கண்பனி துடையினித் தோழி நீயே" [சிற்றடக்கம்]

எனவரும்.

வாய்மையும் பொய்ம்மையும் கண்டோற் சுட்டித்
தாய்நிலை நோக்கித் தலைப்பெயர்த்

துக்கொளினும் என்பது, மெய்ம்மையும் பொய்ம்மையும் காணப்பட்ட அவனைச் சுட்டித்

தாய்நிலை நோக்கி மீட்டுக்கொள்ளுதற்கண்ணும் என்றவாறு.

உதாரணம்:—"பான்மருண் மருப்பி னுரல்புரை பாவடி
ஈர்நறுங் கமழ்கடாஅத் தினம்பிரி யொருத்தல்
ஆறுகடி கொள்ளும் வேறுபுலம் படர்ந்து
பொருள்வயிற் பிரிதல் வேண்டு மென்னும்
அருளில் சொல்லு நீசொல் லினையே
நன்னர் நறுநுத னயந்தனை நீவி
நின்னிற் பிரியலே னஞ்சலோம் பென்னும்
நன்னர் மொழியு நீமொழிந் தனையே

அவற்றுள்,

யாவோ வாயின மாஅன் மகனே
கிழவ ரின்னே ரென்னுது பொருடான்
பழவினை மருங்கிற் பெயர்புபெயர் புறையும்
அன்ன பொருள்வயிற் பிரிவோய் நின்னின்
றிமைப்புவரை வாழாண் மடவோள்
அமைக்கவின் கொண்ட

தோளிணை மறந்தே" [கலி-பாலை-உ௰]

எனவரும். இது தலைமகனைச் சுட்டிக் கூறியது. தாய்நிலை நோக்கித் தலைப்பெயர்த்துக்கொண்டதற்குச் செய்யுள் வந்தவழிக் கண்டுகொள்க.

நோய் மிகப் பெருகித் தன் னெஞ்சு கலுழ்ந்தோளை அழிந்தது களையென மொழிந்தது கூறி வன்புறை நெருங்கி வந்ததன் திறத்தொடு என்றிவை எல்லாம் இயல்புற நாடின் ஒன்றித் தோன்றும் தோழி மேன

என்பது, தலைமகன் பிரிதலால் வந்துற்ற நோய் மிகவும் பெருகித் தன் னெஞ்சு கலங்கியோளை அழிந்தது களைதல் வேண்டுமெனத் தலைமகன் சொன்ன மாற்றத்தைக் கூறி வன்புறையின்பொருட்டு நெருங்கிவந்ததன் திறத்தோடு இத்தன்மைய வெல்லாம் இயல்புற ஆராயின் தலைமகளொடு பொருந்தித் தோன்றும் தோழிமேலன என்றவாறு.

"ஒன்றித் தோன்றுந் தோழி" என்றதனால்

தோழிமார் பலருள்ளும் இன்றியமை

யாதாள் என்றுகொள்க.

"தோழிதானே செவிலி மகளே" [களவியல்-௩௫]

என்றதனுன், அவள் செவி

விமகள் என்று கொள்ளப்படும்.

மொழிந்தது கூறி வன்புறை நெருங்குதலாவது, தலைமகன் மொழிந்தது கூறி வற்

புறுததலாம.

"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்

பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்

புரிவமர் காதலிற் புணர்ச்சியுந் தருமெனப்

பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர்

வருவர்கொல் வயங்கிழாஅய் வலிப்பல்யான் கேளினி

அடிதாங்கு மளவின்றி யழலன்ன வெம்மையாற்

கடியவே கனங்குழாஅய் காடென்றா ரக்காட்டுள்

துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்

பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவு முரைத்தனரே"

எனவும்,

"இன்பத்தி னிகந்தொரீஇ யிலைதீர்ந்த வுலவையாற்
றுன்புறூஉந் தகையவே காடென்றா ரக்காட்டுள்
அன்புகொண் மடப்பெடை யசைஇய வருத்தத்தை மென்சிறக
ராலாற்றும் புறவெனவு முரைத்தனரே"

எனவும்,

"கன்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதலாற்
றுன்னரூஉந் தகையவே காடென்றா ரக்காட்டுள் இன்னிழ
லின்மையான் வருந்திய மடப்பிணைக்குத் தன்னிழலைக்
கொடுத்தளிக்குங் கலையெனவு முரைத்தனரே"

எனவும் அவன் மொழிந்தது கூறி,

"எனவாங்கு;
இனைநலமுடைய கானஞ் சென்றோர்
புனைநலம் வாட்டுந ரல்லர் மனைவயிற்
பல்லியும் பாங்கொத் திசைத்தன
நல்லெழி லுண்கணு மாடுமா லிடனே" [கலி-பாலை-கக]

என வற்புறுத்தியவாறு கண்டுகொள்க.

'என்றிவையெல்லா மியல்புறநாடின்' என்றதனுன், பருவம் வந்தது எனவும் பருவம் அன்று எனவும் வருவன கொள்க.

"வல்வருவர் காணாய் வயங்கி முருக்கெல்லாஞ்
செல்வச் சிறார்க்குப்பொற் கொல்லர்போ—னல்ல
பவளக் கொழுந்தின்மேற் பொற்றாலி பாய்த்தித்
திவளக்கான் றிட்டன தேர்ந்து." [திணைமாலை நூற்-௬௬]

இது பருவம் வந்தது என்றது.



"மடவ மன்ற தடவுநிலைக் கொன்றை
கல்பிறங் கத்தஞ் சென்றோர் கூறிய
பருவம் வாரா வளவை நெரிதரக்
கொம்புசேர் கொடியிண ரூழ்த்த
வம்ப மாரியைக் காரென மதித்தே." [குறுந்-௬௬]

இது பருவம் அன்று என்றது.

இன்னும் 'என்றிவை யெல்லாம்' என்றதனால், பிரியுங்காலத்துத் தலைமகட்கு உணர்த்துகின்றேன் எனத் தலைமகற்கு உரைத்தலும், தலைமகட்கு அவர் பிரியார் எனக்கூறுதலும் கொள்க.

"மூளவுமா வல்சி யெயினர் தங்கை
இளமா வெயிற்றிக்கு நின்னிலை யறியச்
சொல்லினே னிரக்கு மளவை
வென்வேற் காளை விரையா தீமே." [ஐங்குறு-கூகூச]

இது விலக்கிற்று.

" விளங்கிழா அய் செல்வாரோ வல்ல ரழற்பட்
டசைந்த பிடியை யெழிற்களிறு
கற்றடைச் செற்றிடைச் சின்னீரைக் கையாற்கொண்
டுச்சி யொழுக்குஞ் சுரம்."

இது தலைமகட்குக் கூறியது.

சரு. பொழுது மாறு முட்குவரத்
தோன்றி
வழுவி னாகிய குற்றங் காட்டலும்
ஊரது சார்புஞ் செல்லுந் தேயமும்
ஆர்வ நெஞ்சமொடு செப்பிய வழியினும்
புணர்ந்தோர் பாங்கிற் புணர்ந்த
நெஞ்சமொ
டழிந்தெதிர் கூறி விடுப்பினு மாங்கத்

தாய்நிலை கண்டு தடுப்பினும் விடுப்பினுஞ்
சேய்நிலைக் ககன்றோர் செலவினும் வரவினுங்
கண்டோர் மொழிதல் கண்ட தென்ப.

இது, கண்டோர் கூற்று நிகழும் இடன் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—பொழுதும் ஆறும் உட்குவரத் தோன்றி வழுவின் ஆகிய குற்றம் காட்டலும் ஊரது சார்பும் செல்லும் தேயமும் ஆர்வ நெஞ்சமொடு செப்பிய வழியினும் என்பது, காலமும் நெறியும் அச்சம் வருமாறு தோன்றி வழுவுதலினாகிய குற்றம் காட்டலும் ஊரது அணிமையும் செல்லும் தேயத்தின் சேய்மையும் ஆர்வ நெஞ்சமொடு செப்பிய பக்கத்தினும் என்றவாறு.

உதாரணம்:—"எம்மூ ரல்ல தூர்நணித் தில்லை
வெம்முரட் செல்வன் கதிரு மூழ்த்தனன்
சேர்ந்தனை சேன்மோ பூந்தார் மார்ப
இளையள் மெல்லியள் மடந்தை
அரிய சேய பெருங்க லாறே" எனவரும்.



புணர்ந்தோர் பாங்கில் புணர்ந்த நெஞ்சமொடு அழிந்து

எதிர் கூறி விடுப்பினும் என்பது, புணர்ந்து செல்கின்றோர் பக்கத்து விரும்பின நெஞ்சத்தொடு மனன் அழிந்து எதிர்மொழி கூறி விடுத்தற்கண்ணும் கூற்று நிகழும் என்றவாறு.

உதாரணம்:— "அழுந்துபட வீழ்ந்த பெருந்தண் குன்றத்

தொலிவ லீந்தி னுலவை யங்காட்
டாறு சென்மாக்கள் சென்னி யெறிந்த
செம்மறுத் தலைய நெய்த்தோர் வாய
வல்லியம் பெருந்தலைக் குருளை மாலை
மரனேக்கு மின்டிவ ரீங்கைய சுரனே
வையெயிற் றையண் மடந்தை முன்னுற்
றெல்லிடை நீங்கு மிளையோ னுள்ளங்
காலொடு பட்ட மாரி
மால்வரை மிளிர்க்கு முருமினுங் கொடிதே" [நற்-உ]

எனவரும்.

ஆங்கு அத் தாய்நிலை கண்டு தடுப்பினும் விடுப்பினும் என்பது, ஆண்டுப் பின்சென்ற அச்செவிலித்தாயது நிலைமையைக்கண்டு போகாமல் தடுத்தற்கண்ணும் போகவிடுத்தற் கண்ணும் என்றவாறு.

உதாரணம்:—"அறம்புரி யருமறை நவின்ற நாவிற்

றிறம்புரி கொள்கை யந்தணிர்
தொழுவலென்
றொண்டொடி வினவும் பேதையம்
பெண்டே
கண்டனெ மம்ம சுரத்திடை யவளே
இன் றுணை யினிதுபா ராட்டக்
குன் றுயர் பிறங்கன் மலையிறந் தோளே" [ஐங்குறு-ருஅஎ]
எனவரும். இது செவிலி வினஅயவழிக் கூறியது.

"பெயர்ந்து போகுதி பெருமூ தாட்டி
சிலம்புகெழு சீறடி சிவப்ப
இலங்குவேற் காளையோ டிறந்தனள்
சுரனே." இது தடுத்தற்கண் வந்தது.

"நெருப்பவிர் கனலி யுருப்புச்சினந்
தணியக்
கருங்கால் யாத்து வரிநிழ லிரீஇச்
சிறுவரை யிறப்பிற் காண்குவை
செறிதொடிப்
பொன்னேர் மேனி மடந்தையொடு
வென்மேல் விடலை முன்னிய சுரனே."
[ஐங்குறு-ருஅஅ] இது விடுத்தற்கண் வந்தது.

சேய்மிலேக்கு அகன்றோர் செலவினும் வரவினும் என்பது, சேய்மைக்கண் அகன்றோர் செல்லுதற்கண்ணும் வரவின் கண்ணும் என்றவாறு.

உதாரணம்:—"வில்லோன் காலன கழலே தொடியோண்
மெல்லடி மேலவுஞ் சிலம்பே நல்லோர்



யார்கொ லளியர் தாமே யாரியர்
கயிறாடு பறையிற் கால்பொரக் கலங்கி
வாகை வெண்ணெற் றொலிக்கும்
வேய்பயி லழுவ முன்னி யோரே" [குறுந்-எ]

எனவரும்.

கண்டோர் மொழிதல் கண்டது என்ப என்பது, இவ்விவ்விடங்களில் கண்டோர்
சொல்லுதல் வழக்கிற் காணப்பட்ட தென்ப என்றவாறு. (சரு)

சச. ஒன்றாத் தமரினும் பருவத்துஞ்
சுரத்தும்

ஒன்றிய மொழியொடு வலிப்பினும் விடுப்பினும்
இடைச்சுர மருங்கி னவள்தம ரெய்திக்
கடைக்கொண்டு பெயர்தலிற் கலங்கஞ ரெய்திக்
கற்பொடு புணர்ந்த கௌவை யுளப்பட
அப்பாற் பட்ட வொருதிறத் தானும்
நாளது சின்மையு மிளமைய தருமையுந்
தாளாண் பக்கமுந் தகுதிய தமைதியும்
இன்மைய திளிவு முடைமைய துயர்ச்சியும்
அன்பின தகலமு மகற்சிய தருமையும்
ஒன்றாப் பொருள்வயி னூக்கிய பாலினும்
வாயினுங் கையினும் வகுத்த பக்கமோ
டூதியங் கருதிய வொருதிறத் தானும்
புகழு மானமு மெடுத்துவற் புறுத்தலுந்
தூதிடை யிட்ட வகையி னானும்
ஆகித் தோன்றும் பாங்கோர் பாங்கினும்
மூன்றன் பகுதியு மண்டிலத் தருமையுந்
தோன்றல் சான்ற மாற்றோர் மேன்மையும்
பாசறைப் புலம்பலு முடிந்த காலத்துப்
பாகனொடு விரும்பிய வினைத்திற வகையினும்

காவற் பாங்கி னாங்கோர் பக்கமும்
பரத்தையி னகற்சியிற் பிரிந்தோட் குறுகி
இரத்தலுந் தெளித்தலு மெனவிரு வகையோ
டுரைத்திற நாட்டங் கிழவோன் மேன.

இது

பிரிவின்கண் தலைமகற்குக் கூற்று நிகழும் இடன் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—ஒன்றாத் தமரினும் பருவத்தும் சுரத்தும் ஒன்றிய மொழியொடு வலிப்பினும் விடுப்பினும் என்பது, வரைவு உடன்படாத தமர்கண்ணும் பருவத்தின்கண்

ணும் சுரத்தின்கண்ணும் பொருந்திய சொல்லொடு

தலைமகளை உடன்கொண்டு

போகத்துணியினும் விடுத்துப்போகினும் கிழவோர்க்குக் கூற்று நிகழும் என்றவாறு.

'உரைத்திற நாட்டம் உளவாம் கிழவோற்கு'

என்பதை ஏனைய பகுதிக்கும் ஓட்டுக,



வலித்தற்குச் செய்யுள் :—

"*ஆறுசெல் வருத்தஞ் சீறடி சிவப்பவுஞ்
சினைநீங்கு தளிரின் வண்ணம் வாடவுந்
தான்வர றுணிந்த விவளினு மிவளுடன்

வேய்பயி லழுவ முவக்கும்

பேதை நெஞ்சம் பெருந்தக வுடைத்தே

"

எனவும,

" வேட்டச் செந்நாய் கிளைத்தூண் மிச்சில்

குளவி மொய்த்த வழுகற் சின்னீர்

வளையுடைக் கைய ளெம்மோ டுணீஇய

வருகதில் லம்ம தானே

அளியளோ வளியளென் னெஞ்சமர்ந் தோளே"

[குறுந்-டுசு]

எனவும் வரும்.

அவ்வழி இடைச்சுரத்திற் கூறியதற்குச் செய்யுள் :—

" அழிவில முயலு மார்வ மாக்கள்

வழிபடு தெய்வங் கட்கண் டாஅங்

கலமரல் வருத்தந் தீர யாழநின்

நலமென் பணைத்தோ ளெய்தின

மாகலிற்

பொரிப்பூம்

புன்கி னெழிற்றகை யொண்முறி

சுணங்கணி வனமுலை யணங்குகொளத்

நிழல்காண் டோறு நெடிய வைகி
மணல்காண் டோறும் வண்ட றைஇ
வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே
மாநனை கொழுதி மகிழ்குயி லாலு
நறுந்தண் பொழில கானங்
குறும்ப லூர யாஞ்செல்லு மாறே

[நற்-கூ]
எனவரும்.

விடுத்தற்குச் செய்யுள் :—
" இரும்புலிக் கிரிந்த கருங்கட் செந்நாகு
காட்டயிர்
கடைகுரல் கேட்டொறும் வெரூஉம்
ஆங்கலைப் புள்ளி யல்க நம்மொடு
மானுண் கண்ணியும் வருமெனின்

வாரா ராயரோ பெருங்க லாறே"

எனவரும். இஃது உடன் கொண்டு பெயர்தல் வேண்டுமென்ற தோழிக்குக் காட் டது கடுமை கூறி விடுத்தது.

“கிளிபுரை கிளவியா யெம்மொடு நீவரிற்
றளிபொழி தளிரன்ன வெழின்மேனி
கவின்வாட
முளியரில்
பொத்திய முழங்கழ லிடைபோழ்ந்த
வளியுறி
னவ்வெழில் வாடுவை யல்லவோ” [கலி-பாலை-கஉ] என்பது
தலைவிக்குக் காட்டது கடுமை கூறி விடுத்தது.

௬௦ தொல்காப்பியம் -
இளம்பூரணம்

இடைச்சுரம் மருங்கின் அவள் தமர் எய்திக் கடைக்கொண்டு பெயர்தலில் கலங்கு
அஞர் எய்திக் கற்பொடு புணர்ந்த கௌவை உளப்பட அப்பால் பட்ட ஒரு திறத்தானும்

என்பது, தலைமகள் செல்கின்ற இடைச்சுரத்திடைத்
தலைமகள் தமர் எய்தி மீட்டுக்
கொண்டு பெயர்தல் மரபாதலின் அங்ஙனம்
பெயர்வர் எனக் கலங்கி வருத்தமுற்றுக்
கற்பொடு புணர்ந்த அலர் உளப்பட
அப்பகுதிப்பட்ட உடன்போக்கின்கண்ணும்
அவற்குக் கூற்று நிகழும் என்றவாறு.

அவ்வழி, வருவரெனக்கூறலும்
வந்தவழிக்கூறலும் உளவாம்.

உதாரணம் :—" வினையமை பாவையி னியலி
நுந்தை

மனைவரை யிறந்து வந்தனை யாயிற்
றலைநாட் கெதிரிய தண்பெய லெழிலி
யணிமிகு கானத் தகன்புறம்
பரந்த
கடுஞ்செம் மூதாய் கண்டுங் கொண்டும்
நீவிளை யாடுக சிறிதே யானே
மழகளி றுரிஞ்சிய பராஅரை வேங்கை
மணலிடு மருங்கி னிரும்புறம் பொருந்தி
அமர்வரி னஞ்சேன் பெயர்க்குவன்
நுமர்வரின் மறைகுவென் மாஅ யோளே." [நற்-௩௬௨]

இது வருவர் என ஐயுற்றுக்கூறியது. ' கற்பொடு
புணர்ந்த கௌவை'க்குச் செய்யுள்
வந்தவழிக் கண்டுகொள்க.

நாளது சின்மையும் இளமையது அருமையும்
தாளாண் பக்கமும் தகுதியது அமை
தியும் இன்மையது இளிவும் உடைமையது
உயர்ச்சியும் அன்பினது அகலமும் அகற்
சியது அருமையும் ஒன்றாப் பொருள்வயின் ஊக்கிய

பாலினும் என்பது, நாளது சின்மை
முதலாகச் சொல்லப்பட்ட எட்டனையும்

பொருந்தாத பொருட்கண் ஊக்கிய பக்கத்தி
னும் அவற்குக் கூற்று நிகழும் என்றவாறு.
'ஒன்று' என்னும் பெயரெச்சம் 'பால்'

என்னும் பெயர் கொண்டு முடிந்தது.
அது 'பொருள்வயி னூக்கிய பால்' என அடையடுத்து

நின்றது.

நாளது சின்மையை ஒன்றுமையாவது, யாக்கை நிலையாது என உணரும் உணர்ச்சியைப் பொருந்தாமை.

இளமையது அருமையை ஒன்றுமையாவது,
என உணரும் உணர்ச்சியைப் பொருந்தாமை.

பெறுதற்கரிய இளமை நிலையாது

தாளாண் பக்கத்தை ஒன்றுமையாவது, முயற்சியான்
ரும் உணர்ச்சியைப் பொருந்தாமை.

வரும் வருத்தத்தை உண

தகுதியது அமைதியை ஒன்றுமையாவது, பொருண்மேற் காதல் உணர்ந்தோர்க்குத் தகாது என உணரும் உணர்ச்சியைப் பொருந்தாமை.

இன்மையது இளிவை ஒன்றாமையாது, இன்மையான் வரும் இளிவரவினைப் பொருந்தாமை.

உடைமையது உயர்ச்சியை ஒன்றாமையாவது, பொருள் உடையார்க்கு அமைவு வேண்டுமன்றே, அவ்வமைவினைப் பொருந்தாமை: அஃதாவது மென்மேலும் ஆசை செலுத்துதல்.

பொருளதிகாரம் - அகத்திணையியல் 

அன்பினது அகலத்தை ஒன்றாமையாவது, சிறந்தார்மாட்டுச் செல்லும் அன்பினைப் பொருந்தாமை.

அகற்சியது அருமையை ஒன்றாமையாவது, பிரிதலருமையைப் பொருந்தாமை.

பொருள் தேடுவார் இத்தன்மைய ராதல் வேண்டுமென ஒருவாற்றான் அதற்கு இலக்கணங் கூறியவாறு.

வாயினும் கையினும் வகுத்த பக்கமோடு ஊதியம் கருதிய ஒரு திறத்தானும் என்பது, வாயான் வகுத்த பக்கமோடும் கையான் வகுத்த பக்கமோடும் பயன் கருதிய ஒரு கூற்றானும் அவற்குக் கூற்று நிகழும் என்றவாறு.

வாயான் வருத்த பக்கமாவது-ஓதுதல். கையான் வருத்த பக்கமாவது-படைக்கலம் பயிற்றலும் சிற்பங்கற்றலும். ஊதியங் கருதிய ஒருதிறனாவது மேற்சொல்லப்பட்ட

பொருள்வயிற் பிரிதலன்றி அறத்திறங் காரணமாகப் பிரியும் பிரிவு. இது, மறுமைக்கண்

பயன் தருதலின் 'ஊதியம்' ஆயிற்று.

" அறத்தினூஉங் காக்கமு மில்லை

யதனை

மறத்தலி னூங்கில்லை கேடு"

[குறள்-௩௨]

என்பதனானும் அறிக.

புகழும் மானமும் எடுத்து வற்புறுத்தலும் என்பது, பிரிந்ததனான் வரும் புகழும் பிரியாமையான் வரும் குற்றமும் குறித்துத் தலைமகளை யான் வருந்துணையும் ஆற்றி

யிருத்தல் வேண்டுமெனக் கூறுதற்கண்ணும் அவற்குக் கூற்று நிகழும் என்றவாறு.

பொருள்வயின் ஊக்கிய பாலினும் ஊதியம்

கருதிய ஒருதிறத்தானும் வற்

புறுத்தல் எனக்கூட்டுக.

உதாரணம் :—

> "அறனு மீகையு மன்புங் கிளையும்
> புகழு மின்புந் தருதலிற் புறம்பெயர்ந்து
> தருவது துணிந்தமை பெரிதே
> விரிபூங் கோதை விளங்கிழை பொருளே"

எனவரும்.

தூதிடை இட்ட வகையினும் என்பது, இரு பெரு வேந்தர் இகலியவழிச் சந்து செய்தற்குத் தூதாகிச் செல்லும் வகையின்கண்ணும் அவற்குக் கூற்று நிகழும்.

ஆகித் தோன்றும் பாங்கோர் பாங்கினும் என்பது, தனக்குப் பாங்காகித் தோன்றுவார் பக்கத்துப் பிரியும்வழியும் அவற்குக் கூற்று நிகழும் என்றவாறு. அதுவும் வேந்தற்கு உற்றுழிப் பிரியும் பிரிவு.

மூன்றன் பகுதியாவன, நால்வகை வலியினும் தன்வலியும் துணைவலியும் வினை வலியும் என்பன. அவை பகைவர்மாட்டுள்ளன.

மண்டிலத்து அருமையாவது, பகைவர் மண்டிலங் கொண்ட அருமை என்றவாறு.

தோன்றல் சான்ற என்பது, (இவை) மிகுதல் சான்ற என்றவாறு.

மாற்றோர் மேன்மையாவது, மாற்றோரது உயர்ச்சியானும் என்றவாறு. ஆறன் உருபு எஞ்சிநின்றது.

6



மூன்றன் பகுதியானும் மண்டிலத்தருமையானும் தோன்றல் சான்ற மாற்றோர்

எனக் கூட்டுக.

பாசறைப் புலம்பல் என்பது, பாசறைக்கண் தலைமகன் தனிமையுரைத்தல் என்றவாறு.

தூதிடை வகையினானும், வேந்தற்கு உற்றுழியினானும், மாற்றோர் மேன்மையினானும் பாசறைக்கட் புலம்பல் எனக்கூட்டுக. அஃதாவது, தூதினும் வேந்தற்குற்றுழியினும் பகைதணிவினையினும் பாசறைக்கட் புலம்பல் உளதாகும் எனக்கொள்க.

**உதாரணம் :—**

“ வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த

வளைகளைந் தொழித்த கொழுந்தி னன்ன
தளைபிணி யவிழாச் சுரிமுகிழ்ப் பகன்றை
சிதரலந் துவலை தூவலின் மலருந்
தைஇ நின்ற தண்பெயற் கடைநாள்
வயங்குகதிர் கரந்த வாடை வைகறை
விசும்புரி வதுபோல் வியலிடத் தொழுகி
மங்குன் மாமழை தென்புலம் படரும்
பனியிருங் கங்குலுந் தமிய ணீந்தித்
தன்னூ ரோளே நன்னுதல் யாமே
கடிமதிற் கதவம் பாய்தலிற் றொடிபிளந்து
நுதிமுக மழுங்கிய மண்ணைவெண் கோட்டுச்
சிறுகண் யானை நெடுநா வொண்மணி
கழிபிணிக் கறைத்தோற் பொழிகணை

யுதைப்பத்

தழங்குகுரன் முரசமொடு மயங்கும்

யாமத்துக்

கழித்துறைச் செறியா

வாளுடை யெறுழ்த்தோள் இரவுத்துயின்

மடிந்த தானை

உரவுச்சின வேந்தன் பாசறை யோமே."

[அகம்-உச] இது வேந்தற்கு உற்றுழிப் பிரிந்த தலைமகன்

கூற்று.

"வைகுபுலர் விடியல மைபுலம் பரக்கக்
கருநனை யவிழ்ந்த வூழுறு முருக்கின்
எரிமருள் பூஞ்சினை யினச்சித ரார்ப்ப
நெடுநெ லடக்கிய கழனியோர் புகுத்துக்
குடுமிக் கட்டிய படப்பையொடு மிளிர
அரிகால் போழ்ந்த தெரிபகட் டுழவர்
ஓதைத் தெள்விழி புலந்தொறும் பரப்பக்
கோழிணர் எதிரிய மரத்த கவினிக்
காடணி கொண்ட காண்டகு பொழுதின்
நாம்பிரி புலம்பி னலஞ்செலச் சாஅய்
நம்பிரி பறியா நலனொடு சிறந்த
நற்றோ ணெகிழ வருந்தினள் கொல்லோ



மென்சிறை வண்டின் றண்கமழ் பூந்துணர்த்
தாதின் றுவலை தளிர்வார்ந் தன்ன

அங்கலும் மாமைக் கிளைஇய

நுண்பஃ றித்தி மாஅ யோளே" [அகம்-சக]

என்பது பகையிற் பிரியும் தலைமகன் கூற்று. பிறவும் அன்ன. இவ்வாறு வருவன

குறித்த பருவம் பிழைத்துழி என்று கொள்க.

முடிந்த காலத்துப் பாகனொடு விரும்பிய வினைத்திற வகையினும் என்பது, வினை

முடிந்த காலத்துப் பாகனொடு விரும்பப்பட்ட

வினைத்திறத்தினது வகையின்கண்ணும்

அவற்குக் கூற்று நிகழும் என்றவாறு.

அது பாகனைக்கட் கூறலும், மீண்டு இடைச்சுரத்துக் கூறலும் என இரு

வகைப்படும். இன்னும், 'வகை' என்றதனான் நெஞ்சிற்குக் கூறியனவுங்கொள்க.

உதாரணம் :—

"வந்துவினை முடித்த வேந்தனும்

பகைவருந்

தந்திறை கொடுத்துத் தமரா யினரே

முரண்செறிந் திருந்த சேனை யிரண்டும்

ஒன்றென வறைந்தன பணையே

நின்றேர்

முன்னியங் கூதிர்ப் பின்னிலை யீயா

தார்க பாக வொருவினை கழிய
நன்ன னேற்றை நறும்பூ ணத்தி

துன்னருங் கடுந்திறற் கங்கன் கட்டி
பொன்னணி வல்விற் புன்றுறை

யென்றாங்

கன்றவர் குழீஇய வளப்பருங் கட்டூர்ப்
பருந்துபடப் பண்ணிப்

பழையன் பட்டெனக்

கண்டது நோனா னாகித் திண்டேர்க்
கணைய னகப்படக் கழுமலந் தந்த

பிணையலங் கண்ணிப் பெரும்பூட் செ

ன்னி

அழும்பி லன்ன வறாஅ யாணர்ப்
பழம்பன் னெல்லின் பல்குடிப் பரவைப்
பொங்கடி படிகய மண்டிய பசுமிளைத்

தண்குட வாயி லன்னோள்
பண்புடை யாகத் தின்றுயில் பெறவே"

எனவும்,

[அகம்-சச]

" கேள்கே ளேன் றவுங் கிளைஞ ராரவுங்

கேளல் கேளிர் கெழிஇயின ராழுகவும்

ஆள்வினைக் கெதிரிய வூக்கமொடு புகல்சிறந்

தாரங் கண்ணி யடுபோர்ச் சோழர்

அறங்கெழு நல்லவை யுறந்தை யன்ன

பெறலரு நன்கல மெய்தி நாடுஞ்

செயலருஞ் செய்வினை முற்றின

மாயின்

அரண்பல கடந்த முரண்கொ டானை

வாடா வேம்பின் வழுதி கூடல்

நாளங் காடி நாறு நறுநுதல்

தொல்காப்பியம் - இளம்பூரணம்

நீளிருங் கூந்தன் மாஅ யோளொடு

வரைகுயின் றன்ன வான்றோய் நெடுநகர்

நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை

நிவந்த பள்ளி நெடுஞ்சுடர் விளக்கத்து
நலங்கே ழாகம் பூண்வடுப் பொறிப்ப
முயங்குகஞ் சென்மோ நெஞ்சே வரிநுதல்
வயந்திகழ் பிழிதரும் வாய்புகு கடாஅத்து
மீளி முன்பொடு நிலனெறியாக் குறுகி
ஆட்கோட் பிழையா வஞ்சுவரு
தடக்கைக்
கடும்பகட் டியானை நெடுந்தேர்க் கோதை
திருவமர் வியனகர்க் கருவூர் முன்றுறைத்
தெண்ணீ ருயர்கரைக் குவைஇய
தண்ணான் பொருநை மணலினும்
பலவே" [அகம்-௯௩]

எனவும் வருவன நெஞ்சிற்குக் கூறியன.

"கொல்வினைப் பொலிந்த கூர்ங்குறும் பெஃகின்
வில்லோர் தூணி வீங்கப் பெய்த
அப்புநுனை யேய்ப்ப வரும்பிய விருப்பைச்
செப்படா ரன்ன செங்குழை யகந்தோ
றிழுதி னன்ன தீம்புழற் றுய்வாய்
உழுதுகாண் டுளைய வாகி யார்கழல்
பாலி வானிற் காலொடு பாறித்
துப்பி னன்ன செங்கோட் டியவின்
நெய்த்தோர் மீமிசை நிணத்திற் பரிக்கும்

அத்த நண்ணிய வங்குடிச் சிறூர்க்
கொடுநுண் ணோதி மகளி ரோச்சிய

தொடிமா ணுலக்கைத் தூண்டுரற் பாணி
நெடுமால் வரைய குடிஞையோ

டிரட்டும்

குன்றுபின் னொழியப் போகி

யுரந்துரந்து

ஞாயிறு படினு மூர்சேய்த் தெனாது
துனைபரி துரக்குந் துஞ்சாச் செலவின்
எம்மினும் விரைந்துவல் லெய்திப் பன்மாண்
ஓங்குயர் நல்லி லொருசிறை நிலைஇப்
பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவிக்

கன்றுபுகு மாலை நின்றோ ளெய்திக்
கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ

நாணொடு மிடைந்த கற்பின் வாணுதல்
அந்தீங் கிளவிக் குறுமகள்

மென்றோள் பெறநசைஇச் சென்றவென் னெஞ்சே." [அகம்-௯]
இஃது இடைச்சுரத்துச் சொல்லியது.

காவல் பாங்கின் ஆங்கு ஓர் பக்கமும் என்பது, காவற்பக்கத்தின்கண் ஒரு பிரிவி

னும் கூற்று நிகழும் என்றவாறு.

'ஆங்கு' என்பது இடங்குறித்து நின்றது; "நின்னுங்கு வரூஉமென்னெஞ்சினை"

[கலி-பாலை-உஉ] என்றாற் போலக் கொள்க. இது வாரியுள் யானை காணவும், நாடுகாண

வும், புனலாடவும், கடவுளரை வழிபடவும் பிரியும் பிரிவு. ஒருபக்கம் நாட்டெல்லையி

லிருந்து பகைவரைக் காக்கவேண்டிப் பிரிவது பகைவயிற் பிரிவின் அடங்குதலின்,

அஃது தன் உண்மைக்கண் பிரியும் பிரிவு என்று ஓதப்பட்டது.

பரத்தையின் அகற்சியின் என்பது, பரத்தையிற் பிரியும் பிரிவின்கண்ணும்

என்றவாறு. உம்மை எஞ்சி நின்றது.

பிரிந்தோட் குறுகி இரத்தலும் தெளித்தலும் என இருவகையோடு என்பது,

பிரியப்பட்ட தலைமகளைக் குறுகி இரத்தலும் தெளித்தலும் ஆகிய இரண்டு வகையோ

டே கூட என்றவாறு.

காவற்பாங்கின் ஆங்கோர் பக்கத்தினும்
பரத்தையின் அகற்சியினும் பிரியப்பட்
டார் எனக் கூட்டுக. அஃதேல் பரத்தையின் அகற்சி
ஊடலாகாதோ வெனின், ஊட
லின் மிக்க நிலையே ஈண்டுக் கூறுகின்றதெனக் கொள்க.

**கடவுள்மாட்டுப் பிரிந்துவந்த தலைமகனைத்**
**தலைமகள் புணர்ச்சி மறுத்தற்குச்**
**செய்யுள்:—**

மருதக்கலியுள் கடவுட் பாட்டினுள் [கலி-மரு-உஅ],

"வண்டூது சாந்தம் வடுக்கொள நீவிய
தண்டாத்தீஞ் சாயற் பரத்தை வியன்மார்ப
பண்டின்னை யல்லைமன் னீங்கெல்லி வந்தீயக்
கண்டதெவன் மற் றுரை ;

என்றும்,
தடைஇய மென்றோளாய் கேட்டீவா யாயின்
உடனுறை வாழ்க்கைக் குதவி யுறையுங்
கடவுளர் கட்டங்கி னேன் :
சோலை, மலர்வேய்ந்த மான்பிணை யன்னார் பலர்நீ
கடவுண்மை கொண்டொழுகு வார்"

எனவும்,

"சிறுவரைத் தங்கின் வெகுள்வர்
செறுத்தக்காய்
தேறினென் சென்றீநீ சொல்லாய் விடுவாயேல்
நற்றா ரகலத்துக் கொருசார் மேவிய
நெட்டிருங் கூந்தற் கடவுள ரெல்லார்க்கு
மூட்டுப்பா டாகலு முண்டு"

எனவும் புணர்ச்சிக்கு உடன்படாது கூறுதலானும்,

குறும்பூழ்ப் பாட்டினுள் [கலி-மரு-௯௫],

"விடலைநீ நீத்தலி னோய்பெரி தேய்க்கும்
நடலைப்பட் டெல்லாநின் பூழ்."

என்றவழி மருதநிலத்தின் தலைமகனை விடலை என்றமையானும், இதனுள்



"பொய்யெல்லா மேற்றித் தவறு தலைப்பெய்து
கையொடு கண்டாய் பிழைத்தே னருளினி"

என இரந்தமையானும் கண்டு கொள்க.

"ஒரூஉக், கொடியிய னல்லார் குரனுற்றத் துற்ற
முடியுதிர் பூந்தாது மொய்ம்பின வாகத்
தொடீஇய வெமக்குநீ யாரை பெரியார்க்
கடியரோ வாற்றா தவர்;
கடியர்தமக் கியார் சொல்லத் தக்கார் மற்று;

வினைக்கெட்டு, வாயல்லா வெண்மை யுரையாது
சென்றீ நின் மாய மருள்வா ரகத்து ;

ஆயிழாய், நின்கண் பெறினல்லா லின்னுயிர்
வாழ்கல்லா

என்க ணெவனோ தவறு ;
இஃதொத்தன், புள்ளிக் களவன் புனல்சேர்

பொதுக்கம்போல்

வள்ளுகிர் போழ்ந்தனவும் வாளெயி றுற்றனவும்
ஒள்ளிதழ் சேர்ந்தநின் கண்ணியு நல்லார்
சிர றுபு சீறச் சிவந்தநின் மார்பும்
தவறுதல் சாலாவோ கூறு ;
அதுதக்கது,

வேற்றுமை யென்கண்ணோ வோரா தி தீதின்மை
தேற்றக்கண் டியாய் தெளிக்கு ;
இனித் தேற்றேம் யாம்,
தேர்மயங்கி வந்த தெரிகோதை யந்நல்லார்
தார்மயங்கி வந்த தவறஞ்சிப்
போர்மயங்கி
நீகூறும் பொய்ச்சூ ளணங்காகின் மற்றினி
யார்மேல் விளியுமோ கூறு". [கலி-மரு உக]

இதனுள் இரத்தலும் தெளித்தலும் வந்தவாறு கண்டுகொள்க.

கலித்தொகையிற் கடவுட்பாட்டினுள் உரிப்பொருண்மை பற்றிவரும் பாட்டுக் களும் மருதநிலத்துத் தலைமகன் பெயர் கூறாது பிற பெயர்படக் கோத்தமையானும் ஊடற்பொருண்மையின் வேறுபாடுண்மை அறிக.

உரைத்திறம் நாட்டம் கிழவோன் மேன என்பது, இவ்விவ்விடங்கள்பற்றி உரை யாடுங் குறிப்புத் தலைமகன் மேலன என்றவாறு (௪௨)

௪௫. எஞ்சி யோர்க்கு மெஞ்சுத லிலவே.

இதுகாறும் பிரிவின்கண் கூறுதலுரியார் பலருள்ளும் நற்றாயும் செவிலியும் கண் டோரும் தோழியும் தலைமகனும் கூறுங்கூற்றுக் கூறினார். இஃது அவரை யொழிந்த தலை மகட்கும் பாங்கற்கும் பார்ப்பார்க்கும் பாணர்க்கும் கூத்தர்க்கும் உழையோர்க்கும் கூற்று நிகழுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—எஞ்சியோர்க்கும் எஞ்சுதல் இல-முன்னர்க் கூறாது எஞ்சி நின்றார்க்கும் கூற்று ஒழிதல் இல.

'பாங்கர் முதலாயினாரை இச்சூத்திரத்தாற் கூறுப; தலைமகள் கூற்றுத் தனித் துக் கூறல் வேண்டும், இவரோடு ஒரு நிகரன்மையின்' எனின், ஒக்கும். தலைமகள்



கூற்று உணர்த்திய சூத்திரம் காலப் பழமையாற் பெயர்த்தெழுதுவார் விழ எழுதினார் போலும். ஆசிரியர் இச்சூத்திரத்தானும் பொருள் கொள்ள வைத்தமையின், தலை மகள் கூற்று வருமாறு. தலைமகன் பிரிதலுற்ற தலைமகன் குறிப்புக் கண்டு கூறுதலும், பிரிவுணர்ந்து கூறுதலும்,

பிரிவுணர்த்திய தோழிக்குக் கூறுதலும், உடன்போவல் எனக் கூறுதலும், இடைச்சுரத்து ஆயத்தார்க்குச் சொல்லி விட்டனவும், தமர்வந் துற்றவழிக் கூறுதலும், மீளலுற்ற வழி ஆயத்தார்க்குக் கூறிவிட்டனவும், பிரிவாற்றாமையும், ஆற்றுவல் என்பது படக் கூறுதலும், தெய்வம் பராவலும், பருவங்கண்டு கூறுதலும், வன்புறை எதிரழிந்து கூறுதலும் இவையெல்லாம் கூறப்படும்.

**பிரியலுற்ற தலைமகன் குறிப்புக்கண்டு கூறியதற்குச் செய்யுள் :—**

"நெஞ்சு நடுக்குறக் கேட்டுங் கடுத்துந்தாம்
அஞ்சிய தெல்லா மணங்காகு

மென்னுஞ்சொல்

இன்றீங் கிளவியாய் வாய்மன்ற நின்கேள்
புதுவது பன்னாளும் பாராட்ட யானும்
இதுவொன் றுடைத்தென வெண்ணி யதுதேர
மாசில்வான் சேக்கை மணந்த புணர்ச்சியுட்
பாயல்கொண் டென்றோட் கனவுவா ராய்கோல்
தொடிநிரை முன்கையாள் கையாறு கொள்ளாள்
கடிமனை காத்தோம்ப வல்லுவள் கொல்லோ .

இடுமருப் பியானை யிலங்குதேர்க் கோடு
நெடுமலை வெஞ்சுரம் போகி நடுங்கின்றெஞ்
செய்பொருண் முற்று மளவென்று ராயிழாய்
தாமிடை கொண்ட ததுவாயிற்
றம்மின்றி

யாமுயிர் வாழு மதுகை யிலேமாயில்
தொய்யி றுறந்தா ரவரெனத் தம்வயின்
நொய்யார் நுவலும் பழிநிற்பத் தம்மொடு
போயின்று சொல்லென் னுயிர்." [கலி-பாலை-உக]

பிரிவுணர்ந்த தலைமகள் தலைமகனுடன் கூறியதற்குச்
செய்யுள் :—

"செவ்விய தீவிய சொல்லி யவற்றொடு
பைய முயங்கிய வஞ்ஞான் றவையெல்லாம்
பொய்யாதல் யான்யாங் கறிகோ
மற்றைய

அகனகர் கொள்ளா வலர்தலைத் தந்து
பகன்முனி வெஞ்சுர முள்ள லறிந்தேன்
மகனல்லை மன்ற வினி;

செல்லினிச் சென்றுநீ செய்யும் வினைமுற்றி
அன்பற மாறியா முள்ளத் துறந்தவள்
பண்பு மறிதிரோ வென்று வருவாரை
என்றிறம் யாதும் வினவல் வினவிற்

பகலின் விளங்குநின் செம்மல் சிதையத்
தவலருஞ் செய்வினை முற்றாமலாண்டோர்
அவலம் படுதலு முண்டு." [கலி-பாலை-கஅ] "அ

தொல்காப்பியம் - இளம்பூரணம்

பிரிவுணர்த்திய தோழிக்குக் கூறியதற்குச் செய்யுள்
:—

"அருளு மன்பு நீக்கித் துணைதுறந்து
பொருள்வயிற் பிரிவோ ருரவோ ராயின்
உரவோ ருரவோ ராக
மடவ மாக மடந்தை நாமே."

"செல்லாமை யுண்டே லெமக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை." [குறள்-ககடுக] என்பதும் அது.

உடன்போக்கு ஒருப்பட்டதற்குச் செய்யுள் :—

"சிலரும் பலருங் கடைக்க ணோக்கி
மூக்கி னுச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி
மறுகிற் பெண்டி ரம்ப லூற்றச்
சிறுகோல் வலந்தன ளன்னை யலைப்ப
அலந்தனெனென் வாழி தோழி கானற்
புதுமலர் தீண்டிய பூநா றுகுரூஉச்சுவற்
கடுமா பூண்ட நெடுந்தேர் கடைஇ

நடுநாள் வருஉ மியறேர்க் கொண்கனொடு
செலவயர்ந் திசினல் யானே
அலர்சுமந் தொழிகவிவ் வழுங்க லூரே."

[நற்றிணை-கசுக]

இடைச்சுரத்து ஆயத்தார்க்குச் சொல்லிவிட்டதற்குச் செய்யுள்.—

" சேட்புல முன்னிய விரை நடை யந்தணிர்
நும்மொன் றிரந்தனென் மொழிவ லெம்மூர்
யாய்நயந் தெடுத்த வாய்நலங் கவின
ஆரிடை யிறந்தன ளென்மின்
நேரிறை முன்கையென் னுயத்
தோர்க்கே." [ஐங்குறு-௩௮௪]

"கடுங்கட் காளையொடு நெடுந்தே ரேறிக்
கோள்வல் வேங்கைய மலைபிறக் கொழிய
வேறுபல் லருஞ்சுர மிறந்தன
ளவளெனக்
கூறுமின் வாழியோ வாறுசென் மாக்கள்
நற்றோ ணயந்துபா ராட்டி
எற்கெடுத் திருந்த வறனில் யாய்க்கே."

[ஐங்குறு-௩௮௫]

தமர் வந்துற்றவழிக் கூறியதற்குச் செய்யுள் :—

" அறஞ்சா லியரோ வறஞ்சா லியரோ
வறனுண் டாயினு மறஞ்சா லியரோ

வாள்வனப் புற்ற வருவிக்
கோள்வ லென்னையை

மறைத்த குன்றே." [ஐங்குறு-ருகஉ]

**மீண்டு வருவாள் ஆயத்தார்க்குக் கூறிவிட்டதற்குச் செய்யுள் :—**

" கவிழ்மயி ரெருத்திற் செங்கா

யேற்றைக்

குருளைப் பன்றி கொள்ளாது கழியும்
சுரநணி வாரா நின்றன ளென்பது



முன்னுற விரைந்தநீ ருரைமின்
இன்னகை முறுவலென் னுயத் தோர்க்கே."

[ஐங்குறு-ருகூஎ] பிரிவாற்றமைக்குச் செய்யுள் :—

" அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும் பிரிவோ

ரிடத்துண்மை யான்." [குறள்-ககருரு] " அஞ்சுவல் வாழி தோழி சென்றவர்
நெஞ்சுணத் தெளித்த நம்வயின்
வஞ்சஞ் செய்தல் வல்லின வாறே."

" அரும்பெறற் காதல ரகலா மாத்திரம்
இரும்புத லீங்கை யிளந்தளிர் நடுங்க
அலங்குகதிர் வாடையும் வந்தன் று
கலங்கலு ரெவ்வந் தோழிநா முறவே." இவை
பிரிந்தார் என்றவழிக் கூறியன.

ஆற்றுவல் என்பதுபடக் கூறியதற்குச் செய்யுள் :—
" தோளுந் தொடியு நெகிழ்ந்தன நுதலும்
நெய்யுகு பள்ளி யாகுக தில்ல
யானஃ தவலங் கொள்ளேன் றானஃ
தஞ்சுவரு கான மென்றதற்
கஞ்சுவ ளோழி நெஞ்சத் தானே."

தெய்வஞ் பராஅயதற்குச் செய்யுள் :—
" புனையிழா யீங்குநாம் புலம்புறப்
பொருள்வெஃகி
முனையென்னார் காதலர் முன்னிய
வாற்றிடைச்

சினைவாடச் சிறக்குயின் சினந்தணிந்

தீகெனக்

கனைகதிர்க் கனலியைக் காமுற வியைவதோ."

[கலி-பாலை-கரு] பருவங்கண்டு கூறியதற்குச் செய்யுள்:—

"என்னொடு புலந்தனர் கொல்லோ காதலர்
மின்னொடு முழங்குதா வானம்
நின்னொடு வருது மெனத்தெளிந் தோரே."

வன்புறை எதிரழிந்து கூறியதற்குச் செய்யுள்:—

"வெறுக்கைக்குச் சென்றார் விளங்கிழாய் தோன்றார்
பொறுக்கவென் றாற்பொறுக்க லாமோ—ஒறுப்பபோற்
பொன்னு ளுறுபவளம் போன்ற

புணர்முருக்கம்

என்னு ளுறுநோய் பெரிது."

[திணைமாலை-கூஎ] தூதுவிடக் கூறியதற்குச் செய்யுள்:—

"காண்மதி பாணநீ யுரைத்தற் குரியை
துறைகெழு கொண்கன் பிரிந்தென

7

இறைகே ழெல்வளை நீங்கிய நிலையே." [ஐங்குறு-கசுய]

ஆயத்தார் கூறியதற்குச் செய்யுள் :—

"மாந்தர் மயங்கிய மலைமுதற் சிறுநெறி
தான்வரு மென்ப தடமென் றோழி
அஞ்சின ளஞ்சின ளொதுங்கிப்
பஞ்சி மெல்லடிப் பரல்வடுக் கொளவே."

பாணர் கூறியதற்குச் செய்யுள் :—

"நினக்கியாம் பாணரு மல்லே மெமக்கு
நீயுங் குருசிலை யல்லை மாதோ
நின்வெங் காதலி நன்மனைப் புலம்பி
ஈரித ழுண்க ணுகுத்த
பூசல் கேட்டு மருளா தோயே."

[ஐங்குறு-ச அ ம]

பார்ப்பார் கூறியதற்குச் செய்யுள் :—

"துறந்ததற் கொண்டு துயரடச் சாஅய்
அறம்புலந்து பழிக்கு மளைக ணாட்டி
எவ்வ நெஞ்சிற் கேம மாக

வந்தன ளேநின் மடமகள்

வெந்திறல் வெள்வேல் விடலைமுந் துறவே." [ஐங்குறு-கூகூகூ]

()

௬௬. நிகழ்ந்தது நினைத்தற் கேதுவு மாகும்.

இதுவும் பாலைக்கு உரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :— நிகழ்ந்தது நினைத்தற்கு ஏதுவும் ஆகும்-முன்பு நிகழ்ந்தது பின்பு விசாரித்தற்கு ஏதுவும் ஆகும். உம்மை எதிர்மறை.

உதாரணம் :—

" வேர்பிணி வெதிரத்துக் கால்பொரு நரலிசை
கந்துபிணி யானை யயாவுயிர்த் தன்ன
என்றூழ் நீடிய வேய்பயி லழுவத்துக்
குன்றூர் மதிய நோக்கி நின்றுநினைந்
துள்ளினே னல்லனோ யான்முள் ளெயிற்றுத்
திலகந் தைஇய தேங்கமழ் திருநுதல்
எமது முண்டோர் மதிநாட் டிங்கள்
உரறுகுரல் வெவ்வளி யெடுப்ப நிழற்பல

உலவை யாகிய மரத்த

கல்பிறங்கு மாமலை யும்பரஃ தெனவே." [நற்றிணை-௯௨]

(௪௬)

௪௭. நிகழ்ந்தது கூறி நிலையலுந் திணையே.

இதுவும் அது.

இ-ள் :—நிகழ்ந்தது கூறி நிலையலும் திணை-முன்பு நிகழ்ந்ததனைக் கூறிப் போகா தொழிதலும் பாலைத்திணையாம்.



உதாரணம் :—

"என்பருந் துயவும் வான்பொரு நெடுஞ்சினைப்

பொரியரை வேம்பின் புள்ளி நீழற்

கட்டளை யன்ன வட்டரங் கிழைத்துக்

கல்லாச் சிறூஅர் நெல்லிவட் டாடும்

வில்லே ருழவர் வெம்முனைச் சீறூர்ச்

சுரன்முதல் வந்த வுரன்மாய் மாலை
உள்ளினை னல்லனோ யானே யுள்ளிய
வினைமுடித் தன்ன வினியோள்
மனைமாண் சுடரொடு படர்பொழு
தெனவே." [நற்றிணை-ங] ()

சஅ. மரபுநிலை திரியா மாட்சிய வாகி
விரவும் பொருளும் விரவு மென்ப.

இதுவும் அது.

இ-ள் :—மரபு 'நிலை திரியா மாட்சிய ஆகி விரவும் பொருளும் விரவும் என்ப- மரபுநிலை திரியாத மாட்சிமையுடைய வாகி விரவும் பொருளும் விரவும் என்ப.

அஃதாவது பாலைக்கு ஓதிய பாசறைப் புலம்பற்கண்ணும், தேர்ப்பாகற்குக் கூறு தற்கண்ணும் முல்லைக்குரிய முதற்பொருளும் கருப்பொருளும் விரவுதலாம். இங்ஙனம் பிறவுங் கொள்க.

மரபுநிலை திரியாமையாவது, பாசறைக்கண் வினை முடித்தவழிக் கார்காலம் வந்ததாயின் ஆண்டுக் கூறும் கூற்று. அஃது அக்காலத்தைப் பற்றி வருதலின் மரபுநிலை திரியா தாயிற்று.

உதாரணம் :—

" வேந்து வினை முடித்த" என்னும் அகப்பாட்டினுள் [௱௪] கண்டுகொள்க,

இன்னும் 'மாட்சியவாகி விரவும் பொருளும் விரவும்' என்றதனால் பாசறைக் கண் தூது கண்டு கூறுதலும் தலைமகளை இடைச்சுரத்து நினைத்துக் கூறுதலும் கொள்க.

உதாரணம் :—

" நீடினை மென்று கொடுமை தூற்றி
வாடிய நுதல வாகிப் பிறிதுநினைந்
தியாம்வெங் காதலி நோய்மிகச் சாஅய்ச்
சொல்லிய துரைமதி நீயே
முல்லை நல்யாழ்ப் பாணமற் றெமக்கே."

[ஐங்குறு-௪௭௮]

இது தூது கண்டு கூறியது.

" பனிமலர் நெடுங்கண் பசலை பாயத்
துனிமலி துயரமோ
டரும்பட ருழப்போள்
கையறு நெஞ்சிற் குசாஅத்துணை யாகச்
சிறுவரைத் தங்குவை யாயிற்
காண்குவை
மன்னற் பாணவெந் தேரே." [ஐங்குறு-௪௭௭]

இது தூது விடும் தலைமகன் கூறியது.

"நெடுங்கழை முளிய வேனி னீடிக்
கடுங்கதிர் ஞாயிறு கல்பகத் தெறுதலின்
வெய்ய வாயின முன்னே யினியே
ஒண்ணுத லரிவையை யுள்ளுதொறுந்
தண்ணிய வாயின சுரத்திடை யாறே." [ஐங்குறு-௩௨௨]

இஃது இடைச்சுரத்துக் கூறியது.

௪௯. உள்ளுறை யுவம மேனை யுவமமெனத்
தள்ளா தாகுந் திணையுணர் வகையே.

இஃது, உவமவகையான் ஐந்திணைக்கும் உரியதோர் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:—உள்ளுறை உவமம் ஏனை உவமம் என-உள்ளுறைக்கண் வரும் உவமமும் ஒழிந்த உவமமும் என இருவகையாலும், திணை உணர்வகை தள்ளாது ஆகும்-திணை உணரும் வகை தப்பாதாகும். [ஏகாரம் ஈற்றசை.]

உதாரணம் முன்னர்க் காட்டுதும்.

ருய. உள்ளுறை தெய்வ மொழிந்ததை
நிலமெனக்

கொள்ளு மென்ப குறியறிந் தோரே.

இஃது, உள்ளுறையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை-உள்ளுறையாவது கருப்பொருட்டெய்வம் ஒழிந்த பொருளை, நிலம் என கொள்ளும் என்ப குறி அறிந்தோர்-இடமாகக்கொண்டு வரும் என்றுசொல்லுவர் இலக்கணம் அறிந்தோர். குறி-இலக்கணம். (ருய)

ருக. உள்ளுறுத் திதனொ
டொத்துப்பொருண் முடிகென
உள்ளுறுத் துரைப்பதே யுள்ளுறை யுவமம்.

இஃது, உள்ளுறை உவமம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—உள்ளுறுத்து பொருள் இதனோடு ஒத்து முடிக என-(உள்ளுறுத்தப்பட்ட கருப்பொருளை) உள்ளுறுத்துக் கருதிய பொருள் இதனொடு ஒத்து முடிக என, உள்ளுறுத்து உரைப்பதே உள்ளுறை உவமம்-உள்ளுறுத்துக் கூறுமதே உள்ளுறை உவமம்.

எனவே, உவமையாற் கொள்ளும் வினை பயன் மெய் உரு வன்றிப் பொருளுவமையாற் கொள்ளப்படுவது.

உதாரணம்:—

"வெறிகொ ளினச்சுரும்பு மேய்ந்ததோர் காவிக்
குறைபடுதேன் வேட்டுங் குறுகும்—நிறைமதுசேர்ந்
துண்டாடுந் தன்முகத்தே செவ்வி யுடையதோர்
வண்டா மரைபிரிந்த வண்டு."

இது வண்டோரனையர் மாந்தர் எனக் கூறுதலான் உவமிக்கப்படும் பொருள் புலப்படாமையின் உள்ளுறையுவம மாயிற்று. இதனுட் காவியும் தாமரையும் கூறுதலான் மருதமாயிற்று.

(௫௧)

## ௫உ. ஏனை யுவமந் தானுணர் வகைத்தே.

இஃது, ஏனை உவமம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—ஏனை உவமம் தான் உணர் வகைத்து-உள்ளுறை யொழிந்த உவமம் தான் உணரும் வகையான் வரும்.

தான் உணரும் வகையாவது, வண்ணத்தானுதல் வடிவானுதல் பயனுனுதல் தொழி லானுதல் உவமிக்கப்படும் பொருளொடு எடுத்துக்கூறுதல். [ஏகாரம் ஈற்றசை.]

அது வருமாறு உவமவியலுட் கூறப்படும்.

இதனுல் திணை உணருமாறு :—

"வளமலர் ததைந்த வண்டுபடு நறும்பொழின்
முளைநிரை முறுவ லொருத்தியொடு நெருநற்
குறிநீ செய்தனை யென்ப வலரே
குரவ நீள்சினை யுறையும்
பருவ மாக்குயிற் கௌவையிற் பெரிதே." [ஐங்குறு-௩௬௯]

இஃது ஊடற் பொருண்மைத்தேனும், வேனிற்காலத்து நிகழும் குயிற்குரலை உவமித்தலிற் பாலைத்திணையாயிற்று. குரவம்-குராமரம்.

" உரைத்திசிற் றோழியது புரைத்தோ
வன்றே
துருக்கங் கமழு மென்றோள்
துறப்ப வென்றி யிரீஇயரென்
னுயிரே." [சிற்றடக்கம்]
இது துருக்கம் என உவமை கூறுதலாற்
குறிஞ்சியாயிற்று. (ருஉ)
ருங. காமஞ் சாலா விளமை யோள்வயின்
ஏமஞ் சாலா விடும்பை யெய்தி
நன்மையுந் தீமையு
மென்றிரு திறத்தாற்
றன்னொடு மவளொடுந் தருக்கிய
புணர்த்துச்
சொல்லெதிர் பெறாஅன் சொல்லி
யின்புறல்
புல்லித் தோன்றுங் கைக்கிளைக்
குறிப்பே.
மேல் நடுவணைந்திணைக்குரிய பொருண்மையெல்லாம்
கூறினர். இது கைக்கிளை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.
இ-ள் :—காமம் சாலா இளமையோள்வயின்–காமம்

அமையாத இளையாள்மாட்டு, ஏமம் சாலா இடும்பை எய்தி-ஏமம் அமையாத இடும்பை எய்தி, நன்மையும் தீமையும் என்று இரு திறத்தான்-புகழ்தலும் பழித்தலுமாகிய இரு திறத்தால், தன்னொடும் அவ ளொடும் தருக்கிய புணர்த்து-தனக்கும் அவட்கும் ஒத்தன புணர்த்து, சொல் எதிர் பெறான் சொல்லி இன்புறல்-சொல் எதிர் பெறுனய்த் தானே சொல்லி இன்புறுதல், புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பு-பொருந்தித் தோன்றும் கைக்கிளைக்குறிப்பு.

'பொருந்தித்தோன்றும்' என்றதனால் அகத்தொடு பொருந்துதல் கொள்க. என்னை? 'காமஞ்சாலா' என்றதனால் தலைமைக்குக் குற்றம் வாராதாயிற்று. 'புல்லித் தோன்றும்' என்றதனால், புல்லாமற்றோன்றும் கைக்கிளையும் கொள்ளப்படும். அஃதாவது, காமஞ்சான்ற தலைமகள்மாட்டு நிகழும் மனநிகழ்ச்சி. அது களவியலுள் கூறப்படுகின்றது. ['என்று' என்பது எண்ணிடைச்சொல். ஏகாரம் ஈற்றசை.]



காமஞ் சாலா இளமையோள்வயிற் கூறியதற்குச் செய்யுள் :—

" ஊர்க்கா ணிவந்த பொதும்பரு ணீர்க்காற்
கொழுநிழன் ஞாழன் முதிரிணர் கொண்டு
கழும முடித்துக் கண்கூடு கூழை
சுவன்மிசைத் தாதொடு தாழ வகன்மதி
தீங்கதிர் விட்டது போல முகனமர்ந்
தீங்கே வருவா ளிவள்யார்கொ லாங்கேயோர்
வல்லவன் றைஇய பாவைகொ னல்லார்
உறுப்பெலாங் கொண்டியற்றி யாள்கொல்
வெறுப்பினால்
வேண்டுருவங் கொண்டதோர் கூற்றங்கொ
லாண்டார்
கடிதிவளைக் காவார் விடுதல் கொடியியற்
பல்கலைச் சில்பூங் கலிங்கத்த ளிங்கிதோர்
நல்கூர்ந்தார் செல்வ மகள் ;
இவளைச், சொல்லாடிக் காண்பென்
றகைத்து;
நல்லாய்கேள்,
ஆய்தூவி யனமென வணிமயிற்
பெடையெனத்
தூதுணம் புறவெனத் துதைந்தநின்
னெழினலம்
மாதர்கொள் மானோக்கின்

மடநல்லாய் நிற்கண்டார்ப்

பேதுறூஉ மென்பதை யறிதியோ

வறியாயோ ?

நுணங்கமைத் திரளென நுண்ணிழை

யணையென

முழங்குநீர்ப் புணையென வமைந்தநின்

றடமென்றோள்

வணங்கிறை வாலெயிற் றந்நல்லாய்

நிற்கண்டார்க்

கணங்காகு மென்பதை யறிதியோ

வறியாயோ ?

முதிர்கோங்கின் முகையென முகஞ்செய்த

குரும்பையெனப்

பெயறுளி முகிழெனப் பெருத்தநின்

னிளமுலை

மயிர்வார்ந்த வரிமுன்கை மடநல்லாய்

நிற்கண்டார்

உயிர்வாங்கு மென்பதை யுணர்தியோ

வுணராயோ ?

எனவாங்கு,

பேதுற்றாய் போலப் பிறரெவ்வ நீயறியாய்

யாதொன்றும் வாளா திறந்தீவாய் கேளினி

நீயுந் தவறிலை நின்னைப் புறங்கடைப்
போதர விட்ட நமருந் தவறிலர்
நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப்
பறையறைந் தல்லது செல்லற்க வென்ற
இறையே தவறுடை யான்."

[கலி-குறிஞ்-௨௰]

௫௪. ஏறிய மடற்றிற மிளமை தீர்திறந்
தேறுத லொழிந்த காமத்து மிகுதிறம்
மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்
செப்பிய நான்கும் பெருந்திணைக்
குறிப்பே. இது, பெருந்திணை ஆமாறு உணர்த்துதல்
நுதலிற்று.



இ-ள் :—ஏறிய மடல் திறம்-ஏறிய மடற்றிறமும், இளமை தீர்திறம்-இளமை தீர்திறமும், தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்-தேறுதலொழிந்த காமத்து மிகுதிறமும்,

மிக்க காமத்து மிடலொடு தொகைஇ-மிக்க காமத்து மாறுய திறனொடு கூட்டி, செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பு-சொல்லப்பட்ட நான்கு திறமும் பெருந்திணைக் கருத்து.

கைக்கிளை புணராது நிகழும் என்றமையால், இது புணர்ந்தபின் நிகழும் என்று கொள்க. ஏறிய மடற்றிறம் தலைமகற்கே உரித்து. அது வருமாறு :—

"எழின்மருப் பெழில்வேழ மிகுதரு
கடாத்தான்
தொழின்மாறித் தலைவைத்த
தோட்டிகை நிமிர்தாங்
கறிவுநம் மறிவாய்ந்த வடக்கமு நாணொடு
வறிதாகப் பிறரென்னை நகுபவு நகுபுடன்
மின்னவிர் நுடக்கமுங் கனவும்போன் மெய்காட்டி
என்னெஞ்ச மென்னொடு நில்லாமை நனிவௌவித் தன்னலங்
கரந்தாளைத் தலைப்படுமா றெவன்கொலோ
மணிப்பீலி சூட்டிய நூலொடு மற்றை
அணிப்பூளை யாவிரை யெருக்கொடு
பிணித்தியாத்து
மல்லலூர் மறுகின்க ணிவட்பாடு மிவனொருத்தன்
எல்லீருங் கேட்டீமி னென்று;
படரும் பனையீன்ற மாவுஞ் சுடரிழை
நல்கியா ணல்கி யவை;
பொறையென் வரைத்தன்றிப் பூநுத லீத்த

நிறையழி காமநோய் நீந்தி யறையுற்ற
உப்பியல் பாவை யுறையுற் றதுபோல
உக்கு விடுமென் னுயிர் ;
பூளை பொலமல ராவிரை வேய்வென்ற
தோளா ளெமக்கீத்த பூ ;
உரித்தென் வரைத்தன்றி யொள்ளிழை தந்த
பரிசழி பைதனோய் மூழ்கி யெரிபரந்த
நெய்யுண் மெழுகி னிலையாது பையயத்
தேயு மளித்தென் னுயிர் ;
இளையாரு மேதி லவரு முளையயான்
உற்ற துசாவுந் துணை ;
என்றியான் பாடக் கேட்டு
வன்புறு கிளவியா ளருளிவந் தளித்தலிற்
துன்பத்திற் றுணையாய மடலினி யிவட்பெற
இன்பத்து ளிடம்படலென் றிரங்கின
ளன்புற்
றடங்கருந் தோற்றத் தருந்தவ முயன்றோர்தம்
உடம்பொழித் துயருல கினிதுபெற் றாங்கே." [கலி-நெய்-உக]

இளமை தீர் திறமாவது, இளமை நீங்கிய திறத்தின்கண் நிகழ்வது. அது மூவகைப்படும் ; தலைமகன் முதியனாகித் தலைமகள் இளையளாதலும், தலைமகள் முதிய

இளம்பூரணம்

ளாகித் தலைமகன் இளையனாதலும், இவ்விருவரும் இளமைப்பருவம் நீங்கியவழி அறத்தின்மேல் மனம் நிகழ்தலன்றிக் காமத்தின்மேல் மனம் நிகழ்தலும் என.

உதாரணம்:—

" உளைத்தவர் கூறு முரையெல்லா நிற்க
முளைத்த முறுவலார்க்
கெல்லாம்—விளைத்த
பழங்க ளனைத்தாய்ப் படுகளி செய்யு
முழங்கு புன லூரன் மூப்பு."
[வெண்-இருபாற்பொருந்திணை-கசு]

இதனுள் தலைமகன் இளமை நீர் திறம் வந்தவாறு காண்க.

" அரும்பிற்கு முண்டோ வலரது
நாற்றம்
பெருந்தோள் விறலி
பிணங்கல்—சுரும்போ
டதிரும் புன லூரற் காரமிழ்த மன்றோ
முதிரு முலையார் முயக்கு."
[வெண்-இருபாற்பொருந்திணை-கக]

இதனுள் தலைமகள் இளமை நீர் திறம் வந்தவாறு காண்க.

" ஆண்டலைக் கீன்ற பறழ்மகனே

நீயெம்மை

வேண்டுவ லென்று விலக்கினை

நின்போல்வார்

தீண்டப் பெறுபவோ மற்று"

[கலி-மருதம்-உக]

எனவும்,

" உக்கத்து மேலு நடுவுயர்ந்து வாள்வாய

கொக்குரித் தன்ன கொடுமடாய்

நின்னையான்

புக்ககலம் புல்லினெஞ் சூன்றும்

புறம்புல்லின்

அக்குளுத்துப் புல்லலு மாற்றே

னருளீமோ

பக்கத்துப் புல்லல் சிறிது"

[கலி-மருதம்-உசு]

எனவும் முறையே தலைமகன் தலைமகள் ஆவார் இருவர் இளமை தீர் திறம் வந்த வாறு காண்க.

தேறுதல் ஒழிந்த காமத்து மிகு திறமாவது, தெளிவு ஒழிந்த காமத்தின்கண்ணே மிகுதலும் என்றவாறு.

இது பெரும்பாண்மை தலைமகட்கே உரித்து.

உதாரணம் :—

“ புரிவுண்ட புணர்ச்சியுட் புல்லாரா

மாத்திரை

அருகுவித் தொருவரை யகற்றலிற்

றெரிவார்கட்

செயநின்ற பண்ணினுட் செவிசுவை

கொள்ளாமை

யெனின்ற பொருள்கெடப் புரியறு

நரம்பினும்

பயனின்று மன்றம்ம காம

மிவண்மன்னும்

ஒண்ணுத லாயத்தா ரோராங்குத்

திளைப்பினும்

முண்ணுனை தோன்றாமை

முறுவல்கொண் டடக்கித்தன்

கண்ணினு முகத்தினு நகுபவள்

பெண்ணின்றி

யாவருந் தண்குரல் கேட்ப

நிரைவெண்பன்

மீயுயர் தோன்ற நகாஅ நக்காங்கே

பூவுயிர்த் தன்ன புகழ்சா லெழிலுண்கண்

ஆயிதழ் மல்க வழூம் ;

ஓஒ! அழிதகப் பாராதே யல்லல் குறுகினம்
காண்பாம் கனங்குழை பண்பு;
என்று, எல்லீரு மென்செய்தீ ரென்னை நகுதிரோ
நல்ல நகாஅலிர் மற்கொலோ யானுற்ற
அல்ல லுறீஇயான் மாய மலர்மார்பு
புல்லிப் புணரப் பெறின்;

எல்லா நீ, உற்ற தெவனோமற் றென்றிரே லெற்சிதை
செய்தா னிவனென வுற்ற திதுவென
எய்த வுரைக்கு முரனகத் துண்டாயிற்
பைதல வாகிப் பசக்குவ மன்னோவென்
நெய்தன் மலரன்ன கண்;
கோடுவாய் கூடாப் பிறையைப் பிறிதொன்று
நாடுவேன் கண்டனென் சிற்றிலுட் கண்டாங்கே
ஆடையான் மூஉ யகப்படுப்பேன் சூடிய
காணான் றிரிதருங் கொல்லோ மணிமிடற்று
மாண்மலர்க் கொன்றை யவன்;
தெள்ளியே மென்றுரைத்துத் தேரா
தொருவிலையே
வள்ளியை யாகென நெஞ்சை வலியுறீஇ

உள்ளி வருகுவர் கொல்லோ வுளைந்தியான்
எள்ளி யிருக்குவென் மற்கொலோ நள்ளிருண்
மாந்தர் கடிகொண்ட கங்குற் கனவினாற்
றோன்றின னாகத் தொடுத்தேன்மன்
யான்றளைஇப்
பையெனக் காண்கு விழிப்பயான் பற்றிய
கையுளே மாய்ந்தான் கரந்து ;
கதிர்பகா ஞாயிறே கல்சேர்தி யாயின்
அவரை நினைத்து நிறுத்தென்கை நீட்டித்
தருகுவை யாயிற் றவிருமென் னெஞ்சத்
துயிர்திரியா மாட்டிய தீ ;
மையில் சுடரே மலைசேர்தி யாயிற்
பௌவநீர்த் தோன்றிப் பகல்செய்யு மாத்திரை
கைவிளக் காகக் கதிர்சில தாராயென்
றொய்யில் சிதைத்தானைத் தேர்கு ;
சிதைத்தானைச் செய்வ தெவன்கொலோ வெம்மை
நயந்து நலஞ்சிதைத் தான் ;
மன்றப் பனைமேன் மலைமாந் தளிரேநீ
தொன்றிவ் வுலகத்துக் கேட்டு மறிதியோ
மென்றோண் ஞெகிழ்த்தான் றகையல்லால்
யான்காணேன்
நன்றுதீ தென்று பிற ;

நோயெரி யாகச் சுடினுஞ் சுழற்றியென்
ஆயித ழுள்ளே கரப்பன் கரந்தாங்கே
நோயுறு வெந்நீர் தெளிப்பிற் றலைக்கொண்டு



வேவ தளித்திவ் வுலகு;
மெலியப் பொறுத்தென் களைந்தீமின் சான்றீர்
நலிதருங் காமமுங் கௌவையு மென்றிவ்
வலிதி னுயிர்காவாத் தூங்கியாங் கென்னை
நலியும் விழும மிரண்டு;
எனப்பாடி,
இனைந்துநொந் தழுதன ளினைந்துநீ டுயிர்த்தனள்
எல்லையு மிரவுங் கழிந்தவென் றெண்ணி யெல்லிரா
நல்கிய கேள்வ னிவன்மன்ற மெல்ல
மணியுட் பரந்தநீர் போலத் துணிபாங்
கலஞ்சிதை யில்லத்துக் காழ்கொண்டு தேற்றக்
கலங்கிய நீர்போற் றெளிந்து நலம்பெற்றாள்
நல்லெழின் மார்பனைச் சார்ந்து." [கலி-நெய்-௨௫]

மிக்க காமத்து மிடலாவது, ஐந்திணைக்கண் நிகழும்

காமத்தின் மாறுபட்டு வருவது. அஃதாவது, வற்புறுத்துந் துணையின்றிச் செலவழுங்குதலும், ஆற்றருமை கூறுதலும், இழிந்திரந்து கூறுதலும், இடையூறு கிளத்தலும், அஞ்சிக்கூறுதலும், மனைவி விடுத்தலிற் பிறன்வயிற் சேறலும், இன்னோரன்ன ஆண்பாற்கிளவியும், முன்னுறச் செப்பலும், பின்னிலை முயறலும், கணவனுள்வழி இரவுத்தலைச்சேறலும், பருவம் மயங்கலும், இன்னோரன்ன பெண்பாற் கிளவியும், குற்றிசையும், குறுங்கலியும் இன்னோரன்ன பிறவுமாகி ஒத்த அன்பின் மாறுபட்டுவருவன வெல்லாம் கொள்ளப்படும். அவற்றுட் சில வருமாறு:—

> "நடுங்கி நறுநுதலா ணன்னலம்பீர் பூப்ப
> ஒடுங்கி யுயங்க லொழியக்—கடுங்கணை
> வில்லே ருழவர் விடரோங்கு மாமலைச்
> செல்லே மொழிக செலவு."

[வெண்-இருபாற்பெருந்திணை-க]

இது செலவழுங்குதல்.

"பணையா யறைமுழங்கும் பாயருவி
நாடன்
பிணையார மார்பம்
பிணையத்—துணையாய்க்
கழிகாம முய்ப்பக்

கனையிருட்கட் செல்வேன்
வழிகாண மின்னுக வான்."
[வெண்-பெருந்திணை-கூ]

இஃது இரவுத்தலைச்சேறல்.

" பெரும்பணை மென்றோள் பிரிந்தாரெம் முள்ளி
வரும்பருவ மன்றுகொ
லாங்கொல்----சுரும்பிமிரும்
பூமலி கொன்றை புறவெலாம் பொன்மலரும்
மாமயிலு மாலு மலை."
[வெண்-இருபாற்பெருந்திணை-கூ]

இது பருவமயங்கல். பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

மெய்ப்பாட்டியலுள் "இன்
பத்தை வெறுத்தல்" [மெய்ப்பாடு-உஉ]முதலாக நிகழ்பவை பொருளாக வருங்கிளவியும்
இதன் பகுதியாகக் கொள்க, (இ௵)



ருரு. முன்னைய நான்கு முன்னதற் கென்ப.

இது, கைக்கிளைக்குரியதோர் மரபு உணர்த்துதல்

றுதலிற்று.

இ-ள்:—முன்னைய நான்கும்-மேற்சொல்லப்பட்ட நான்கினும் முந்துற்ற நிலைமை நான்கும், முன்னதற்கு என்ப-முற்கூறப்பட்ட கைக்கிளைக்காம் என்ப.

அவையாவன:— ஏறா மடற்றிறம், இளமை தீராத்திறம், தேறுதலொழிந்த காமத்து மிகாத்திறம், மிக்க காமத்தின் மாறாகாத்திறம் என்பன.

ஏறாமடற்றிறம் வெளிப்பட இரத்தலாம். இளமை தீராத்திறம் நலம் பாராட்டலாம். தேறுதலொழிந்த காமத்து மிகாத்திறம் புணராவிரக்கமாம். மிக்க காமத்தின் மாறாகாத்திறம் நயப்புறுத்தலாம்.

இவை ஒருவாற்றான் உணர்த்தியவாறு.

"கைக்கிளை செந்திறம் பெருந்திணை கோந்திறம்
அத்திற மிரண்டு மகத்திணை மயங்கா
தத்திணை யானே யாத்தனர் புலவர்."

இதனானே கைக்கிளை இன்பம் பயப்ப வருமென்பதூஉம், பெருந்திணை துன்பம் பயப்ப வருமென்பதூஉம் அறிந்துகொள்க.
(ருரு)

ருசு. நாடக வழக்கினு முலகியல்

வழக்கினும்

பாடல் சான்ற புலனெறி வழக்கங்
கலியே பரிபாட் டாயிரு பாவினும்
உரிய தாகு மென்மனார் புலவர்.

இதுவும், அகத்திணைக்கு இன்றியமையாத செய்யுளை வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:—நாடக வழக்காவது, சுவைபட வருவனவெல்லாம் ஓரிடத்து வந்தனவாகத் தொகுத்துக் கூறுதல். அஃதாவது செல்வத்தானும், குலத்தானும், ஒழுக்கத்தானும், அன்பினானும் ஒத்தார் இருவராய்த் தமரின் நீங்கித் தனியிடத்து எதிர்ப்பட்டார் எனவும், அவ்வழிக் கொடுப்போரு மின்றி அடுப்போரு மின்றி வேட்கை மிகுதியாற் புணர்ந்தார் எனவும், பின்னும் அவர் களவொழுக்கம் நடத்தி இலக்கண வகையான் வரைந்தெய்தினர் எனவும், பிறவும் இந்நிகரனவாகிச் சுவைபட வருவனவெல்லாம் ஒருங்கு வந்தனவாகக் கூறுதல்.

உலகியல் வழக்காவது, உலகத்தார் ஒழுகலாற்றோடு ஒத்து வருவது.

பாடல் சான்ற புலன் நெறி வழக்கமாவது,

இவ்விருவகை யானும் பாடல் சான்ற
கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்க்
கூறப்படுகின்ற அகப்பொருள்.
கலியே பரிபாட்டு அ இரு பாவினும் உரியது ஆகும்
என்மனார் புலவர் என்றது,
கலியும் பரிபாடலும் என்னும் இரண்டு பாவினும்
உரிமையுடைத்தாம் என்று உரைப்
பர் புலவர் என்றவாறு.
எனவே, இவை இன்றியமையாதன என்றவாறு.
ஒழிந்த பாக்கள் இத்துணை
அகப்பொருட்கு உரியவாய் வருதலின்றிப் புறப்பொருட்கும்
உரியவாய் வருதலின் ஓதா



ராயினர். புறப்பொருள் உலகியல்பானன்றி
வாராமையின், அது நாடகவழக்கம் அன்றாயிற்று.
ருள, மக்க ளுதலிய வகைனங் திணையுஞ்
சுட்டி யொருவர்ப் பெயர்கொளப் பெறாஅர்.

இது, நடுவணைந்திணைக்குரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:—அகன் மக்கள் நுதலிய ஐந்திணையும்-அகத்திணையுள் கைக்கிளை பெருந்திணை ஒழிந்த ஐந்திற்கும் உரியவாகிய நிலமும் காலமும் கருப்பொருளுமன்றி மக்களைப்பற்றி வரும் புணர்தலும் பிரிதலும் இருத்தலும் இரங்கலும் ஊடலும் என்று சொல்லப்பட்ட ஐந்து பொருண்மையும், சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறார்-(அவ்வைந்திணைக் கண்ணும் தலைமகனைப் புலனெறி வழக்கம் செய்ய வேண்டின்,) நாடன் ஊரன் சேர்ப் பன் என்னும் பொதுப்பெயரானன்றி ஒருவர்க்கு உரித்தாகிவரும் பெறார் புலவர்.

பெயர் கொள்ளப்

(௫௭)

௫௮. புறத்திணை மருங்கிற் பொருந்தி னல்ல

தகத்திணை மருங்கி னளவுத லிலவே.

இஃது, எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

இ-ள் :—புறத்திணை மருங்கின் பொருந்தின் அல்லது-ஒருவர் பெயர் புறத்திணை மருங்கிற் பொருந்தினல்லது, அகத்திணை மருங்கின் அளவுதல் இல-அகத்திணை மருங் கின் வருதல் இல்லை.

[ஏகாரம் ஈற்றசை].

இதனாற் சொல்லியது, ஒருவர்க்குரித்தாகி வரும்பெயர் அகத்திணைபற்றி வரும் கைக்கிளை பெருந்திணையினும் வரப்பெறாது என்பதூஉம், புறத்திணையுள் வரும் என்ப தூஉம், ஆண்டும் பாடாண் பாட்டுக் காமம் பொருளாக வரின் அவ்வழி வரூஉம் என்ப தூஉம் கூறியவாறு. இதனான் அகப்பொருள் ஒருவரைச் சாராது பொதுப்பட வரு மென்பது கொள்க.

(ருஅ)

முதலாவது அகத்திணையியல் முற்றிற்று.

---

## இரண்டாவது-புறத்திணையியல்.

இவ்வோத்து என்ன பெயர்த்தோவெனின், புறத்திணையியல் என்னும் பெயர்த்து.

இது புறப்பொருளுணர்த்துதலாற் பெற்ற பெயர்.

அஃது யாங்ஙனம் உணர்த்திஞரோ வெனின், மேல் அகத்திணையாகிய எழுதிணை

யும் சாற்றி, அவற்றின் புறத்து நிகழ்வன எழுதிணை உணர்த்திஞரென்று கொள்க.

அவை, மலையாகிய குறிஞ்சித்திணைப்புறம் நிரைகோடலும் நிரைமீட்டலும் என்னும்

வேறுபாடு குறித்து வெட்சி எனவும் கரந்தை எனவும் இரண்டு குறி பெறுதலும்,

காடுறையுலகாகிய முல்லைப்புறம் மண்ணசை

வேட்கையால் எடுத்துச் செலவுபுரிந்த

வேந்தன்மேல் அடல் குறித்துச் செலவு புரிதலான் அவ்விரு பெருவேந்தரும் ஒரு வினை

யாகிய செலவு புரிதலின் அது வஞ்சி என ஒரு குறி பெறுதலும், புன லுலகாகிய

மருதத்துப்புறம் எயில் அழித்தலும் எயில் காத்தலும் என்னும் வேறுபாடு குறித்து

உழிஞை எனவும் நொச்சி எனவும் இரண்டுகுறி பெறுதலும், மணலுலகாகிய நெய்தற்பு

றம் இரு பெருவேந்தரும் பொருதலாகிய ஒரு தொழிலே புரிதலால் அது தும்பை என

ஒரு குறி பெறுதலும், நடுநிலைத்திணையாகிய பாலைப்புறம்

வேந்தரே யாயினும் ஏனையோ

ராயினும் தமது மிகுதியாகிய வெற்றியைக்
குறித்தலால் அது வாகை என ஒரு குறி பெறு

தலும், பெருந்திணைப்புறம் நிலையாமையாகிய
நோந்திறப் பொருளே குறித்து வருத

லின் காஞ்சி என ஒரு குறி பெறுதலும்,
கைக்கிளைப்புறம் செந்திறமாகிய ஒரு பொரு

ளே குறித்து வருதலின் பாடாண் என ஒரு குறி
பெறுதலும் உணர்த்தியவாறு கண்டு

கொள்க.

மேலை ஓத்தினுள் "புறத்திணை மருங்கிற் பொருந்தி
னல்ல, தகத்திணை மருங்கி

னளவுத லிலவே" [அகத்-டுஅ] என அகத்திணைச்
செய்யுள் இயற்பெயர்கூறப்பெறா தென்றமையானும்
புறத்திணை மருங்கிற் பொருந்தும் என்றமையானும்
உலகிய

லோடு ஒத்துவரும் காமப்பொருளாகப் பாடாண்
பாட்டின்கண் இன்பம் இயற்பெயர்

சார்த்தி வரப்பெறு மென்று கொள்க.

" ஆன்ற சிறப்பி னறம்பொரு ளின்பமென

மூன்றுவகை நுதலிய துலக மவற்றுள்
அறமு மின்பமு மகலா தாகிப்
புறனெனப் படுவது பொருள்குறித் தன்றே"

என்னும் பன்னிருபடலச் செய்யுளுள் புறப்பொருள் அறமும் இன்பமும் அகலாதாகி எனக் கூறினார்; அவர் கூறுதல் வாகைத்திணைக்கண் 'கட்டில் நீத்த பால்' முதலாகக்

'காமம் நீத்தபால்'

ஈறாக அறங்கூறுதலில் அச்சார்பாகக் கூறியது மயங்கக் கூறுதலாம்.

"ஆங்ஙன முரைப்பி னவற்றது வகையால்
பாங்குறக் கிளந்தன ரென்ப வவைதாம்
வெட்சி கரந்தை வஞ்சி காஞ்சி
உட்குவரு சிறப்பி னுழிஞை நொச்சி
முரண்மிகு சிறப்பிற் றும்பையுள் ளிட்ட
மறனுடை மரபி னேழே யேனை



அமர்கொண் மரபின் வாகையுஞ் சிறந்த

பாடாண் பாட்டொடு பொதுவிய

லென்ப" எனவும்,

"கைக்கிளை யேனைப் பெருந்திணை யென்றாங்
கத்திணை யிரண்டு மகத்திணைப் புறனே"

எனவும் புறப்பொருள் பன்னிரண்டு வகைப்படக் கூறில், அகமும் பன்னிரண்டாகி மாட்டேறு பெறுதல்வேண்டும். அகத்திணை ஏழாகிப் புறத்திணை பன்னிரண்டாகில், "மொழிந்தபொருளோ டொன்றவைத்தல்" [மரபு ௱ய] என்னுந் தந்திரவுத்திக்கும் பொருந்தாதாகி "மிகைபடக்கூறல்" "தன்னுடைய பொருள் கருதிக்கூறல்" [மரபு-௱அ] என்னுங் குற்றமும் பயக்கு மென்க. அன்றியும் பெருந்திணைப் புறனாகிய காஞ்சி நிலை யாமை யாதலானும், பொதுவிய லென்பது

"பல்லமர் செய்து படையுட் டப்பிய
நல்லாண் மாக்க ளெல்லாரும்

பெறுதலின்

திறப்பட மொழிந்து தெரிய விரித்து
முதற்பட வெண்ணிய

வெழுதிணைக்கு முரித்தே" எனத் தாமே
கூறுகின்றாராதலின் மறத்திற்கு முதலாகிய வெட்சியின்
எடுத்துக் கோடற்கண்ணும் கூற்மையானும், கைக்கிளையும்
பெருந்திணையும் புறம் என்றாரயின் அகத்திணை ஏழ் என்றது
ஐந்தெனல் வேண்டுமோதலானும், பிரமம் முதலாகச் சொல்
லப்பட்ட மணம் எட்டனுள்ளும் யாழோர் கூட்டமாகிய
மணத்தை யொழித்து ஏனைய ஏழும் புறப்பொருளாதல்
வேண்டுதலானும், முனைவன் நூலிற்கும் கலி முதலாகிய சான்
றோர் செய்யுட்கும் உயர்ந்தோர் வழக்கிற்கும்
பொருந்தாதென்க.

௫௯. அகத்திணை மருங்கி னரிறப
வுணர்ந்தோர்
புறத்திணை யிலக்கணந் திறப்படக்
கிளப்பின்
வெட்சி தானே குறிஞ்சிய து
புறனே
உட்குவரத் தோன்று மீரேழ்
துறைத்தே.

இத்தலைச்சூத்திரம் என் நுதலிற்றோவெனின்,
வெட்சித்திணைக்கு இடமும் துறையும் வரையறுத்து

உணர்த்துதல் நுதலிற்று. இதனுனே திணையும் துறையும் என்று வரும் புறப்பொருள் என்று கொள்க.

இ-ள் :—அகத்திணைமருங்கின் அரில் தப உணர்ந்தோர் புறத்திணை இலக்கணம் திறப்படக் கிளப்பின்-அகத்திணையிடத்து மயக்கம் கெட உணர்ந்தோர் புறத்திணை யிலக்கணம் வகைப்படக் கூறின்.

அகத்திணை மருங்கின் மயக்கம் கெட உணர்தலாவது, மேல் ஓதிய இலக்கணத்தால் மயக்கம் கெட உணர்தல்.

வெட்சிதானே குறிஞ்சியது புறனே-வெட்சி என்னும் திணை குறிஞ்சி என்னும் திணைக்குப் புறனும்.

வெட்சி குறிஞ்சிக்குப் புறனுயது எவ்வாறெனின், நிரைகோடல் குறிஞ்சிக்குரிய மலைசார்ந்த நிலத்தின்கண் நிகழ்தலானும், அந்நிலத்தின் மக்களாயின் பிறநாட்டு ஆன்



நிரையைக் களவிற்கோடல் ஒருபுடை குறிஞ்சிக்கு

உரித்தாகிய களவோடு ஒத்தலா னும், அதற்கு அது புறனுயிற் றென்க. சூடும் பூவும் அங்கிலத்திற்குரிய பூவாத லானும் அதற்கு அது புறமாம்.

உட்குவரத் தோன்றும் ஈர் ஏழ் துறைத்தே-வெட்சித்துறை உட்குவரத் தோன் றும் பதினான்கு துறையை உடைத்து.

துறை பதினான்கும் வருகின்ற சூத்திரத்துள் காட்டுதும். சூ0.

வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவின்
ஆதந் தோம்பல் மேவற் றாகும்.

இது, வெட்சித்திணையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—வேந்துவிடு முனைஞர் வேற்றுப் புலக் களவின் ஆ தந்து ஓம்பல் மேவற்று ஆகும்-வேந்தனால் விடப்பட்ட முனையூரகத்துள்ளார் வேற்று நாட்டின்கண் களவினானே ஆவைக்கொண்டு பெயர்ந்து பாதுகாக்கும் மேவலை யுடைத்து.

ஓம்புதலாவது, மீளாமல் காத்தல். புறப்பொருட் பாகுபாடாகிய பொருளினும் அறத்தினும் பொருள் தேடுதற்குரிய நால்வகை வருணத்தாரினும் சிறப்புடையார் அரச ராதலானும், அவர்க்கு மாற்றரசர்பால்

நிறைகொண்டபொருள் மிகவும் சிறந்ததாக லானும், அப்பொருள் எய்துங்கால் அவரைப் போரில் வென்று கோடல் வேண்டுதலா னும், போர்க்கு முந்துற நிரைகோடல் சிறந்ததாகலானும், இப்பொருள் முன் கூறப் பட்டது.

பன்னிரு படலத்துள் "தன்னுறு தொழிலே

வேந்துறு தொழிலென், றன்னவிரு வகைத்தே வெட்சி" என இரண்டு கூறுபடக் கூறினாராயினும், முன்வருகின்ற வஞ்சி, உழிஞை, தும்பை முதலாயின எடுத்துச்செலவு, எயில்காத்தல், போர்செய்தல் என்பன அரசர்மேல் இயன்று

வருதலின் வேந்துறு தொழில் ஒழித்து, தன்னுறு தொழிலெனத் தன் நாட்டும் பிறர் நாட்டும் களவின் ஆன்நிரை கோடலின் இவர் அரசாது ஆணையை நீங்கினாரவர். ஆதலால், அவர் அவ்வாறு கூறல் மிகைபடக் கூறலாம். அதனால், பன்னிருபடலத்துள் வெட்சிப்படலம் தொல்காப்பியர் கூறினரென்றல் பொருந்தாது. என்னை?

"ஒத்த சூத்திர முரைப்பிற் காண்டிகை
மெய்ப்படக் கிளந்த வகைய தாகி
ஈரைங் குற்றமு மின்றி நேரிதின்
முப்பத் திருவகை யுத்தியொடு புணரின் நூலென மொழிப
நுணங்குமொழிப் புலவர்"

எனவும்,

" சிதைவெனப் படுமவை வசையற நாடின் கூறியது கூறல்
மாறுகொளக் கூறல் குன்றக் கூறல் மிகைபடக் கூறல்
பொருளில கூறல் மயங்கக் கூறல் கேட்டோர்க் கின்னா
யாப்பிற் றாதல் பழித்த மொழியா னிழுக்கக் கூறல்



தன்னா னொருபொருள் கருதிக் கூறல்
என்ன வகையினு மனங்கோ ளின்மை
அன்ன பிறவு மவற்றுவிரி யாகும் "

எனவும் கூறிய ஆசிரியர் தாமே மாறுகொளக்கூறல், குன்றக்கூறல், மிகைபடக்கூறல் பொருளில்கூறல், மயங்கக்கூறல், தன்னானொருபொருள் கருதிக்கூறல் என்னும் குற்றம் பயப்பக் கூறினாரென வருமாகலான்.

கூக, படையியங் கரவம் பாக்கத்து விரிச்சி

புடைகெடப் போகிய செலவே புடைகெட
ஒற்றி னாகிய வேயே வேய்ப்புறம்
முற்றி னாகிய புறத்திறை முற்றிய

ஊர்கொலை யாகோள் பூசன் மாற்றே

நோயின் றய்த்த லுவல்வழித் தோற்றந்

தந்துநிரை பாதீ டுண்டாட்டுக்

கொடையென

வந்த வீரேழ் வகையிற் றாகும்.

இது, வெட்சித் துறையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—படையியங்கரவம் முதலாகக் கொடை ஈறாகச் சொல்லப்பட்ட பதி

ன்ங்கு துறையை யுடைத்து வெட்சித்திணை,

வெட்சியென்பது அதிகாரத்தான் வந்தது. படை இயங்கு அரவம்-(நிரைகோடல்

கருதிப்) படையெழும் அரவம்.

உதாரணம் :—

"நெடிபடு கானத்து நீள்வேன் மறவர்

அடிபடுத் தாரதர் செல்வான்—துடிபடுத்து

வெட்சி மலைய விரவார் மணிநிரைக்

கட்சியுட் காரி யெழும்" [வெண்பா-வெட்சி-௩]

பாக்கத்து விரிச்சி-(குறித்த பொருளின் பயன் அறிதற்குப்) பாக்கத்துக்கண் நற் சொல் ஆய்தல்.

உதாரணம் :—

"எழுவணி சீறா ரிருண்மாலை முன்றிற்
குழுவினங் கைகூப்பி

நிற்பத்—தொழுவிற்
குடக்களுக் கொண்டுவா வென்றான் குனிவில்
தடக்கையாய் வென்றி தரும்."

[வெண்பா-வெட்சி-௬]

புடை கெடப் போகிய செலவு-பக்கம் கெடப் போகிய செலவு.

பக்கங் கெடுதலாவது, மாற்றரசர் பக்கத்தாராகித் தம்மாட்டு ஒற்றொடு நிற்பார் அறியாமல் போதல். பக்கத்தினுள்ளாரைப் பக்க மென்றார்.

உதாரணம் :—

"கூற்றினத் தன்னார் கொடுவி

லிடனேந்திப்
பாற்றினம் பின்படர

முன்படர்ந்—தேற்றின

நின்ற நிலைகருதி யேகினார் நீள்கழைய
குன்றங் கொடுவில் லவர்." [வெண்பா-வெட்சி-௫]

புடை கெட ஒற்றின் ஆகிய

வேயே-மாற்றரசர்பக்கத்துள்ளார் அறியாதவகை ஒற்றரால் ஆகிய ஒற்றுதலும்.

ஒற்று என்பது எவ்விடத்தும் வேண்டுமாயினும், ஆதிவிளக்காக இவ்வோத்தின் முதற்கண் வைத்தாரென்று கொள்க.

உதாரணம் :—

" நிலையும் நிரையும் நிரைப்புறத்து நின்ற
சிலையுஞ் செருமுனையுள்

கைகி—இலைபுனைந்த

கள்ளவிழ் கண்ணிக் கழல்வெய்யோய் சென்றறிந்து
நள்ளிருட்கண் வந்தார் நமர்." [வெண்பா-வெட்சி-௬.]

வேய் புறம் முற்றின் ஆகிய புறத்து

இறை-(அவ்வாறு) வேய்க்கப்பட்ட இடத் தின் புறத்தினைச் சூழ்தலான் ஆகிய புறத் திருக்கை.

'வேய்' என்பது ஆகுபெயராய் அவ்விடத்தின்மேல் நின்றது.

உதாரணம் :—

" உய்ந்தொழிவா ரீங்கில்லை யூழிக்கட் டீயேபோல்
முந்தமரு ளேற்ரூர் முரண்முருங்கத்—தந்தமின்
ஒற்றினூ ஞெற்றி யுரவோர் குறும்பினைச்
சுற்றினூர் போகாமற் சூழ்ந்து."

[வெண்பா-வெட்சி-எ]

முற்றிய ஊர் கொலை-(அவ்வாறு) சூழப்பட்ட ஊரை அழித்தல்.

உதாரணம் :—

" இகலே துணையா வெரிதவழச் சீறிப்
புகலே யரிதென்னூர் புக்குப்—பகலே
தொலைவில்லார் வீழத் தொடுகழ லார்ப்பக்
கொலைவில்லார் கொண்டார் குறும்பு."

[வெண்பா-வெட்சி-அ]

ஆ கோள்-(ஆண்டுளதாகிய) நிரையைக் கோடல்.

உதாரணம் :—

" கொடுவரி கூடிக் குழூஉக்கொண் டனைத்தால்
நெடுவரை நீள்வேய் நரலு—நடுவூர்க்
கணநிரை கைக்கொண்டு கையகலார் நின்ற
நிணநிரை வேலார் நிலை."

[வெண்பா-வெட்சி-கூ] பூசல் மாற்று-(அவ்வாறு கொண்ட நிரையை மீட்டற்கு வந்தார் பொரும்) பூசல்

மாற்றிப் பெயர்தல்.

உதாரணம் :—

“ சூழ்ந்த நிரைபெயரச் சுற்றித் தலைக்கொண்டார்
வீழ்ந்தனர் வீழ்ந்தார் விடக்குணிய—தாழ்ந்த
குலவுக் கொடுஞ்சிலைக்கைக் கூற்றனையா ரெய்த
புலவுக் கணைவழிபோய்ப்
புள்.” [வெண்பா-வெட்சி-ம]

நோய் இன்று உய்த்தல்-(அவ்வாறு கொண்ட நிரையை) வருந்தாமல் உய்த்தல்,
9



உதாரணம் :—

“செருப்பிடைச் சிறுபர லன்ன கணைக்கால்
அவ்வயிற் றகன்ற மார்பிற் பைங்கட்
குச்சி னிரைத்தன குரூமயிர் மோவாய்
செவியிறந்து தாழ்தருங் கவுளன் வில்லோ
டியார்கொலோ வளியன் தானே தேரின்
ஊர்பெரி திகந்தன் றிலனே யரணெனக்
காடுகைக் கொண்டன் றிலனே காலைப்

புல்லா ரினநிரை செல்புற நோக்கிக்
கையிற் சுட்டிப் பையென வெண்ணிச்
சிலையின் மாற்றி யோனே யவைதாம்
மிகப்பல வாயினு மென்னு மெனைத்தும்
வெண்கோ டோன்றாக் குழிசியொடு
நாளுறை மத்தொலி கேளா தோனே." [புறம்-உருள]

நுவல்வழித் தோற்றம்-தமர் கவன்று [சொல்லியவ]
ழித் தோன்றுதல்.

உதாரணம் :—

"நறவுந் தொடுமின் விடையும் வீழ்மின்
பாசுவ லிட்ட புன்காற் பந்தர்ப்
புனறரு மிளமணை னிறையப் பெய்ம்மின்
ஒன்னுர் முன்னிலை முருக்கிப் பின்னின்று
நிரையொடு வரூஉ மென்னைக்
குழையோர் தன்னினும் பெருஞ்சா யலரே." [புறம்-உசுஉ]

தந்து நிறை-(கொள்ளப்பட்ட நிரையைத்)
தம்மூரகத்துக் கொணர்ந்து நிறுத்தல்.

உதாரணம் :—

"தண்டா விருப்பின டன்னை தலைமலைந்த
வண்டார் கமழ்கண்ணி வாழ்கென்று—கண்டாள்
அணிநிரை வாண்முறுவ லம்மா
வெயிற்றி

மணிநிரை மல்கிய மன்று." [வெண்பா-வெட்சி-கா.]

பாதீடு-(அந்நிரையைக்) கூறிடுதல்.

உதாரணம் :—

"ஒள்வாண் மலைந்தார்க்கு மொற்றாய்ந் துரைத்தார்க்கும்
புள்வாய்ப்பச் சொன்ன புலவர்க்கும்—விள்வாரை
மாறட்ட வென்றி மறவர்தஞ் சீறூரிற்
கூறிட்டார் கொண்ட நிரை." [வெண்பா-வெட்சி-கச]

உண்டாட்டு-(நிரைபகுத்த மறவர்) களிப்பினால் அயரும் விளையாட்டு.

உதாரணம் :—

"இளிகொண்ட தீஞ்சொ லினமா வெயிற்றி
களிகொண்ட நோக்கங் கவற்றத்—தெளிகொண்ட
வெங்கண் மலிய விளிவதுகொல் வேற்றூர்மேல்
செங்கண் மறவர் சினம்." [வெண்பா-வெட்சி-கரு]

கொடை-(பகுத்த நிரையை வேண்டி இரப்பார்க்குக்) கொடுத்தல்.

உதாரணம் :—

"இளமா வெயிற்றி யிவைகாணின் னையர் தலைநாளை
வேட்டத்துத் தந்த நிரைகள் கொல்லன் றுடியன்
கொளைபுணர்சீர் வல்ல நல்லியாழ்ப் பாணர்தம் முன்றி
னிறைந்தன.

முருந்தே ரிளநகை காணாய்நின் னையர்
கரந்தை யலறக் கவர்ந்த நிரைகள்
கள்விலை யாட்டிநல் வேய்திரி கானவன்
புள்வாய்ப்பச் சொல்கணி முன்றி னிறைந்தன.

கயமல ருண்கணாய் காணாய்நின் னையர்
அயலூ ரலற வெறிந்தநல் லாக்கள்
நயனின் மொழியர் நரைமுதிர் தாடி
எயின ரெற்றியர் முன்றி னிறைந்தன." [சிலப்-வேட்டுவவரி]
(ரு)

௬௨. மறங்கடைக் கூட்டிய குடிநிலை
சிறந்த

கொற்றவை நிலையு மத்திணைப் புறனே.
இதுவும் அது.

இ-ள்:—மறம் கடை கூட்டிய குடி நிலை-மறத்தொழில் முடித்தலையுடைய குடியினது நிலைமையைக் கூறலும், சிறந்த கொற்றவை நிலையும்-சிறந்த கொற்றவையது நிலைமையைக் கூறலும், அ திணை புறன்-குறிஞ்சித்திணைப் புறனாகிய வெட்சித்திணையாம்.

குடிநிலை என்றதனால் மைந்தர்க்கும் மகளிர்க்கும் பொதுவாதல் அறிக.

உதாரணம் :—

"யானை தாக்கினு மரவுமேற் செலினும்
நீனிற விசும்பின் வல்லேறு சிலைப்பினும்
சூழ்மகன் மாறா மறப்பூண் வாட்கை
வலிகூட் டுணவின் வாட்குடிப் பிறந்த
புலிப்போத் தன்ன புல்லணற் காளை
செந்நா யன்ன கருவிற் சுற்றமொடு
கேளா மன்னர் கடிபுலம் புக்கு
நாளா தந்து நறவுநொடை தொலைச்சி
இல்லடு கள்ளின் சில்குடிச் சிறூஉர்ப் பருகி
மல்லன் மன்றத்து மதவிடை கெண்டி
மடிவாய்த் தண்ணுமை நடுவட் சிலைப்பச்
சிலைவி லெறுழ்த்தோ ளோச்சி வலன்வளையூப்

பகன்மகிழ் தூங்குந் தூங்கா விருக்கை
முளிதலை களித்தவ ருள்ளுங் காதலிற்
றனக்குமுகந் தேந்திய பசும்பொன் மண்டை
இவற்கி தென்னு ததற்குமன் றிசினே:
கேட்டியோ வாழி பாண பாசறைப்
பூக்கோ ளின்றென் றறையும்
மடிவாய்த் தண்ணுமை யிழிசினன் குரலே." [புறம்-உஅக]



"கெடுக சிந்தை கடிதிவ டுணிவே
மூதின் மகளி ராதல் தகுமே
மேனா ளுற்ற செருவிற் கிவடன்னை
யானை யெறிந்து களத்தொழிந் தனனே;
நெருந லுற்ற செருவிற் கிவள்கொழுநன்
பெருநிரை விலக்கி யாண்டுப்பட்
டனனே;
இன்றும்,
செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித்
துடீஇப்

பாறுமயிர்க் குடுமி யெண்ணெய் நீவி
ஒருமக னல்ல தில்லோள்
செருமுக நோக்கிச் செல்கென

விடுமே.” [புறம்-உஎகூ.]

இவற்றுள் ஆண்பால் பற்றிவந்ததனை இல்லாண்முல்லை யெனவும், பெண்பால் பற்றிவந்தனை மூதின்முல்லை யெனவும் கூறுப.

‘கொற்றவை நிலை’ என்றதனுனே,

குறிஞ்சித்திணைக்கு முருகவேளேயன்றிக் கொற்றவையும் தெய்வ மென்பது பெற்றும்.

**உதாரணம்:—**

“ ஆளி மணிக்கொடிப் பைங்கிளிப்

பாய்கலைக்

கூளி மலிபடைக் கொற்றவை—மீளி
அரண்முருங்க வாகோள் கருதி

னடையார்

முரண்முருங்கத் தான்முந் துறும்.”

[வெண்பா-வெட்சி-உய]

௬௩. வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
வெறியாட் டயர்ந்த காந்தளு முறுபகை
வேந்திடை தெரிதல் வேண்டி யேந்துபுகழ்ப்
போந்தை வேம்பே யாரென வரூஉ
மாபெருந் தானையர் மலைந்த பூவும்
வாடா வள்ளி வயவ ரேத்திய
ஓடாக் கழனிலை யுளப்பட வோடா
உடல்வேந் தடுக்கிய வுன்ன நிலையும்
மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பிற்
றாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்
ஆரம ரோட்டலு மாபெயர்த்துத் தருதலுஞ்
சீர்சால் வேந்தன் சிறப்பெடுத் துரைத்தலும்
தலைத்தா ணெடுமொழி தன்னொடு
புணர்த்தலும்
மனைக்குரி மரபின‌து கரந்தை யன்றியும்
வருதார் தாங்கல் வாள்வாய்த்துக் கவிழ்தலென்
றிருவகைப் பட்ட பிள்ளை நிலையும்
வாண்மலைந் தெழுந்தோனை மகிழ்ந்துபறை
தூங்க

நாடவற் கருளிய பிள்ளை யாட்டும்
காட்சி கல்கோ ணீர்ப்படை நடுதல்
சீர்த்த மரபிற் பெரும்படை வாழ்த்தலென்
றிருமூன் று மரபிற் கல்லொடு புணரச்
சொல்லப் பட்ட வெழுமூன் று துறைத்தே.

வேலன் முதலாக வெட்சித்திணைக்குரிய துறை கூறினுர், இனி அதற்கு மாறு கிய கரந்தைத் திணையாமாறு உணர்த்துதல் நுதலிற்று. அதுவும் ஆநிரைமீட்டல் காரணமாக அந்நிலத்தின்கண் நிகழ்வதாகலின், வெட்சிப்பாற்பட்டுக் குறிஞ்சிக்குப் புறனு யிற்று.

இ-ள்:—வெறியாட்டயர்ந்த காந்தளு மென்பது முதலாகத் தலைத்தாணெடுமொழி தன்னெடு புணர்த்தலும் என்பது ஈருகச் சொல்லப்பட்ட பதின்மூன் று துறையும் காட்சி முதலாக வாழ்த்தல் ஈருகக் கல்லொடு புணர்த்துக் கூறும் துறையொடுங் கூடச் சொல்லப்பட்ட இருபத்தொரு துறைத்து.

வெறி அறி சிறப்பின் வெவ்வாய் வேலன் வெறியாட்டு அயர்ந்த காந்தளும்-வெறி யாடுதலை அறியும் சிறப்பினையுடைய வெவ்விய வாயினையுடைய வேலன் வெறியாடிய காந்தளும்.

காந்த ளென்பதனை மடலேறுதற்குப் பெயராகக் கூறுவா ருளராகலின், வெறியா

ட்டயர்ந்த காந்த ளென்றார். அன்றியும், காந்தள் என்பது மடலேறுதலான் அத்துணை யாற்றுளாகிய பெண்பால்மாட்டு நிகழும் வெறி 'காந்தள்' எனவும் பெயராம். இத ஞனே காமவேட்கையின் ஆற்றுளாகிய பெண்பாற்பக்கமாகிய வெறியும் அந்நிலத் துள்ளார் வென்றிவேண்டி ஆடும் வெறியும் கொள்ளப்படும். இவ்வெறி இந்நிலத்திற் குச் சிறந்தமை அறிக. இது வெட்சிப் பின்னர் வைத்தார், பெரும்பான்மையும் குறிஞ்சிபற்றி நிகழு மாகலின்.

உதாரணம் :—

" வெய்ய நெடிதுயிரா வெற்ப

ன ளிநினையா

ஐய நனிநீங்க வாடினாள்—மையல்

அயன்மனைப் பெண்டிரோ டன்னைசொ லஞ்சி
வியன்மனையு ளாடும் வெறி." [வெண்பா-இருபாற்பெருந்திணை-ம]

இது காமவேட்கை தோற்றுமல் தலைமகள் தானே முருகு மேல்நிறீஇ யாடியது. வென்றி வேண்டியாடுதற்குச் செய்யுள் சிலப்பதிகாரத்து வேட்டுவவரியுட் கண்டு கொள்க. இனி வேலன் தானே ஆடியதற்குச் செய்யுள் வந்தவழிக் கண்டுகொள்க.

உறு பகை வேந்து இடை தெரிதல் வேண்டி ஏந்து புகழ் போந்தை வேம்பு ஆர் என வரும் மா பெருந் தானையர் மலைந்த பூவும்-மிக்க பகைவேந்தன் வேறுபாடு தெரிதல் வேண்டி உயர்ந்த புகழையுடைய போந்தையெனவும் வேம்பெனவும் ஆரெனவும்

தமிழ்நாட்டு நிலவேந்தர் சூடிய பூவும்.

உதாரணம் :—

" குடையலர்

காந்தட்டன் கொல்லிச் சுனைவாய்த்

தொடையவிழ் தண்குவளை

சூடான்—புடைதிகழுந்



தேரதிரப் பொங்கும் திருந்துவேல்

வானவன்

போரெதிரிற் போந்தையாம் பூ."

[வெண்பா-பொது-௧.]

இது சேரன் பூ.

" தொடியணிதோ ளாடவர் தும்பை

புனையக்

கொடியணிதேர் கூட்டணங்கும்

போரின்—முடியணியும்

காத்தல்சால் செங்கோற் கடுமா

னெடுவெழுதி

ஏத்தல்சால் வேம்பி னிணர்."

[வெண்பா-பொது-உ]

இது பாண்டியன் பூ.

"கொல்களி றூர்வர்
கொலைமலி வாண்மறவர்
வெல்கழல் வீக்குவர்
வேலிளைஞர்—மல்குங்
கலங்க லொலிபுனற் காவிரி நாடன்
அலங்க லமராழுவத் தார்."

[வெண்பா-பொது-ங]

இது சோழன் பூ.

நிரைகோள் கேட்டவழி நெடுநிலவேந்தரும் கதுமென எழுவராதலின், நிரை மீட்டலின்கண் பூப் புகழப்பட்டது.

வாடா வள்ளி-வாடுதல் இல்லாத வள்ளி.

'வள்ளி' என்பது ஒருகூத்து; அஃது அந்நிலத்தின் நிகழ்தலின் 'வாடாவள்ளி' என்றார். உதாரணம் வந்தவழிக் கண்டுகொள்க.

வயவர் ஏத்திய ஓடா கழல் நிலை-வீரராற் புகழப்பட்ட கெடாத கழல் நிலை.

உதாரணம்:—

" வாளமரின் முன் விலக்கி
வான்படர்வார் யார்கொலோ
கேளலார் நீக்கிய கிண்கிணிக்காற்—காளை
கலங்கழல் வாயிற் கடுத்தீற்றி யற்றூற்
பொலங்கழல் கான்மேற் புனைவு."

[வெண்பா-பொது-எ]

ஓடா உடல் வேந்து அடுக்கிய உன்ன நிலையும்-ஓடாத் வெருண்ட வேந்தரைச் சாத்திய உன்ன நிலையும்.

'உன்னம்' என்பது மரம். அது தன் நாட்டகத்துக் கேடுவருங்கால் உலறியும், வாராத காலம் குழைந்தும் நிற்கும்.

உதாரணம் :—

" துன்னருந் தானைத் தொடுகழலான்
றுப்பெதிர்ந்து
முன்னர்
வணங்கார் முரண்முருங்க—மன்னரும்
ஈடெலாந் தாங்கி யிகலவிந்தார் நீயுநின்

கோடெலா முன்னங் குழை."

[வெண்பா-பொது-அ]

பிறவும் நிமித்தமாகி வருவன வெல்லாவற்றிற்கும் இதுவே துறையாகக் கொள்க.

மாயோன்மேய மன் பெருஞ் சிறப்பின் தாவா விழு
புகழ் பூவை நிலையும்-மாயோனைப் பொருந்திய நிலைபெற்ற
பெருஞ் சிறப்பினையுடைய கெடாத விழுப்புகழைப்
பொருந்திய பூவை நிலையைக் கூறுதலும்.



பூவைமலர்ச்சியைக்கண்டு மாயோன் நிறத்தை
யொத்ததெனப் புகழ்தல். நாடெல்லை காடாதலின்,
அக்காட்டிடைச் செல்வோர் அப்பூவையைக் கண்டு கூறுதல்.
உன்னம் கண்டு கூறினர் போல இதுவும் ஓர் வழக்கு.

உதாரணம் :—

“பூவை விரியும் புதுமலரிற் பூங்கழலோய்
யாவை விழுமிய யாமுணரேம்—மேவார்
மறத்தொடு மல்லர் மறங்கடந்த காளை
நிறத்தொடு நேர்தருத லான்.”

[வெண்பா-பாடாண்-௪]

இஃது உரையன்றென்பார், மாயோன் முதலாகிய
தேவர்களோடு உவமித்தலே பூவைநிலை யென்ப.

உதாரணம் :—

"இந்திர னென்னி னிரண்டேக ணேறூர்ந்த

அந்தரத்தா னென்னிற்

பிறையில்லை—அந்தரத்திற்

கோழியா னென்னின் முகனொன்றே

கோதையை

யாழியா னென்றுணரற் பாற்று."

வேறு கடவுளரை நோக்கி உவமித்து வருபவையெல்லாம் பூவை நிலையாகக்

கொள்க. என்னை ?

"ஏற்றூர்தி யானு மிகல்வெம்போர் வானவனும்

ஆற்றலு மாள்வினையு மொத்தொன் றினொவ்வாரே

கூற்றக் கணிச்சியான் கண்மூன் றிரண்டேயாம்

ஆற்றல்சால் வானவன் கண்."

என முத்தொள்ளாயிரத்து வந்தவாறு காண்க. பிறவும் அன்ன. பூவைநிலையும் அந்நி

லத்தின் தெய்வமாகிய கருப்பொருளாதலின், அதன்மேல் வந்தது.

ஆர் அமர் ஓட்டலும்-அரிய அமரைப் போக்குதலும்.

உதாரணம் :—

"புலிக்கணமுஞ் சீயமும் போர்க்களிறும் போல்வார்
வலிச்சினமு மானமுந் தேசும்—ஒலிக்கும்
அருமுனை வெஞ்சுரத் தான்பூசற் கோடிச்
செருமலைந்தார் சீற்றஞ் சிறந்து." [வெண்பா-கரந்தை-௪]

ஆ பெயர்த்துத்தருதல்-நிரை மீட்டல்.

உதாரணம் :—

"அழுங்கனீர் வையகத் தாருயிரைக் கூற்றம்
விழுங்கியபின் வீடுகொண் டற்றாற்—செழுங்குடிகள்
தாரார் கரந்தை தலைமலைந்து தாங்கொண்டார்
நேரார்கைக் கொண்ட நிரை." [வெண்பா-கரந்தை-க]

எனவும்,

"ஏறுடைப் பெருநிரை பெயர்தரப் பெயரா
திலைபுதை பெருங்காட்டுத் தலைகரந் திருந்த
வல்வின் மறவ ரொடுக்கங் காணாய்



செல்லல் செல்லல் சிறக்கநின் னுள்ளம்
முருகுமெய்ப் பட்ட புலைத்தி போலத்
தாவுபு தெறிதரு மான்மேற்

புடையிலங் கொள்வாட் புனைகழ லோயே" [புறம்-உ௯௬]
எனவும் வரும்.

சீர் சால் வேந்தன் சிறப்பு எடுத்து உரைத்தலும்-சீர்மை பொருந்திய வேந்தனது மிகுதியை எடுத்துக் கூறலும்.

உதாரணம் :—

"அங்கையு ணெல்லி யதன்பய மாதலாற்
கொங்கலர் தாரான் குடைகீழ்க்கீழ்த்—தங்கிச்
செயிர்வழங்கும் வாளமருட் சென்றடையார் வேல்வாய்
உயிர்வழங்கும் வாழ்க்கை யுறும்." [வெண்பா-கரந்தை-௰௬]

இது மற்றுள்ள திணைக்கும் பொது.

தலைத்தாள் நெடுமொழி தன்னொடு புணர்த்தலும்-தன்மாட்டுள்ள போர்வலி முயற்சியினாலே கொடுஞ்சொற்களைத் தன்னொடு புணர்த்திக் கூறுதலும்.

உதாரணம் :—

"ஆளமர் வெள்ளம் பெருகி னதுவிலக்கி
வாளொடு வைகுவேம் யாமாக—நாளுங்
கழிமகிழ் வென்றிக் கழல்வெய்யோ யீயப்
பிழிமது வுண்பார் பிறர்." [வெண்பா-கரந்தை-௧௧]

இது மற்றுள்ள திணைக்கும் பொது.

வரு தார் தாங்கல் வாள் வாய்த்து கவிழ்தல் என்று இருவகைப்பட்ட பிள்ளை

நிலையும்-மேல்வருகின்ற கொடிப்படையைத் தாங்கலும் வாள் வாய்த்தலாற் படுதலும்

என இரண்டு வகைப்பட்ட பிள்ளை நிலையும்.

உதாரணம் :—

" பிள்ளை கடுப்பப் பிணம்பிறங்க வாளெறிந்து
கொள்ளைகொ ளாயந்
தலைக்கொண்டார்—எள்ளிப்
பொருதழிந்து மீளவும்
பூங்கழலான் மீளான்
ஒருதனியே நின்று னுளன்."

[வெண்பா-கரந்தை-எ]

இது வருதார் தாங்கல்.

" உரைப்பி னதுவியப்போ
வொன்னார்கைக் கொண்ட
நிரைப்பி னெடுந்தகை
சென்றான்—புரைப்பின்
றுளப்பட்ட வாயெல்லா மொள்வாள்
கொளவே
களப்பட்டான் சென்றான் கரந்து."

[வெண்பா-கரந்தை-கூ]

இது வான் வாய்த்துக் கவிழ்தல்.

வான் மலைந்து எழுந்தோனை மகிழ்ந்து பறை தூங்க நாடு அவற்கு அருளிய பிள்ளை யாட்டும்-வாளான் மாறுபட்டு எழுந்தவனை மகிழ்ந்து பறை ஒலிப்ப அவற்குத் துறக்க மாகிய நாட்டை அளித்த பிள்ளையாட்டும்.



எகூ உதாரணம் :—

“மாட்டிய பிள்ளை மறவர் நிறந்திறந்து
கூட்டிய வெஃகங் குடர்மாலை—சூட்டியபின்
மாறிரியச் சீறி நுடங்குவான் கைக்கொண்ட
வேறிரிய விம்மூர் துடி.”

[வெண்பா-கரந்தை-கூ.] காட்சி-(போர்க்களத்துப் பட்டவீரரைக் கல்நிறுத்தற் பொருட்டுக் கற்) காண்டல். உதாரணம் :—

“மிகையணங்கு மெய்ந்நிறீஇ மீளி மறவர்
புகையணங்கப் பூமாரி
சிந்திப்—பகையணங்கும்
வீளைக் கடுங்கணையால் வேறாகி விண்படர்ந்த

காளைக்குக் கண்டமைத்தார் கல்."
[வெண்பா-பொது-அ] கல் கோள்-(அவ்வாறு காணப்பட்ட) கல்லைக் கைக்கோடல்.

உதாரணம் :—

"பூவொடு நீர்தூவிப் பொங்க விரைபுகைத்து
நாவுடை நன்மணி நன்கியம்ப—மேவார்
அழன்மறங் காற்றி யவிந்தாற்கென் றேத்திக்
கழன்மறவர் கைக்கொண்டார் கல்." [வெண்பா-பொது-கூ]
நீர்ப்படை-(அக்கல்லை) நீர்ப்படுத்தல்.

உதாரணம் :—

"காடு கனற்றக் கதிரோன்
சினஞ்சொரியக்
கூடிய வெம்மை குளிர்கொள்ளப்—பாடி
நயத்தக மண்ணி நறுவிரைகொண்
டாட்டிக்
கயத்தகத் துய்த்திட்டார் கல்."
[வெண்பா-பொது-ய]
நடுதல்-(அக்கல்லை) நடுதல்.
உதாரணம் :—

" மாலே துயல மணியெறிந்து
மட்டுகுத்துப்
பீலி யணிந்து
பெயர்பொறித்து—வேலமருள்
ஆண்டக நின்ற வமர்வெய்யோற்
கிஃதென்று
காண்டக நாட்டினர் கல்."
[வெண்பா-பொது-கஉ]

சீர் தகு மரபின் பெரும்படை—மிகவும் தக்க மரபினையுடைய **பெரும்படையினும்.**

அஃதாவது, நாட்டிய கல்லிற்குக் கோட்டஞ் செய்தல். அஃது இற்கொண்டு புகுக வென உரைத்த துறை. [கோட்டம்-கோயில். படை-படைத்தல்.]

**உதாரணம் :—**

" வாட்புகா வூட்டி வடிமணி
நின்றியம்பக்
கோட்புலி யன்ன
குரிசில்க—லாட்கடிந்து
விற்கொண்ட வென்றி விறன்மறவ
ரெல்லாரும்
இற்கொண்டு புக்கா ரியைந்து."

வாழ்த்து-(அக்கல்லேப்) பழிச்சுதல்,

இளம்பூரணம்

உதாரணம் :—

" அடும்புகழ் பாடி யழுதழு தாற்றூ
திடும்பையுள் வைகி
யிருந்த—கடும்பொடு
கைவண் குரிசில்கற் கைதொழுது செல்பாண
தெய்வமாய் நின்றான் றிசைக்கு." [வெண்பா-பொது-கக.]

இவையெல்லாம் காந்தைக்கு உரித்தாக ஓதப்பட்டனவேனும், "ஒருபாற் கிளவி ஏனைப்பாற் கண்ணும், வருவகை தானே வழக்கென மொழிப" [பொருளியல்-உஅ] என்றதனன், மறத்துறை ஏழிற்கும் கொள்ளப்படும். ஈண்டு ஓதப்பட்ட இருபத்தொரு துறையினும் நிரைமீட்டற் பொருண்மைத்தாகிக் காந்தையென ஓதப்பட்டன ஏழா மின. காந்தையாயினவாறு என்னையெனின், வெறியாட்டும் வள்ளிக்கூத்தும் மலை சார்ந்த இடத்து வழங்குதலின், வந்த நிலத்திற்கு உரிய பொருளாகி வந்தன. பூவை நிலையும் அந்நிலத்தைச் சார்ந்து வருவதோர் தெய்வமாதலின், அந்நிலத்தின் கருப் பொருளாகி வந்தது. கற்கோள்நிலை யாறும் உன்னநிலையும் முடியுடை வேந்தர் சூடும் பூவும் கழல்நிலையும் ஏனையவற்றிற்கும் பொதுவாகலான், எடுத்துக்கொண்டகண்ணே கூறுதல் இலக்கணமாதலின் ஈண்டு ஓதப்பட்டதென வுணர்க. பன்னிருபடலத்துள் காந்தைக்கண் புண்ணொடுவருதல் முதலாக வேறுபடச் சிலதுறை கூறினாராகலின், புண்படுதல் மாற்றோர்செய்த மறத்துறையாகலின், அஃது இவர்க்கு மாறாகக்கூறலும் மயங்கக்கூறலுமாம். ஏனையவும் இவ்வாறு மயங்கக்கூறலும் குன்றக்கூறலும் மிகைபடக்

கூறலு மாயவாறு எடுத்துக்காட்டின் பெருகுமாதலான், கொள்க. இத்துணையும் கூறப்பட்டது வெட்சித்திணை.

உய்த்துணர்ந்து கண்டு

(இ) கூச. வஞ்சி தானே

முல்லையது புறனே

எஞ்சா மண்ணசை வேந்தனை வேந்தன்
அஞ்சுதகத் தலைச்சென் றடல்குறித் தன்றே.

இது, வஞ்சித்திணையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:—வஞ்சி முல்லையது புறன்-வஞ்சியாகிய புறத்திணை முல்லையாகிய அகத்திணைக்குப் புறனும். எஞ்சா மண் நசை வேந்தனை வேந்தன் அஞ்சுதகத் தலைச்சென்று அடல் குறித்தன்று-அஃது ஒழியாத மண்ணை நச்சுதலையுடைய வேந்தனை மற்றொரு வேந்தன் அஞ்சுதகத் தலைச்சென்று அடல் குறித்தது.

ஒழியாத மண்ணை நச்சுதலாவது, வேண்டிய அரசர்க்குக் கொடாமை. "அகத்திணை

மருங்கின் அரிறப உணர்ந்தோர், புறத்திணை யிலக்கணம் திறப்படக் கிளப்பின்" [புறத்-க] என்பதனைக் கொணர்ந்து உரைத்துக்கொள்க. இவ்வுரை இனி வருகின்ற திணைக்கும் ஒக்கும். அதற்கு இது புறனாகியவாறு என்னையெனின், "மாயோன் மேய காடுறை யுலகமும்" [அகத்-ரு] கார்காலமும் முல்லைக்கு முதற்பொருளாதலானும்,

பகைவயிற் சேறலாகிய வஞ்சிக்கு நிழலும் நீருமுள்ள காலம் வேண்டுதலானும், பருமரக் காடாகிய மலைசார்ந்தஇடம் ஆகாமையானும் அதற்கு இது சிறந்ததென்க. அன்னதாகல் முல்லைப்பாட்டினுள்

"கான்யாறு தழீஇய வகனெடும் புறவிற்
சேணாறு பிடவமொடு பைம்புத லெருக்கி
வேட்டுப் புழையருப்ப மாட்டிக் காட்ட



எரு

இடுமுட் புரிசை யேமுற வளைஇப்
படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி"

என்பதனானும் அறிக.

சுரு. இயங்குபடை யரவ மெரிபரந்

தெடுத்தல்

வயங்க லெய்திய பெருமை யானுங்
கொடுத்த லெய்திய கொடைமை யானும்
அடுத்தூர்ந் தட்ட கொற்றத் தானும்
மாராயம் பெற்ற நெடுமொழி யானும்
பொருளின் றுய்த்த பேராண் பக்கமும்
வருவிசைப் புனலைக் கற்சிறை போல
ஒருவன் றாங்கிய பெருமை யானும்
பிண்ட மேய பெருஞ்சோற்று நிலையும்
வென்றோர் விளக்கமுந் தோற்றோர் தேய்வுங்
குன்றாச் சிறப்பிற் கொற்ற வள்ளையும்
அழிபடை தட்டோர் தழிஞ்சியொடு தொகைஇக்
கழிபெருஞ் சிறப்பிற் றுறைபதின் மூன்றே.

இது, வஞ்சித்திணையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:—இயங்குபடையரவம் முதலாகத்

தழிஞ்சியொடுகூடச் சொல்லப்பட்ட

பதின்மூன்றும் வஞ்சித்துறையாம் என்றவாறு.

'பெருமை யானும்' என்பது முதலாக வந்த 'ஆன்' எல்லாம் இடைச்சொல்லாகி வந்தன. இயக்குபடை யரவ மெரிபரந் தெடுத்தல் என்பதன்கண் உம்மை தொக்கு நின்றது.

படை இயங்கு அரவம்-படை யெழும் அரவம்.

உதாரணம் :—

"சிறப்புடை மரபிற் பொருளு மின்பமும்
அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல
இருகுடை பின்பட
வோங்கிய வொருகுடை
உருகெழு மதியி னிவந்துசேண் விளங்க
நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்ப்
பாசறை யல்லது நீயொல் லாயே

நுதிமுக மழுங்க மண்டி யொன்னார்
கடிமதில் பாயுநின் களிறடங் கலவே
போரெனிற் புகலும் புனைகழன் மறவர்
காடிடைக் கிடந்த நாடுநனி சேஎய
செல்வே மல்லே மென்னார் கல்லென்
விழவுடை யாங்கண் வேற்றுப்புலத் திறுத்துக்
குணகடல் பின்ன தாகக் குடகடல்

வெண்டலைப் புணரிநின் மான்குளம் பலைப்ப வலமுறை
வருவது முண்டென் றலமந்து
நெஞ்சுநடுங் கவலம் பாயத்
துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே." [புறம்-௬௧]

எரி பரந்தெடுத்தல்-(பகைவரது நாடு) எரி
பரந்துகிளர்தல்.

உதாரணம் :—

"வினைமாட்சிய விரைபுரவியொடு
மழையுருவின தோல்பரப்பி
முனைமுருங்கத் தலைச்சென்றவர்
விளைவயல் கவர்பூட்டி
மனைமரவம் விறகாகக்
கடிதுறைநீர்க் களிறுபடீஇ
எல்லுப் படவிட்ட சுடுதீ விளக்கஞ்
செல்சுடர் ஞாயிற்றுச் செக்கரிற் றோன்றப்
புலங்கெட விறுக்கும் வரம்பி றானைத்
துணைவேண்டாச் செருவென்றிப்
புலவுவாட் புலர்சாந்தின்

முருகற் சீற்றத் துருகெழு குரிசில்
மயங்குவள்ளை மலராம்பற்
பனிப்பகன்றைக் கனிப்பாகற்
கரும்பல்லது காடறியாப்
பெருந்தண்பணை பாழாக
ஏம நன்னா டொள்ளெரி யூட்டி
நாம நல்லமர் செய்ய
ஓராங்கு மலைந்தன பெருமநின் களிறே." [புறம்-கசு]

வயங்கல் எய்திய பெருமையும்-விளக்கம் எய்திய பெருமையும்.

உதாரணம் :—

"இருங்கண்ணி யானையொ டருங்கலந்
தெறுத்துப்
பணிந்துகுறை மொழிவ தல்லது பகைவர்
வணங்கா ராதல் யாவதோ மற்றே
உருமுடன்று சிலைத்தலின் விசும்பதிர்ந் தாங்கு
கண்ணதிர்பு முழங்குங் கடுங்குரன் முரசம்
கால்கிளர்ந் தன்ன வூர்தி கான்முளை
எதிர்கிழ்ந் தன்ன சிறையருஞ் சீற்றத்து
நளியிரும் பரப்பின் மாக்கடன் முந்நீர்
நீர்துனைந் தன்ன செலவின்
நிலந்திரைப் பன்ன தானையோய் நினக்கே." [பதிற்றுப்பத்து]

கொடுத்தல் எய்திய கொடைமையும்-கொடுத்தலைப்

பொருந்திய கொடை-

மையும்.



உதாரணம் :—

" பாணர் தாமரை மலையவும் புலவர்
பூணுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்
மறனோ மற்றிது விறன்மாண் குடுமி
இன்னா வாகப் பிறர்மண்கொண்
டினிய செய்திநின் னார்வலர் முகத்தே."

[புறம்-௧௨]

அடுத்து ஊர்ந்து அட்ட கொற்றமும்-பகைவர் பலரையும் அடுத்து மேலிட்டுக் கொன்ற கொற்றமும்.

உதாரணம் :—

"திண்பிணி முரச மிழுமென முழங்கச்
சென்றமர் கடத்தல் யாவது வந்தோர்
தார்தாங் குதலு மாற்றூர் வெடிபட்
டோடன் மரீஇய பீடின் மன்னர்
நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇக்
காதன் மறந்து தீதுமருங் கறுமார்
அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்
திறம்புரி பசும்புற் பரப்பினர் கிடப்பி
மறங்கந் தாக நல்லமர் வீழ்ந்த
நீள்கழன் மன்னர் செல்வுழிச்

செல்கென

வாள்போழ்ந் தடக்கலு முய்ந்தனர்

மாதோ

வரிஞிமி றார்க்கும் வாய்புகு கடாஅத்
தண்ணல் யானை யடுகளத் தொழிய
வருஞ்சமந் ததைய நூறிநீ
பெருந்தகை விழுப்புண் பட்ட வாறே."

[புறம்-கூ]

மாராயம் பெற்ற நெடு மொழியும்-மாராயமாகிய
உவகை பெற்ற நெடியமொழி

யும்.

உதாரணம் :—

" துடியெறியும் புலையா
வெறிகோல்கொள்ளு மிழிசின
கால மாரியி னம்பு தைப்பினும்
வயற்கெண்டையின் வேல்பிறழினும்
பொலம்புனை யோடை யண்ணல் யானை
இலங்குவாண் மருப்பி னுதிமடுத் தூன்றினும்
ஓடல் செல்லாப் பீடுடை யாளர்
நெடுநீர்ப் பொய்கைப் பிறழிய வாளை
நெல்லுடை நெடுநகர்க் கூட்டுமுதற் புரளுந்
தண்ணடை பெறுதல் யாவது படினே
மாசின் மகளிர் மன்ன னன்றும்
உயர்நிலை யுலகத்து நுகர்ப வதனால்

ன்ஷ் தொல்காப்பியம் - இளம்பூரணம்

வம்ப வேந்தன் றானை
இம்பர் நின்றுங் காண்டிரோ வரவே." [புறம்-உஅஎ]

பொருள் இன்று உய்த்த பேர் ஆண்

பக்கமும்-பகைவரைப் பொருளாக மதியாது செலுத்தின பேர்
ஆண் பக்கமும்.

உதாரணம்:—

"ஆவு மானியற் பார்ப்பன மாக்களும
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம்மம்பு கடிவிடுது நும்மரண்

சேர்மினென

அறத்தா றுநவலும் பூட்கை மறத்திற்
கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு

நிழற்றும்

எங்கோ வாழிய குடுமி தங்கோச்
செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த
முந்நீர் விழவி னெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே."

[புறம்-௯]

விசைவரு புனலை கற்சிறைபோல ஒருவன் தாங்கிய பெருமையும்-விசை கொண்டுவரும் புனலைக் கற்சிறை தாங்கினாற்போல ஒருவன் தாங்கிய பெருமையும்.

உதாரணம் :—

"வீடுணர்ந் தார்க்கும் வியப்பாமா

லிந்நின்ற

வாடன் முதியாள் வயிற்றிடங்—கூடார்

பெரும்படை வெள்ள நெரிதரவும்

பேரா

இரும்புலி சேர்ந்த விடம்"

[வெண்பா-வஞ்சி-கக]

எனவும்,

" வேந்துடைத் தானை முனைகெட நெரிதர

வேந்துவாள் வலத்த னொருவ னாகித்

தன்னிறந்து வாராமை விலக்கலிற் பெருங்கடற்

காழி யனையன் மாதோ வென்றும்

பாடிச் சென்றோர்க் கன்றியும் வாரிப்

புரவிற் காற்றாச் சீறூர்த்

தொன்மை சுட்டிய வன்மை யோனே" [புறம்-கூகூ0]

எனவும் வரும்.

பிண்டம் மேய பெருஞ்சோற்று நிலையும்-திரட்சி பொருந்தின பெருஞ்சோற்று நிலையும்.

உதாரணம்:—

" இணர்ததை ஞாழற் கரைகெழு பெருந்துறை

மணிக்கலத் தன்ன மாயிதழ் நெய்தற்

பாசடைப் பனிக்கழி துழைஇப் புன்னை

வாலிணர்ப் படுசினைக் குருகிறை

கொள்ளும்

மல்குறு கான லோங்குமணலடைகரை
தாழடம்பு மலைந்த புணரி வளைஞரல
விலங்குகதிர் முத்தமொடு வார்துகி ரெடுக்குந்
தண்கடற் படப்பை மென்பா லனவும்
காந்தளங் கண்ணிக் கொலைவில் வேட்டுவர்
செங்கோட் டாமா னூனொடு காட்ட
மதனுடை வேழத்து வெண்கோடு கொண்டு
பொன்னுடை நியமத்துப் பிழிநொடை

கொடுக்கும்

குன்றுதலை மணந்த வன்புலவைப்பும்
கால மன்றியுங் கரும்புயத் தொழியா
தரிகா லவித்துப் பல்பூ வுழவர்
தேம்பாய் மருத முதல்படக் கொன்று
வெண்டலைச் செம்புனல் பரந்துவாய் மிகுக்கும்
பலசூழ் பதப்பர் பரிய வெள்ளத்துச்
சிறைகொள் பூசலிற் புகன்ற வாய
முழவிமிழ் மூதூர் விழவுக்கா ணுஉப் பெயருஞ்

செழும்பல் வைப்பிற் பழனப் பாலும்
ஏன லுழவர் வரகுமீ திட்ட
கான்மிகு குளவிய வன்புசே ரிருக்கை
மென்றினை நுவணை முறைமுறை பகுக்கும்
புன்புலந் தழீஇய புறவணி வைப்பும்
பல்பூஞ் செம்மற் காடுபய மாறி
அரக்கத் தன்ன நுண்மணற் கோடுகொண்
டொண்ணுதன் மகளிர் கழலொடு மறுகும்
விண்ணுயர்ந் தோங்கிய கடற்றவும் பிறவும்

பணைகெழு வேந்தரும் வேளிரு
மொன்றுமொழிந்து

கடலவுங் காட்டவு மரண்வலியார் நடுங்க
முரண்மிகு கடுங்குரல் விசும்படை பதிரக்
கடுஞ்சினங் கடாஅய் முழங்கு மந்திரத்
தருந்திறன் மரபிற் கடவுட் பேணி
உயர்ந்தோ னேந்திய வரும்பெறற் பிண்டங்
கருங்கட் பேய்மகள் கைபுடையூஉ நடுங்க
நெய்த்தோர் தூஉய நிறைமகி ழிரும்பலி
எறும்பு மூசா விறும்பூது மரபிற்
கருங்கட் காக்கையொடு பருந்திருந் தார
ஓடாப் பூட்கை யொண்பொறிக் கழற்காற்

பெருஞ்சமந் ததைந்த செருப்புகன் மறவர்
உருமுறில னதிர்க்கும் குரலொடு
கொளைபுணர்ந்து
பெருஞ்சோ றுகுத்தற் கெறியுங்
கடுஞ்சின வேந்துசேண்
டழங்குகுரன் முரசே." [பதிற்றுப்பத்து]

வென்றோர் விளக்கமும்-வென்றோர்மாட்டு உளதாகிய விளக்கமும்,



"அரூஅ யாண ரகன்கட் செறுவின்
அருவி யாம்ப னெய்தலொ டரிந்து
செறுவினை மகளிர் மலிந்த வெக்கைப்
பரூஉப்பக டுதிர்த்த மென்செந் நெல்லின்
அம்பண வளவை யுறைகுவித் தாங்குக்
கடுந்தே றுறுகிளை மொசிந்தன துஞ்சுஞ்
செழுங்கூடு கிளைத்த விளந்துணை மகாரின் அலந்தனர்
பெருமநின் னுடற்றி யோரே
ஊரெரி கவர வுருத்தெழுந் துரைஇப்
போர்சுடு கமழ்புகை மாதிர மறைப்ப
மதில்வாய்த், தோன்ற லீயாது தம்பழி யூக்குநர்

குண்டுகெ ணகழிய குறுந்தாண் ஞாயில்
ஆரெயிற் றோட்டி வவ்வினை யேஎறூடு
கன்றுடை யாயந் தரீஇப் புகல்சிறந்து
புலவுவில் லிளைய ரங்கை விடுப்ப
மத்துக்கயி றாடா வைகற்பொழுது நினையூஉ
வான்பயம் வாழுநர் கழுவுடலை மடங்கப்
பதிபா ழாக வேறுபுலம் படர்ந்து
விருந்தின் வாழ்க்கையொடு பெருந்திரு வற்றென
அருஞ்சமத் தருநிலை தாங்கிய புகர்நுதற்
பெருங்களிற் றியானையோ டருங்கலந் தராஅர்
மெய்பனி கூர வணங்கெனப் பராவலிற்
பலிகொண்டு பெயரும் பசாசம் போலத்
திறைகொண்டு பெயர்தி வாழ்கநின் னூழி
உரவரு மடவரு மறிவுதெரிந் தெண்ணி
அறிந்தனை யருளா யாயின்
யாரிவ ணெடுந்தகை வாழு மோரே.” [பதிற்று-௭௧]
தோற்றோர் தேய்வும்-தோற்றோர் தேய்வு கூறுதலும்.

உதாரணம் :—

“ வான்மருப்பிற் களிற்றியானை
மாஅமலையிற் கணங்கொண்டவர்
எடுத்தெறிந்த விறன்முரசங்
கார்மழையிற் கடிதுமுழங்கச்

சாந்துபுலர்ந்த வியன் மார்பிற்

றொடிசுடர்வரும் வலிமுன்கைப்

புண்ணுடை யெறுழ்த்தோட்

புடையலங் கழற்காற்

பிறக்கடி யொதுங்காப் பூட்கை யொள்வாள் ஓடிவி றெவ்வ

ரெதிர்நின் றுரைஇ

இடுக திறையே புரவெதிர்ந் தோற்கென

அம்புடை வலத்த ருயர்ந்தோர் பரவ

அனையை யாகன் மாறே பகைவர்

பொருளதிகாரம் - புறத்திணையியல்

அக

கால்கிளர்ந் தன்ன கதழ்பரிப் புரவிக்

கடும்பரி நெடுந்தேர் மீமிசை

நுடங்குகொடி

புலவரைத் தோன்றல் யாவது

சினப்போர்

நிலவரை நிறீஇய நல்லிசைத்

தொலையாக் கற்பநின் றெம்முனை

யானே." [பதிற்று-அய]

குன்று சிறப்பின்

கொற்றவள்ளையும்-குறைவுறுதலைச்செய்யாத வென்றிச் சிறப்பினையுடைய கொற்றவள்ளையும்.

கொற்றவள்ளை-தோற்ற கொற்றவன் அளிக்கும் திறை. உதாரணம் வந்துழிக் காண்க.

அழிபடை தட்டோர் தழிஞ்சியொடு தொகைஇ-மாற்றார்விடு படைக்கலன் முதலியனவற்றைத் தம்மாட்டுத் தடுத்து உளன் அழிந்தோர்ப் பேணித் தழுவிக்கோடலொடு தொகுத்து எண்ணின்.

உதாரணம் :—

“ வருகதில் வல்லே வருகதில் வல்லென
வேந்துவிடு விழுத்தூ தாங்காங் கிசைப்ப
நூலரி மாலை சூடிக் காலிற்
றமியன் வந்த மூதி லாளன்
அருஞ்சமந் தாங்கி முன்னின் றெறிந்த
ஒருகை யிரும்பிணத் தெயி றுமின்ற

யாகத்

திரிந்த வாய்வா டிருத்தாத்
தனக்கிரிந் தானைப் பெயர்புற நகுமே.”

[புறம்-உஅ௪]

இத்துணையும் கூறப்பட்டது வஞ்சி.

“ ஊர்வரு மடவரு மறிவுதெரிந்

தெண்ணி

அறிந்தனை யருளா ராயின்
யாரிவ ணெடுந்தகை வாழு மோரே"

[பதிற்று-௭௧] என்பதும் இதன்கண் அடங்கும். இது முதுமொழிவஞ்சி.

கழி பெருஞ் சிறப்பின் பதின்மூன்று துறை-மிகப்

பெருஞ் சிறப்பையுடைய பதின்மூன்று துறைத்தாம்.

வென்றோர் விளக்கம் முதலிய மூன்று மொழிந்த

ஏனைய வெல்லாம் இரு திறத்தி னர்க்கும் பொதுவாக நிற்றலின் கழிபெருஞ்சிறப்பெனக் கூறினர். இன்னும் "கழிபெருஞ்சிறப்பின்" என்றமையின், பேரரசர் துணையாக வந்த குறுநில மன்னரும் தாமும் பொலிவெய்திப் பாசறைநிலை உரைத்தலும் பிறவும் கொள்க. இவைபற்றியன துணைவஞ்சி. "நீயே புறவி னல்லல்" [புறம்-௪௬] "வள்ளியோர்ப்படர்ந்து" [புறம்-௪௭] என்னும் புறப்பாட்டுக்களில் காண்க. பிறவும் அன்ன.

(௭)

௬௬. உழிஞை தானே மருதத்துப்

புறனே

முழுமுத லரண முற்றலுங்

கோடலும்

அனைநெறி மரபிற் றாகு மென்ப.

இஃது, உழிஞைத்திணை யாமாறு

உணர்த்துதல் நுதலிற்று.

11



இ-ள்:—உழிஞை மருதத்துப் புறன்-உழிஞை என்னும் புறத்திணை மருதம் என்னும் அகத்திணைக்குப் புறனும்: முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும் அனைநெறி மரபிற்று ஆகும்-அது முழுமுதல் அரணம் முற்றுதலும் அழித்தலுமாய் வருந்தன்மைத் தாகிய நெறியை மரபாக உடைத்து.

'முதல் அரணம்' என்றதனான், தலையும் இடையும் கடையும் என மூவகைப்படு மவற்றுள் தலையரண். அஃதாவது, அரணிற்குக் கூறுகின்ற இலக்கணம் பலவும் உடைத் தாதல். மருதத்திற்கு இது புறனாயவாறு என்னையெனின், வஞ்சியிற் சென்ற வேந்தனொடு போர்செய்த லாற்றாது உடைந்து மாற்றுவேந்தன் அரண் வலியாகப் போர் செய்யுமாகலானும், அவர் நாட்டகத்தாகலானும், அவ்வழிப் பொருவார்க்கு விடியற்பொ

ழுது காலமாகலானும் அதற்கு இது புறனாயிற்று. காட்டெல்லையின் அழிப்பு உழி ஞையாகுமோ வெனின், அது பெரிதாயின் அதன் பாற்படும்; சிறிதாயின் வெட்சி யுள் ஓதின ஊர்க்கொலை [புறத்திணை-௩] யுள் அடங்கும். (அ)

௬௭. அதுவே தானு மிருநால் வகைத்தே.

இஃது, உழிஞைத்திணையை வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:—அது தான் இருநால் வகைத்து-உழிஞைத்துறைதான் எட்டு வகைத்து.

அவையாமாறு முன்னர்க் காணப்படும். [ஏகாரமும் உம்மையும் அசைகள்.] (௯)

௬அ. கொள்ளார் தேஎங் குறித்த கொற்றமும்

உள்ளிய து முடிக்கும் வேந்தனது சிறப்புந்
தொல்லெயிற் றிவர்தலுந் தோலது பெருக்கமும்
அகத்தோன் செல்வமு மன்றி முரணிய
புறத்தோ னணங்கிய பக்கமுந் திறற்பட
ஒருதான் மண்டிய குறுமையு முடன்றோர்

வருபகை பேணார் வாரெயி லுளப்படச்
சொல்லப் பட்ட நாலிரு

வகைத்தே.

இதுவும் உழிஞை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:—கொள்ளார் தேஎம் குறித்த கொற்றம் முதலாகச் சொல்லப்பட்டன உழி ஞைத் துறையாம்.

கொள்ளார் தேஎம் குறித்த கொற்றமும்-பகைவரது தேயத்தைக் கொள்ளக் குறித்த கொற்றமும்.
[கொள்ளார்-தன்னை இறையெனக் கொள்ளாரும் தன் ஆணையைக் கொள்ளாரும்.

உதாரணம் :—

" ஆனு வீகை யடுபோ ரண்ணனின்
யானையு மலையிற் றோன்றும் பெருமநின்
றானையுங் கடலி னொலிக்கும் வைந்நுதி
வேலு மின்னின் விளங்கு ஞாலத்
தரசுதலை பணிக்கு மாற்றலை யாகலிற்
புரைதீர்ந் தன்றது புதுவதோ வன்றே
தண்புனற் பூச லல்லது நொந்து

களைக வாழி வளவ வென் றுநின்
முனைதரு பூசல் கனவினு மறியாது
புலிபுறங் காக்குங் குருளை போல
மெலிவில் செங்கோ னீபுறங் காப்பப்
பெருவிறல் யாணர்த் தாகி யரிநர்
கீழ்மடைக் கொண்ட வாளையு முழவர்
படைமிளிர்ந் திட்ட யாமையு மறைநர்
கரும்பிற் கொண்ட தேனும் பெருந்துறை
நீர்தரு மகளிர் குற்ற குவளையும்
வன்புலக் கேளிர்க்கு வருவிருந் தமரும்
மென்புல வைப்பி னன்னாட்டுப் பொருந
மலையி னிழிந்து மாக்கட னோக்கி
நிலவரை யிழிதரும் பல்யாறு போலப்
புலவ ரெல்லா நின்னோக் கினரே
நீயே, மருந்தில் கணிச்சி வருந்தவட்

டித்துக்

கூற்றுவெகுண் டன்ன முன்பொடு
மாற்றிரு வேந்தர் மண்ணோக் கினையே."

[புறம்-௪௨]

உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பும்-நினைத்தது முடிக்கலாகும் வேந்தனது சிறப்பும்.

உதாரணம் :—

"அடுகை யாயினும் விடுகை யாயினும்
நீயளந் தறிவை நின்புரைமை வார்கோற்
செறியரிச் சிலம்பிற் குறுந்தொடி மகளிர்
பொலஞ்செய் கழங்கிற் றெற்றி யாடுந்
தண்ணான் பொருநை வெண்மணற்
சிதையக்
கருங்கைக் கொல்ல னரஞ்செ யவ்வாய்
நெடுங்கை நவியம் பாய்தலி னிலையழிந்து
வீகமழ் நெடுஞ்சினை புலம்பக்
காவுதொறுங்
கடிமரந் தடியு மோசை தன்னூர்
நெடுமதில் வரைப்பிற் கடிமனை யியம்ப
ஆங்கினி திருந்த வேந்தனோ டீங்குநின்
சிலைத்தார் முரசங் கறங்க
மலைத்தனை யென்பது நாணுத்தக
வுடைத்தே. [புறம்-௩௬]

இன்னும் 'உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பு' மென்றதனால் அகத்தரசனை யழித்தது கூறலும் கொள்க.

உதாரணம் :—

"இரும்பிடித்
தொழுதியொடு பெருங்கயம் படியா
நெல்லுடைக் கவளமொடு நெய்ம்மிதி
பெறாஅ
திருந்தரை நோன்வெளில் வருந்த வொற்றி
நிலமிசைப் புரளுங் கைய வெய்துயிர்த்



அலமரல் யானை யுருமென முழங்கவும்
பாலில் குழவி யலறவு மகளிர்
பூவில் வறுந்தலை முடிப்பவு நீரில்
வினைபுனை நல்லி லினைகூஉக் கேட்பவும்
இன்னா தம்ம வீண்டினி திருத்தல்
துன்னருந் துப்பின் வயமான் றோன்றல்
அறவை யாயி னினதெனத் திறத்தல்
மறவை யாயிற் போரொடு திறத்தல்
அறவையு மறவையு மல்லை யாயின்
திறவா தடைத்த திண்ணிலைக் கதவின்
நீண்மதி லொருசிறை யொடுங்குதல்
நாணுத்தக வுடைத்திது காணுங் காலே." [புறம்-௪௪]

தொல் எயிற்கு இவர்தலும்-தொல் எயிலின்கண் பரத்தலும்.

உதாரணம் :—

> "புல்லார் புகழொடு போக்கொழியப் பொங்கினனாய்ப்
> பல்லார் மருளப் படைபரப்பி—யொல்லார்
> நிறத்திறுத்த வாட்டானை நேரார் மதிலின்
> புறத்திறுத்தான் பூங்கழலி னான்."

[வெண்பா-உழிஞை-ங] தோலது

பெருக்கமும்-தோற்படையினது பெருமையும். உதாரணம் :—

> "நின்ற புகழொழிய நில்லா வுயிரோம்பி
> இன்றுநாம் வைக
> விழிவாகும்—வென்றொளிரும்
> பாண்டி னிரைதோற் பணியார் பகையரணம்
> வேண்டி வெளிதென்றான் வேந்து."

[வெண்பா-உழிஞை-கஉ] அகத்தோன்

செல்வமும்-அகத்தரசனது செல்வமும்.

உதாரணம் :—

> "அளிதோ தானே பாரியது பறம்பே
> நளிகொண் முரசின் மூவிரு முற்றினும்
> உழவ ருழாதன நான்குபய னுடைத்தே
> ஒன்றே, சிறியிலை வெதிரி னெல்விளை
> யும்மே
> இரண்டே, தீஞ்சுளைப் பலவின் பழமூழ்க்

கும்மே

மூன்றே, கொழுங்கொடி வள்ளிக்

கிழங்குவீழ்க் கும்மே

நான்கே, அணிநிற வோரி பாய்தலின்

மீதழிந்து

திணிநெடுங் குன்றந் தேன்சொரி யும்மே
வான்க ணற்றவன் மலையே வானத்து
மீன்க ணற்றதன் சுனையே யாங்கு
மரந்தொறும் பிணித்த களிற்றினி ராயினும்
புலந்தொறும் பரப்பிய தேரினி ராயினுந்
தாளிற் கொள்ளலிர் வாளிற் றூரலன்
யானறி குவெனது கொள்ளு மாறே

பொருளதிகாரம் - புறத்திணையியல்

அ௫

சுகிர்புரி நரம்பின் சீறியாழ் பண்ணி
விரையொலி கூந்தனும் விறலியர் பின்வர
ஆடினிர் பாடினிர் செலினே
நாடுங் குன்று மொருங்கீ யும்மே." [புறம்-ா௧0]

அன்றி முரணிய புறத்தோன் அணங்கிய பக்கமும்-அன்றியும் பகைத்த புறத்தரசன் வருந்திய பக்கமும்.

உதாரணம் :—

“ நஞ்சுடை வாலெயிற் றைந்தலை சுமந்த
வேக வெந்திற னாகம் புக்கென
விசும்புதீப் பிறப்பத் திருகிப் பசுங்கொடிப்
பெருமலை விடரகத் துருமெறிந் தாங்குப்
புள்ளுறு புன்கண் டீர்த்த வெள்வேற்
சினங்கெழு தானைச் செம்பியன் மருக
கராஅங் கலித்த குண்டுகண் ணகழி
இடங்கருங் குட்டத் துடனொலிக் கோடி
யாமங் கொள்பவர் சுடர்நிழற் கதூஉங்
கடுமுரண் முதலைய நெடுநீ ரிலஞ்சிச்
செம்புறழ் புரிசைச் செம்மன் மூதூர்
வம்பணி யானை வேந்தகத் துண்மையின்
நல்லவென் றுது சிதைத்தல்
வல்லையா னெடுந்தகை செருவத் தானே ”

[புறம்-௩௭]

திறப்பட ஒரு தான் மண்டிய குறுமையும்-வலிபட ஒரு தானாகிச் சென்ற குற்று நிலையும்.

உதாரணம் :—

" கிண்கிணி களைந்தகா லொண்கழ

றொட்டுக்

குடுமி களைந்த வேம்பி ஞெண்டளிர்
நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மலைந்து
குறுந்தொடி கழித்தகைச் சாபம் பற்றி

நெடுந்தேர்க் கொடிஞ்சி பொலிய நின்றோன்
யார்கொல் வாழ்கவன் கண்ணிதார்

பூண்டு

தாலிகளைந் தன்று மிலனே பால்விட்
டயினியு மின்றயின் றனனே வயின்வயின்
உடன்றுமேல் வந்த வம்ப மள்ளரை
வியந்தன்று மிழிந்தன்று மிலனே யவரை

அழுந்தப் பற்றி யகல்விசும் பார்ப்பெழக்
கவிழ்ந்துநிலஞ் சேர வட்டதை
மகிழ்ந்தன்று மலிந்தன்று மதனினு மிலனே." [புறம்-௭௭]

உடன்றோர் வருபகை பேணார்

வாரெயில்-வெகுண்டு வருகின்ற படையைப்

உதாரணம் :—

" மயிர்க்கணைத் தன்னோர் மகிழ்தேற லூட்டக்
கயிற்கழலார் கண்கனல் பூப்ப—வெயிற்கண்ணார்
வீயப்போர் செய்தாலும் வென்றி யரிதரோ
மாயப்போர் மன்னன் மதில்." [வெண்பா-உழிஞை-மக]

உளப்பட சொல்லப்பட்ட நாலிரு வகைத்து-உட்படக் கூறப்பட்ட எட்டு வகைத்து. பதினெட்டு, இருபத்தொன்பது என்பார் மதம் விலக்கியமை தோன்றப் பெயர்த்துக் தொகை கூறினார். இது கூறியது கூறலன்று; தொகை. (ய)

சுக.

குடையும் வாளு நாள்கோ ளன்றி
மடையமை யேணிமிசை மயக்கமுங் கடைஇச்
சுற்றம ரொழிய வென்றுகைக் கொண்டு
முற்றிய முதிர்வு மன்றி முற்றிய
அகத்தோன் வீழ்ந்த நொச்சியு மற்றதன்
புறத்தோன் வீழ்ந்த புதுமை யானும்
நீர்ச்செரு வீழ்ந்த பாசியு மதாஅன்
றூர்ச்செரு வீழ்ந்த மற்றதன் மறனும்

மதின்மிசைக் கிவர்ந்த மேலோர் பக்கமும்
இகன்மதிற் குடுமிகொண்ட மண்ணு மங்கலமும்
வென்ற வாளின் மண்ணோ டொன்றத்
தொகைநிலை யென்னுந் துறையொடு தொகைஇ
வகைநான் மூன்றே துறையென

மொழிப.

**இதுவும் அது.**

இ-ள்:—குடை நாட்கோள் முதலாகச் சொல்லப்பட்டுள்ள பன்னிரண்டு துறையும் உழிஞைக் குரிய துறை. மேற்சொல்லப்பட்டவற்றின் விரியும் பன்னிரண்டு உள என்ற வாறு.

குடையும் வாளும் நாள் கோள்-குடைநாட்கோள் வாள்நாட்கோள் என வருவனவும்.

உதாரணம் :—

"நெய்யணிக செவ்வே
னெடுந்தேர் நிலைபுகுக
கொய்யுளைமா கொல்களிறு
பண்விடுக—வையகத்து
முற்றக் கடியரண மெல்லா முரணவிந்த
கொற்றக் குடைநாட் கொள." [வெண்பா-உழிஞை-உ]

இது குடைநாட்கோள்.

"வாணாட் கொளலும் வழிமொழிந்து வந்தடையாப்

" பேணார் பிறைதொடூஉம் பேர்மதிற்-பூணார்
அணிகொள் வனமுலையா ராடரங்க மேறிப்
பிணிகொண்டே யாடும் பெயர்த்து."

[வெண்பா-உழிஞை-௯]

இது வாள் நாட்கோள்.

## பொருளதிகாரம்

புறத்திணையியல் அஎ

மடை அமை ஏணி மிசை மயக்கமும்-மதிலிடத்து மடுத்தல் அமைந்த ஏணி சார்த்தி அதன்மேல் பொரும் போர்மயக்கமும்.

உதாரணம் :—

" சுடுமண் ணெடுமதில் சுற்றிப் பிரியார்
கடுமுரண் ணெஃகங் கழிய—வடுமுரண்

ஆறினா ரன்றி யரவு முடும்பும்போல்
ஏறினா ரேணி பலர்."

[வெண்பா-உழிஞை-கக]

கடைஇச் சுற்றமர் ஒழிய வென்று கைக்கொண்டு முற்றிய முதிர்வும்-செலுத்திச் சுற்றமர் ஒழிக என்று கைக்கொண்டு முற்றிய முதிர்வும்.

உதாரணம் :—

" காலை முரச மதிலியம்பக் கண்கனன் று
வேலை விறல்வெய்யோ
னேக்குதலும்—மாலை
அடுது மடிசிலென் றம்மதிலு ளிட்டார்
தொடுகழலார் மூழை துடுப்பு."

[வெண்பா-உழிஞை-உக]

முற்றிய அகத்தோன் வீழ்ந்த நொச்சியும்-முற்ற அகப்பட்ட அகத்திலுள்ளான் வீழ்ந்த நொச்சியும்.

உதாரணம் :—

" நீர றவறியா நிலமுதற் கழித்த
கருங்கா னொச்சிக் கண்ணார்
குரூஉத்தழை
மெல்லியன் மகளிர்க் கல்குற் றொடலை
யாகவுங் கண்டன மினியே வெருவரு

குருதியொடு மயங்கி யுருவு கரந்து

தெறவாய்ப் பட்ட தெரிஞரான் செத்து

பருந்துகொண் டுக்கவுங் கண்டனம்

மறம்புகன் மைந்தன் மலைந்த வாறே." [புறம்-உஎக]

அதன் புறத்தோன் வீழ்ந்த புதுமையும்-நொச்சியின் புறத்தாகிய உழிஞையான் வீழ்ந்த புதுமையும் ['மற்று' என்பது அசை. 'ஆன்' என்பது இடைச்சொல்.]

உதாரணம் :—

கோடுயர் வெற்பி னிலங்கண்

டிரைகருதுந்

தோடுகொள் புள்ளின்

றொகையொப்பக்—கூடார்

முரணகத்துப் பாற முழவுத்தோண் மள்ளர்

அரணகத்துப் பாய்ந்திழிந்தா ரார்த்து." [வெண்பா-உழிஞை-உ0]

நீர்ச்செரு வீழ்ந்த பாசியும்-கிடங்கின் உளதாகிய

போரின்கண்ணே வீழ்ந்த பாசி

யும.

உதாரணம் :—

" நாவாயுந் தோணியு மேல்கொண்டு நண்ணுதார்

ஓவார் விலங்கி யுடலவும்—பூவார்

அகழி பரந்தொழுகு மங்குருதிச்
சேற்றுப்
பகழிவாய் வீழ்ந்தார் பலர்."
[வெண்பா-உழிஞை-௧௭]



அஃது அன்று ஊர்ச்செரு வீழ்ந்த அதன் மறனும்-அஃது ஒழிய ஊர்ச்செருவின்
கண் வீழ்ந்த பாசிமறனும். ['மற்று' என்பது அசை.]

உதாரணம் :—

"பாயினர் மாயும் வகையாற் பலகாப்பு
மேயினா ரேய விகன்மறவ—ராயினர்
ஒன்றி யவரற வூர்ப்புறத்துத் தார்தாங்கி
வென்றி யமரர் விருந்து." [வெண்பா-நொச்சி-௨]

மதில்மிசைக்கு இவர்ந்த மேலோர்
பக்கமும்-மதின்மேற்கோடற்குப் பரந்த மதிலோர் பக்கமும்.

உதாரணம் :—

"அகத்தன வார்கழ லேனோன் றரணின்
புறத்தன போரெழிற் றிண்டோள்—உறத்தழீஇத்

தோட்குரிமை பெற்ற துணைவளையார் பாராட்ட
வாட்குரிசில் வானுலகி னான்." [வெண்பா-நொச்சி-எ]

இகல் மதில் குடுமி கொண்ட மண்ணும்
மங்கலமும்-தம்முடன் இகலி மதில்மேல்
நின்றானை அட்டு அவன்முடிக்கலம் கொண்ட மண்ணும்
மங்கலமும்.

உதாரணம் :—

எங்கண் மலர வெயிற்குமரி சூடிய
மங்கல நாள்யா மகிழ்தூங்கக்—கொங்கலர்தார்ச்
செய்சுடர்ப்பூண் மன்னவன் சேவடிக்கீழ் வைகினவே
மொய்சுடர்ப்பூண் மன்னர் முடி." [வெண்பா-உழிஞை-உ௮]

வென்ற வாளின் மண்ணொடு ஒன்ற-வென்ற
வாளின் மண்ணும் மங்கலமும்
பொருந்த.

உதாரணம் :—

"தீர்த்தநீர் பூவொடு பெய்து திசைவிளங்கக்
கூர்த்தவாண் மண்ணிக் கொடித்தேரான்—பேர்த்து
மிடியார் பனைதுவைப்ப விம்மதிலுள் வேட்டான்
புடையா ரறையப் புகழ்." [வெண்பா-உழிஞை-உள]

தொகைநிலை-அம்மதிலழித்தமையான் மற்றுள்ள
மதில்கள்வரைப்பில் மாறு

பட்ட வேந்தரும் முரண் அவிந்தபடி யடைதல்.

உதாரணம் :—

"வென் றுலந்த திரிய வேண்டுபுலத்
திறுத்தவர்
வாடா யாணர் நாடுதிறை கொடுப்ப
நல்கினை யாகுமதி யெம்மென் றருளிக்
கலம்பிறங்கு வைப்பிற் கடற்றிரை
யாத்தநின்
ஹெல்புகழ் மூதூர்ச் செல்குவை யாயிற்
செம்பொறிச் சிலம்பொ டணித்தழை
தூங்கும்
எந்திரத் தகைப்பி னம்புடை வாயிற்
கோள்வன் முதலைய குண்டுகண் ணகழி



வானுற வோங்கிய வளைந்துசெய் புரிசை

ஒன்னாத் தெவ்வர் முனைகெட விலங்கி
நின்னிற் றந்த மன்னெயி லல்லது

முன் னும் பின் னுநின் முன்னே

ரோம்பிய

எயின்முகப் படுத்தல் யாவது வளையினும்
பிறிதாறு சென்மதி சினங்கெழு குருசில்
பூஉப்புறந் தழீஇப் பொன்பிணிப்

பலகைக்

குழூஉ நிலைப் புதவிற் கதவமே காணில்
தேம்பாய் கடாமொடு காழ்கை நீவி
வேங்கை வென்ற பொறிகிளர் புகர்நுதல்
ஏந்துகை சுருட்டித் தோட்டி நீவி
மேம்படு வெல்கொடி நுடங்கத்
தாங்க லாகா வாங்குநின் களிறே."

[பதிற்று-௫௩] (௰௧)

என்னும் துறையொடு தொகைஇ வகை நால்மூன்று என மொழிப-என்னும் துறையொடு கூடி உழிஞைவகை பன்னிரண்டு என்று கூறுவர்.

எ௰. தும்பை தானே நெய்தலது

புறனே

மைந்துபொரு ளாக வந்த

வேந்தனைச்

சென்றுதலை யழிக்குஞ் சிறப்பிற் றென்ப.

இது, தும்பைத்திணை யாமாறு உணர்த்துதல்

நுதலிற்று.

இ-ள்:—தும்பை நெய்தலது புறன்-தும்பை என்னும் திணை நெய்தல் என்னும்
அகத்திணைக்குப் புறனும். மைந்து பொருளாக வந்த வேந்தனை சென்று தலையழிக்
கும் சிறப்பிற்று-அது வலி பொருளாகப் போர்கருதி வந்த அரசன்கண் சென்று அவ
னைத் தலையழிக்கும் சிறப்பினையுடைத்து.

இதனனே "எதிரூன்றல் காஞ்சி"

[பிங்க-அநுபோக-கசஎச] என்பாரை மறுத்த
வாறு அறிக. அதற்கு இது புறனயவாறு என்னையெனின், இருபெருவேந்தரும் ஒரு
களத்துப் பொருதலின், அதற்கு இடம் காடும் மலையும் கழனியும் ஆகாமையானும், கள
ரும் மணலும் பரந்த வெளிநிலத்துப் பொருதல் வேண்டுதலானும், அந்நிலம் கடல்சார்
ந்த வழியல்லது இன்மையானும், நெய்தற்கு ஓதிய எற்பாடு போர்த்தொழிற்கு முடி
வாதலானும் நெய்தற்குப் புறனயிற்று. ['என்ப' அசை.]
(யஉ)

கணையும் வேலுந் துணையுற மொய்த்தலிற்
சென்ற வுயிரி னின்ற யாக்கை
இருநிலந் தீண்டா வருநிலை
வகையோ
டிருபாற் பட்ட வொருசிறப்
பின்றே.

இது, தும்பைத்திணையின் சிறப்பியல் உணர்த்துதல் நுதலிற்று. இது மேலன
போல ஒரு பாற்கு மிகுதலின்றி இருவகையார்க்கும் ஒத்த இயல்பிற்றும்; ஒருவர் மாட்
டும் மிகுதல் இல்லை.

இ-ள் :—கணையும் வேலும் துணையுற மொய்த்தலின் சென்ற உயிரின் நின்ற யாக்கை-கணையும் வேலும் படைத்துணையாக்கொண்டு பொருதல் காரணமாகச் சென்ற உயி





ரின் நின்ற யாக்கை, இருநிலம் தீண்டா அரு நிலைவகையொடு-சீர் அட்டை காலவயட் பட்டு உடலினின்று உயிர் பிரிக்கப்படுமாறு, இருபால் பட்ட ஒரு சிறப்பின்று-இருபாற் படுக்கப்படும் அற்ற துண்டம் இணைந்தது போன்று ஆடலொத்த பண்பினை யுடையது.
[இருநிலம் தீண்டா அரு-நீருட் கிடக்கும் அட்டை.] (மசு)

எஉ. தானை யானை குதிரை யென்ற
நோனா ருட்கு மூவகை நிலையும்

வேன்மிகு வேந்தனை மொய்த்தவழி
யொருவன்
தான்மீண் டெறிந்த தார்நிலை
யன்றியும்
இருவர் தலைவர் தபுதிப் பக்கமும்
ஒருவ னொருவனை யுடைபடை
புக்குக்
கூழை தாங்கிய பெருமையும்
படையறுத்துப்
பாழி கொள்ளு மேமத் தானுங்
களிறெறிந் தெதிர்ந்தோர் பாடுங்
களிற்றொடு
பட்ட வேந்தனை யட்ட வேந்தன்
வாளோ ராடு மமலையும் வாள்வாய்த்
திருபெரு வேந்தர் தாமுஞ் சுற்றமும்
ஒருவரு மொழியாத் தொகைநிலைக்
கண்ணுஞ்
செருவகத் திறைவன் வீழ்வுறச்
சினைஇ

ஒருவனை மண்டிய நல்லிசை நிலையும்
பல்படை யொருவற்
குடைதலின் மற்றவன்
ஒள்வாள் வீசிய நூழிலு முளப்படப்
புல்லித் தோன்றும் பன்னிரு துறைத்தே.

இது, தும்பைத்திணை பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:—நோனார் உட்கும் தானை யானை குதிரை என்ற மூவகை நிலையும்-பகைவரால் உட்கப்படுகின்ற தானையும் யானையும் குதிரையுமாகிய மூவகைப்பட்டவற்றினது நிலையும்.

தானை நிலை வருமாறு:—

"வெண்குடை மதிய மேனிலாத் திகழ்தரக்
கண்கூடிறுத்த கடன்மருள் பாசறைக்
குமரிப்படை தழீஇக் கூற்றுவினை யாடவர்
தமர்பிற ரறியா வமர்மயங் கழுவத்
திறையும் பெயருந் தோற்றி னுமருள்
நாண்முறை தபுத்தீர் வம்மி னீங்கெனப்
போர்மலைந் தொருசிறை நிற்ப யாவரும்
அரவுமிழ் மணியிற் குறுகார்
நிரைதார் மார்பினின் கேள்வனைப் பிறரே." [புறம்-உகூச]

"கைவேல் களிற்றொடு போக்கி

வருபவன்

மெய்வேல் பறியா நகும்."

[குறள்-எஎச]

பொருளதிகாரம் - புறத்திணையியல்
கூக

"நறுவிரை துறந்த நரைவெண் கூந்தல்
ஈர்ங்கா ழன்ன திரங்குகண் வறுமுலைச்
செம்முது பெண்டின் காதலஞ் சிறாஅன்
குடப்பாற் சில்லுறை போலப்
படைக்குநோ யெல்லாந் தானா யினனே."

[புறம்-உஎகூ]

" தற்கொள் பெருவிறல் வேந்துவப்பத் தானவற்
கொற்கத் துலந்தா னுமாகுமாற் பிற்பிற்
பலர்புகழ் செல்வந் தரூஉம்பற் பலர்தொழ
வானக வாழ்க்கையு மீயுமா லன்னதோர்
மேன்மை யிழப்பப் பழிவருவ செய்பவோ
தானேயும் போகு முயிர்க்கு."

இஃது ஓர் வீரன் கூற்று.

யானைநிலை வருமாறு :—

“கையொடு கையோ டொருதுணி

கோட்டது

மொய்யிலைவேன் மன்னர்

முடித்தலை—யைய

உயர்பொய்கை நீராட்டிச் செல்லுமே

யங்கோர்

வயவெம்போர் மாண்ட களிறு.”

குதிரைநிலை வருமாறு :—

“ நிலம்பிறக் கிடுவது போற்குளம்பு

கடையூ

உள்ள மழிக்குங் கொட்பின் மான்மேல்

எள்ளுநர்ச் செகுக்குங் காளை கூர்த்த

நெடுவே லெஃக நெஞ்சுவடு விளைப்ப

வாட்டிக் காணிய வருமே நெருநை

உரைசால் சிறப்பின் வேந்தன் முன்னர்க்

கரைபொரு முன்னீர்த் திமிலிற் போழ்ந்தவர்

கயந்தலை மடப்பிடி புலம்ப

இருமருப் பியானை யெறிந்த வெற்கே.” [புறம்-௨௭௫]

வேல் மிகு வேந்தனை மொய்த்தவழி ஒருவன் தான்மீண்டு எறிந்த தார் நிலையும்-வேல்வென்றி மிகலையே கண்ணோக்குடையனுய்க் களத்து முகப்பிற் சென்ற வேந்தனை மாற்றார் சூழ்ந்த விடத்து வேந்தன் பாலினனுய மற்றோர் தலைவன் தன்னிலை விட்டுத் தன்வேந்துமாட் டடுத்துத் துணையாய் மாற்றாரை எறிந்த தார்நிலையும்.

உதாரணம் :—

" நிரப்பாது கொடுக்குஞ் செல்வமு மிலனே
இல்லென மறுக்குஞ் சிறுமையு மிலனே
இறையுறு விழுமந் தாங்கி யமரகத்
திரும்புசுவைக்
கொண்ட விழுப்புண்ணோய் தீர்த்து
மருந்துகொண் மரத்தின் வாள்வடு
மயங்கி
வடுவின் றுவடிந்த யாக்கையன்
கொடையெதிர்ந் தீரந்தை யோனே
பாண்பசிப் பகைஞன்" [புறம்-கஅ0] எனப் பாணன் அது
தோன்றப் புகழ்ந்தவாறு காண்க.



அன்றி இருவர் தலைவர் தபுதி பக்கமும்-அஃதல்லாமல் படையின்று பொராநின்ற இருவரும் தம்முட் பொருது படுதலும்.

உதாரணம் :—

" காய்ந்து கடுங்களிறு கண்கனலக்
கைகூடி
வேந்த ரிருவரும் விண்படர-ஏந்து
பொருபடை மின்னப் புறங்கொடா

பொங்கி

இருபடைப்பு நீங்கா விகல்."

[வெண்பா-தும்பை-கஉ]

ஒருவன் ஒருவனை உடை படை புக்கு கூழை தாங்கிய பெருமையும்-ஒருவன் ஒரு வனைக் கெடுபடையின்கண் புக்குக் கூழை தாங்கிய பெருமையும்.

உதாரணம் :—

"கோட்டங் கண்ணியுங் கொடுந்திரை யாடையும்
வேட்டது சொல்லி வேந்தனைத்
தொடுத்தலும்
ஒத்தன் றுமாதோ விவற்கே செற்றிய
திணிநிலை யலறக் கூழை போழ்ந்துதன்
வடிமா ணெஃகங் கடிமுகத் தேந்தி
ஓம்புமி னோம்புமி னிவணென
வோம்பாது
தொடர்கொள் யானையிற் குடர்கா றட்பக்
கன்றமர் கறவை மான
முன்சமத் தொழிந்ததன் றோழற்கு வருமே." [புறம்-உஎரு]

படை அறுத்து பாழிகொள்ளும் ஏமமும்-கருவியை அறுத்து மல்லினால் கொள்ளும் ஏமமும். [அத்தும் ஆனும் சாரியை.]

உதாரணம் :—

"நீலக் கச்சைப் பூவா ராடைப்
பீலிக் கண்ணிப் பெருந்தகை மறவன்
மேல்வருங் களிற்றொடு வேறாந்

தினியே

தன்னும் தூக்குநன் போலு

மொன்னலர்

எஃகுடை வலத்தர் மாவொடு பரத்தரக்
கையின் வாங்கித் தழீஇ
மொய்ம்பி னூக்கி மெய்க்கொண்

டனனே." [புறம்-உஎச]

களிறு எறிந்து எதிர்ந்தோர் பாடும்-களிறு எறிந்து எதிர்ந்தோர் பாடும்.

உதாரணம் :—

" அரசா கெந்தை யாண்டுளன்

கொல்லோ

குன்றத் தன்ன களிற்றொடு பட்டோன்
வம்பலன் போலத் தோன்று

முதுக்காண்

வேனில் வரியணில் வாலத் தன்ன
கான வூகின் கழன்று குமுது
விரியல் வான்குழற் சுரியற் றங்க
நீரும் புல்லு மீயா துமணர்

யாதுமி லொருசிறை

முடத்தொடு துறந்த



வாழா வாள்பக டேய்ப்பத் தெவ்வர்ப்
பேருயிர் கொள்ளு மாதோ வது கண்டு
வெஞ்சின யானை வேந்தனு மிக்களத்
தெஞ்சலிற் சிறந்தது பிறிதொன்

றில்லெனப்

புணர்கொள ற் கருமை நோக்கி
நெஞ்சற வீழ்ந்த புரைமை யோனே."

[புறம்-௬௨]

களிற்றொடு பட்ட வேந்தனை அட்ட வேந்தன் வாளோர்
ஆடும் அமலையும்-களிற்று டன் போந்து மலைந்துபட்ட
இறைவனை மிக்க வேந்தன் படையாளர் நெருங்கி மற்ற
வனைப் பாடும் பாட்டும்.

அமல்-நெருங்கல். அதனாலாய பாட்டுக்கு
ஏற்புடைத்தாயிற்று.

உதாரணம்:—

"விழவுவீற் றிருந்த வியலூ ராங்கண்
கோடியர் முழவின் முன்ன ராடல்
வல்லா னல்லன் வாழ்கவன் கண்ணி
வலம்படு முரசந் துவைப்ப வாளுயர்த்
திலங்கு பூணன் பொலங்கொடி

யுழிஞையன்

மடம்பெரு மையி னுடன்றுமேல் வந்த
வேந்துமெய்ம் மறந்த வாழ்ச்சி
வீந்துகு போர்க்களத் தாடுங் கோவே."

[பதிற்று-டுசு]

வாள் வாய்த்து இருபெரு வேந்தர் தாமும் சுற்றமும் ஒருவரும் ஒழியா தொகை நிலையும்-வாள்தொழில் முற்றி இரு பெருவேந்தர் தாமும் சுற்றமும் ஒருவரும் ஒழியா மல் பட்ட பாடும். ['கண்' என்பது இடைச்சொல்.]

உதாரணம்:—

"வருதார் தாங்கி யமர்மிகல் யாவது
பொருதாண் டொழிந்த மைந்தர் புண்

டொட்டுக்

குருதிச் செங்கைக் கூந்த நீட்டி
நிறங்கிளர் குருவிற் பேஎய்ப் பெண்டிர்
எடுத்தெறி யனந்தற் பறைச்சீர் தூங்கப்
பருந்தருந் துற்ற தானையொடு

செருமுனிந்

தறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்
தாமாய்ந் தனரே குடைதுளங் கினவே
உரைசால் சிறப்பின் முரசொழிந் தனவே
பன்னூ றடுக்கிய வேறுபடு பைஞ்ஞிலம்
இடங்கெட வீண்டிய வியன்கட் பாசறைக்
களங்கொளற் குரியோ ரின்றித்

தெறுவர

உடன்வீழ்ந் தன்றா லமரே பெண்டிரும்
பாசடகு மிசையார் பனிநீர் மூழ்கார்
மார்பகம் பொருந்தி யாங்கமைந் தனரே
வாடாப் பூவி னிமையா நாட்டத்து
நாற்ற வுணவி னோரு மாற்ற



அரும்பெற லுலக நிறைய
விருந்துபெற் றனராற் பொலிகநும் புகழே." [புறம்-கூஉ]

செரு அகத்து இறைவன் வீழ்வுறச் சினைஇ
ஒருவனை மண்டிய நல்லிசை நிலை

யும்-பொரு களத்துத் தன்வேந்தன் பட அது கண்டு கறுத்தெழுந்து படைத்தலைவன்

வீரனொருவனை நெருங்கிப் பொருத ஒரு நற்புகழ் நிலைமையும்.

உதாரணம்:—

"வான மிறைவன் படர்ந்தென வாடுபோ
மானமே நெய்யா
மறம்விறகாத்—தேனிமிருங்
கள்ளவிழ் கண்ணிக் கழல்வெய்யோன் வாளமர்
ஒள்ளழலுள் வேட்டா னுயிர்." [வெண்பா-தும்பை-உசு]

பல படை ஒருவற்கு உடைதலின் அவன் ஒள்வாள் வீசிய நூழிலும்-பல படை

ஒருவற்குக் கெடுதலின் அவன் ஒள்ளிய வாள் வீசிய நூழிலும்.

அது பலரைக்கொல்லுதல். ['மற்று' அசை.]

உதாரணம் :—

"ஒருவனை யொருவ னடுதலுந் தொலைதலும்
புதுவ தன்றிவ் வுலகத் தியற்கை
இன்றி னூங்கோ கேளலந் திரளரை
மன்ற வேம்பின் மாச்சினை நண்டளிர்
நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மிடைந்து
செறியத் தொடுத்த தேம்பாய் தெரியல்

ஒலியன் மாலையொடு பொலியச் சூடிப்
பாடின் றெண்கிணை கறங்கக் காண்டக
நாடுகெழு திருவிற் பெரும்பூட் செழியன்
பீடுஞ் செம்மலு மறியார் கூடிப்
பொருது மென்று தன்றலை வந்த
புனைகழ லெழுவர் நல்வல மடங்க
ஒருதா னாகிப் பொருதுகளத் தடலே"

[புறம்-எசு] எனவும்,

"வள்ளை நீக்கி வயமீன் முகந்து
கொள்ளை சாற்றிய கொடுமுடி வலைஞர்
வேழப் பழனத்து நூழி லாட்டு"
[மதுரைக்காஞ்சி-உருரு-எ]

எனவும் பல உயிரை ஒருவன் கொன்றதனை நூழில் என்றவாறு அறிக.

உளப்பட புல்லி தோன்றும் பன்னிரு துறைத்து-உட்படப் பொருந்தித் தோன்றும் பன்னிரு துறைகளை யுடைத்து. [ஏகாரம் ஈற்றசை.]

(யசு)

எா.. வாகை தானே பாலையது புறனே
தாவில் கொள்கைத் தத்தங் கூற்றைப்
பாகுபட மிகுதிப் படுத்த லென்ப.

இது, வாகைத்திணை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.



இ-ள்:—வாகை பாலையது புறன்-வாகைத்திணை பாலை என்னும் அகத்திணையினது புறனும்; தாவில் கொள்கை தத்தம் கூற்றை பாகுபட மிகுதிப்படுத்தல் என்ப-அது கேடில்லாத கோட்பாட்டினையுடைய தத்தமக்குள்ள இயல்பை வேறுபட மிகுதிப்படுத் தல் என்பர்.

அதற்கு இது புறனுயவாறு என்னையெனின், பாலையாவது தனக்கென ஒரு நில 'மின்றி எல்லா நிலத்தினும் காலம் பற்றிப் பிறப்பதுபோல, இதுவும் எல்லா நிலத்தி னும் எல்லாக்குலத்தினும் காலம்பற்றி நிகழ்வதாதலினுனும், ஒத்தார் இருவர் புணர்ச்சி யினின் றும் புகழ்ச்சிகாரணமாகப் பிரியுமாறுபோலத் தன்னேடு ஒத்தாரினின்றும் நீங் கிப் புகழப்படுதலானும் அதற்கிது புறனுயிற்று. அஃது ஆமாறு வருகின்ற சூத்தி ரங்களானும் விளங்கும்.

(டு௫)

எ௪. அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்

ஐவகை மரபி னரசர் பக்கமும்
இருமூன் று மரபி னேனோர் பக்கமும்
மறுவில் செய்தி மூவகைக் காலமும்
நெறியி னாற்றிய வறிவன்
றேயமும்

நாலிரு வழக்கிற் றாபதப் பக்கமும்

பாலறி மரபிற் பொருநர் கண்ணும்
அனைநிலை வகையோ டாங்கெழு வகையால்

தொகைநிலை பெற்ற தென்மனார் புலவர்.

இது, வாகைத்திணை பாகுபடுமாறு உணர்த்துதல்
நுதலிற்று.

பார்ப்பனப் பக்கம் முதலாகப் பொருநர் பக்கம்
ஈறாகச் சொல்லப்பட்ட அத்தன்
மைத்தாகிய நிலைவகையோடே ஏழ்வகையால் தொகை
நிலைபெற்றது [வாகைத்திணை].

எனவே தொகைநிலை பல வென்பது பெறுதும்.

இ-ள்:—அறு வகைப்பட்ட பார்ப்பனப்
பக்கமும்-ஆறு திறனுகிய அந்தணர்
பக்கமும்.

அறுவகைப்பட்ட பக்கம் எனக் கூட்டுக.

அவையாவன: — ஓதல், ஓதுவித்தல்,

வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பன.

இவ்வொழுக்கத்தால் மிகுதல்

வாகையாம் என்பது. பார்ப்பனப் பக்கமும்

என்றதனான் அப்பொருளின் மிகுதி

கூறலும் இதன்பாற் படும். இது

மேல்வருவனவற்றிற்கும் ஒக்கும்.

ஓதலாவது கல்வி.

ஓதல்வருமாறு :—

" இம்மை பயக்குமா லீயக்

குறைவின்றால்

தம்மை

விளக்குமாற் றூமுளராக் கேடின்றால்

எம்மை யுலகத்தும் யாங்காணேங் கல்விபோல்

மம்ம ராறுக்கு மருந்து. " [நாலடி-கல்வி-2]

இது கல்வியின் விழுப்பம் கூறிற்று.

" ஆற்றவுங் கற்றா ரறிவுடையா ரஃதுடையார்

நாற்றிசையுஞ் செல்லாத நாடில்லை யந்நாடு

வேற்றுநா டாகா தமவேயா மாதலால்
ஆற்றுணா வேண்டுவ தில்."

[பழமொழி-கககூ]

இது கற்றோர்க்கு உளதாகும் விழுப்பம் கூறிற்று. இஃது ஏனைய மூன்று வருணத்தார்க்கும் ஒக்கும்.

ஓதுவித்தலாவது கற்பித்தல்.

ஓதுவித்தல் வருமாறு :—

" எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு.

[குறள்-சஉச]

வேட்டலாவது வேள்வி செய்தல்.

வேட்டல் வருமாறு :—

" நன்றாய்ந்த நீணிமிர்சடை
முதுமுதல்வன் வாய் போகா
தொன்றுபுரிந்த வீரிரண்டின்
ஆறுணர்ந்த வொருமுதுநூல்
இகல்கண்டோர் மிகல்சாய்மார்
மெய்யன்ன பொய்யுணர்ந்து
பொய்யோராது மெய்கொளீஇ
மூவேழ் துறையு முட்டின்று போகிய
உரைசால் சிறப்பி னுரவோர் மருக

விளைக்குவேண்டி நீபூண்ட
புலப்புல்வாய்க் கலைப்பச்சை
சுவற்பூண்ஞாண் மிசைப்பொலிய
மறங்கடிந்த வருங்கற்பின்
அறம்பகர்ந்த வலைசூடிச்
சிறுநுதற்பே ரகலல்குற்
சில்சொல்விற் பல்கூந்தனின்
நிலைக்கொத்தநின் மனைத்துணைவியர்
தமக்கமைந்த தொழில்கேட்பர்
காடென்றா நாடென்றாங்
கீரேழி னிடமுட்டாது
நீர்நாண நெய்வழங்கியும்
எண்ணாணப் பலவேட்டும்
மண்ணாணப் புகழ்பரப்பியும்
அருங்கடிப் பெருங்காலை
விருந்துற்றநின் றிருந்தேந்துநிலை
என்றும்,
காண்கதில் லம்ம யாமே குடாஅது
பொன்படு நெடுவரைப் புயலேறு சிலைப்பிற்
பூவிரி புதுநீர்க் காவிரி புரக்குந்
தண்புனற் படப்பை யெம்மூ ராங்கண்

உண்டுந் தின்று மூர்ந்து மாடுகஞ்
செல்வ லத்தை யானே செல்லாது
மழையண் ணுப்ப நீடிய நெடுவரைக்
கழைவள ரிமயம் போல
நிலீஇய ரத்தைநீ நிலமிசை யானே."

[புறம் - கசுசு]

வேட்பித்தலாவது, வேள்வி செய்வித்தல். "நளிகடலிருங் குட்டத்து" என்னும் புறப்பாட்டினுள்

"ஆன்ற கேள்வி யடங்கிய கொள்கை

. . . . .

நான்மறை முதல்வ ரசுற்ற மாக
மன்ன ரேவல் செய்ய மன்னிய
வேள்வி முற்றிய வாள்வாய் வேந்தே"

[புறம்-உசு] என அரசன் வேட்பித்தவாறும் பார்ப்பார் வேட்டவாறும் கண்டுகொள்க.

ஈதலாவது, இல்லென இரந்தோர்க்குக் கொடுத்தல்.

உதாரணம் :—

" இவனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள." [குறள்-உஉங]

ஏற்றலாவது, கோடல்; கொள்வோன் தனது சிறப்பிற் குன்றாமல் கோடல்.

உதாரணம் :—

" இரவலர் புரவலை நீயு மல்லை
புரவல ரிரவலர்க் கில்லையு மல்லர்
இரவல ருண்மையுங் காணினி
யிரவலர்க்
கீவோ ருண்மையுங் காணினி நின்னூர்க்
கடிமரம் வருந்தத் தந்தியாம் பிணித்த
நெடுநல் யானையெம் பரிசில்
கடுமான் றோன்றல் செல்வல் யானே." [புறம்-கசுஉ]

ஐவகை மரபின் அரசர் பக்கமும்—ஐவகைப்பட்ட அரசர் பக்கமும்.

அவையாவன, ஓதலும் வேட்டலும் ஈதலும் படைவழங்குதலும் குடியோம்புத லுமாம். இவற்றுள் முந்திற்ற மூன்றும் மேற் சொல்லப்பட்டன. ஏனைய இரண்டும் இனிக் கூறப்படுகின்றன.

படை வழங்குதல் வருமாறு :—

" கடுங்கண்ண கொல்களிற்ருற்
காப்புடைய வெழுமுருக்கிப்
பொன்னியற் புனைதோட்டியான்
முன்புதுரந்து சமந்தாங்கவும்
பாருடைத்த குண்டகழி
நீரழுவ நிவப்புக்குறித்து
நிமிர்பரிய மாதாங்கவும்
ஆவஞ் சேர்ந்த புறத்தை தேர்மிசைச்
சாப நோன்ஞாண் வடுக்கொள வழங்கவும்

18



பரிசிலர்க் கருங்கல நல்கவுங் குரிசில்
வலிய வாகுநின் ருடோய் தடக்கை
புலவுநாற் றத்த பைந்தடி
பூநாற் றத்த புகைகொளீஇ யூன்றுவை
கறிசோ றுண்டு வருந்துதொழி லல்லது
பிறிதுதொழி லறியா வாகலி னன்று

மெல்லிய பெரும தாமே நல்லவர்க்
காரணங் காகிய மார்பிற் பொருநர்க்
கிருநிலத் தன்ன நோன்மைச்
செருமிகு சேஎய்நிற் பாடுநர் கையே."

[புறம்- கஎ]

குடியோம்புதல் வருமாறு:—

" இருமுந்நீர்க் குட்டமும்
வியன்ஞாலத் தகலமும்
வளிவழங்கு திசையும்
வறிதுநிலைஇய காயமும்

என ருநகு,
அவையளந் தறியினு மளத்தற் கரியை
அறிவு மீரமும் பெருங்க ணோட்டமுஞ்
சோறுபடுக்குந் தீயொடு
செஞ்ஞாயிற்றுத் தெறலல்லது
பிறிதுதெற லறியார்நின் னிழல்வாழ் வோரே
திருவி லல்லது கொலைவில் லறியார்
நாஞ்சி லல்லது படையு மறியார்

திறனறி வயவரொடு தெவ்வர் தேயவப்
பிறர்மண் ணுண்ணுஞ் செம்மனின் னாட்டு
வயவுறு மகளிர் வேட்டுணி னல்லது
பகைவ ருண்ணா வருமண் ணினையே
அம்புதுஞ்சுங் கடியர ணால்
அறந்துஞ்சுஞ் செங்கோலையே
புதுப்புள் வரினும் பழம்புட் போகினும்
விதுப்புற வறியா வேமக் காப்பினை
அனையை யாகன் மாறே
மன்னுயி ரெல்லா நின்னஞ் சும்மே." [புறம்-உ0]

'பக்கம்' என்றதனுன் அரசரைப்பற்றி
வருவனவற்றிற்கெல்லாம் இதுவே ஓத்தா
கக்கொள்க.

இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்-ஆறு

மரபினையுடைய வணிகர் வேளாளர் பகக்மும.

வணிகர்க்குரிய ஆறு பக்க மாவன :—ஓதல்,
வேட்டல், ஈதல், உழவு, வாணிகம்,
நிரையோம்பல்.

உதாரணம் :—

"உழுது பயன்கொண் டொலிநிரை
யோம்பிப்
பழுதிலாப் பண்டம்
பகர்ந்து—முழுதுணர
ஓதி யழல்வழிபட் டோம்பாத
வீகையான்
ஆதி வணிகர்க் கரசு."
[வெண்பா-வாகை-ம]

வேளாண் மாந்தர்க்குரிய ஆறு மரபாவன :—உழவு, உழவொழிந்த தொழில், விருந்தோம்பல், பகடு புறந்தருதல், வழிபாடு, வேதமொழிந்த கல்வி.

உதாரணம் :—

"சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனால்
உழன்று முழவே தலை." [குறள்-௧0௩௧]

"கருமஞ் செயவொருவன் கைதூவே னென்னும்
பெருமையிற் பீடுடைய தில்."

[குறள்-க0உக]

" இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர்."

[குறள்-க0ருரு]

"பகடு புறந்தருநர் பார மோம்பி." [புறம்-ருரு]

" இருக்கை யெழலு மெதிர்செலவு
மேனை

விடுப்ப வொழிதலோ டின்ன—குடிப்பிறந்தார்
குன்றா வொழுக்கமாக் கொண்டார் கயவரோ
டொன்றா வுணரற்பாற் றன்று." [நாலடி-குடிபிறப்பு-ச]

"வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளுங்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனு மவன்கட் படுமே." [புறம்-க அரு]

இவை ஆறும் வந்தவாறு காண்க.

மறுவில் செய்தி மூவகை காலமும் நெறியின் ஆற்றிய
அறிவன்தேயமும் - குற்ற

மற்ற செயலையுடைய மழையும் பனியும்
வெயிலுமாகிய மூவகைக் காலத்தினையும் நெறி

யிஞற் பொறுத்த அறிவன்பக்கமும்.

இறந்தகாலம் முதலாகிய மூன்று காலத்திஜெயும்

நெறியிஞல் தோற்றிய அறிவன்

பக்கம் என்றூலோ வெனின், அது முழுதுணர்ந்தோர்க்

கல்லது புலப்படாமையின் அது

பொருளன்றென்க. பன்னிருபடலத்துள் "பனியும் வெயிலுங் கூதிரும் யாவும், துனியில் கொள்கையொடு நோன்மை யெய்திய, தணிவுற் றறிந்த கணிவன் முல்லை" எனவும் ஓதுதலின் மேலதே பொருளாகக் கொள்க.

அறிவன் என்றது கணிவனை. மூவகைக்காலமும் நெறியிஞ லாற்றுதலாவது, பகலும் இரவும் இடைவிடாமல் ஆகாயத்தைப்பார்த்து ஆண்டு நிகழும் வில்லும் மின்னும் ஊர்கோளுந் தூமமும் மீன்வீழ்வும் கோள்நிலையும் மழைநிலையும் பிறவும் பார்த்துப் பயன்கூறல். ஆதலான் மூவகைக்காலமும் 'நெறியின் ஆற்றிய அறிவன்' என்றூர்.

உதாரணம் :—

" புரிவின்றி யாக்கைபோற் போற்றுவ போற்றிப்
பரிவின்றிப் பட்டாங் கறியத்—திரிவின்றி

தொல்காப்பியம் - இளம்பூரணம்

விண்ணிவ் வுலகம் விளக்கும்
விளைவெல்லாங் கண்ணி யுரைப்பான்
கணி." [வெண்பா-வாகை-உய]

நால் இருவழக்கின் தாபத பக்கமும்-எட்டுவகைப் பட்ட வழக்கினையுடைய தாபதர் பக்கமும்.

அவையாவன :—நீராடல், நிலத்திடை கிடத்தல், தோலுடுத்தல், சடைபுனைதல், எரியோம்பல், ஊரடையாமை, காட்டிலுள்ள உணவுகோடல், தெய்வபூசையும் அதிதி பூசையும் செய்தல்.

உதாரணம் :—

" நீர்பலகான் மூழ்கி நிலத்தசைஇத்
தோலுடையாச்
சோர்சடை தாழச்
சுடரோம்பி—ஊரடையார்
கானகத்த கொண்டு கடவுள்
விருந்தோம்பல்
வானகத் துய்க்கும் வழி. "

[வெண்பா-வாகை-கச]

"ஓவத் தன்ன விடனுடை வரைப்பிற்
பாவை யன்ன குறுந்தொடி மகளிர்
இழைநிலை நெகிழ்த்த மள்ளற்
கண்டிகும்
கழைக்க ணெடுவரை யருவி யாடிக்
கான யானை தந்த விறகிற்
கடுந்தெறற் செந்தீ வேட்டுப்

புறந்தாழ் புரிசடை புலர்த்து

வோனே." [புறம்-உருக]

"கறங்குவெள் ளருவி யேற்றலி

னிறம்பெயர்ந்து

தில்லை யன்ன புல்லென் சடையோ
டள்ளிலைத் தாளி கொய்யு மோனே
இல்வழங்கு மடமயில் பிணிக்குஞ்
சொல்வலை வேட்டுவ னாயினன்

முன்னே." [புறம்-உருஉ]

இவற்றுள்ளும் சிலவந்தவாறு காண்க.

பால் அறி மரபின் பொருநர் கண்ணும்-பாகுபாடு அறிந்த மரபினையுடைய பொருநர் பக்கமும்.

அஃதாவது, வாளானும் தோளானும் பொருதலும் வென்றிகூறலும் வாகையாம் என்றவாறு.

வாளால் மிகுதல் வருமாறு:—

"ஏந்துவாட் டானை யிரிய

வுறைகழித்துப்

போந்துவாண் மின்னும்

பொருசமத்து—வேந்தர்

இருங்களி யானை யினமிரிந் தோடக்

கருங்கழலான் கொண்டான் களம்.

[வெண்பா-வாகை-உகூ]

மல்வென்றி வருமாறு:—

"இன்கடுங் கள்ளி னாமூ ராங்கண்
மைந்துடை மல்லன் மதவலி முருக்கி
ஒருகான் மார்பொதுங் கின்றே

யொருகால்

வருதார் தாங்கிப் பின்னொதுங் கின்றே



நல்கினு நல்கா அ னாயினும் வெல்போர்ப்
பொரலருந் தித்தன் காண்கதில் லம்ம
பசித்துப் பணைமுயலும் யானை போல

இருதலை யொசிய வொற்றிக்

களம்புகு மல்லற் கடந்தடு நிலையே." [புறம்-அ௰]

அனைநிலைவகையொடு-வாளானும் தோளானும்
பொருது வேறலன்றி அத்தன்
மைத்தாகிய நிலைவகையான் வேறலொடு.

அஃதாவது, சொல்லான் வேறலும் பாட்டான்
வேறலும் கூத்தான் வேறலும்
சூதான் வேறலும் தகர்ப்போர் பூழ்ப்போர் என்பனவற்றான்

வேறலும். பிறவும் அன்ன.

விரைந்து தொழில்கேட்கு ஞால நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்."

[குறள்-சுசஅ]

இது சொல் வென்றி.

"வண்டுறையுங் கூந்தல் வடிக்கண்ணாள் பாடினாள்
வெண்டுறையுஞ் செந்துறையும் வேற்றுமையாக்—கண்டறியக்
கின்னரம் போலக் கிளையமைந்த நீர்தொடையாழ் அந்நரம்பு
மச்சுவையு மாய்ந்து." [வெண்பா-பெருந்திணை-கஅ]

இது பாடல் வென்றி.

"கைகால் புருவங்கண் பாணி நடைதூக்குக்
கொய்பூங்கொம் பன்னாள் குறிக்கொண்டு—பெய்பூப்
படுகளிவண் டார்ப்பப் பயில்வளைநின் றாடுந்
தொடுகழன் மன்னன் றுடி." [வெண்பா-பெருந்திணை-கஎ]

இஃது ஆடல் வென்றி.

"கழகத் தியலுங் கவற்று நிலையும்
அளகத்
திருநுதலா ளாய்ந்து—கழகத்திற்
பாய வகையாற் பணிதம் பலவென்றாள்
ஆய நிலைய
மறிந்து."[வெண்பா-பெருந்திணை-கசு]

இது சூது வென்றி. பிறவும் வந்தவழிக்காண்க.

எழுவகையான் தொகைநிலை பெற்றது என்மனார் புலவர்-ஏழ்வகையான் தொகை நிலை பெற்றதென்று கூறுவர் புலவர். [ஆங்கு என்பது அசை.]

எ-டு. கூதிர் வேனி லென்றிரு பாசறைக்
காதலி னொன்றிக்
கண்ணிய வகையினும்

ஏரோர் களவழி யன்றிக் களவழித்

தேரோர் தோற்றிய வென்றியுந்
தேரோர்

வென்ற கோமான் முன்றேர்க்
குரவையும் ஒன்றிய மரபிற்
பின்றேர்க் குரவையும்
பெரும்பகை தாங்கும் வேலி னானும்

5

அரும்பகை தாங்கு மாற்ற லானும்
புல்லா வாழ்க்கை வல்லாண்

பக்கமும்

ஒல்லார் நாணப் பெரியவர்க் கண்ணிச்
சொல்லிய வகையி னொன்றொடு புணர்த்துத்
தொல்லுயிர் வழங்கிய வவிப்பலி யானும்
ஒல்லா ரிடவயிற் புல்லிய பாங்கினும்
பகட்டி னானு மாவி னானுந்
துகட்டபு சிறப்பிற் சான்றோர் பக்கமும்
கடிமனை நீத்த பாலின் கண்ணும்
எட்டுவகை நுதலிய வவையகத் தானுங்
கட்டமை யொழுக்கத்துக் கண்ணுமை யானும்
இடையில் வண்புகழ்க் கொடைமை யானும்
பிழைத்தோர்த் தாங்குங் காவ லானும்
பொருளொடு புணர்ந்த பக்கத் தானும்
அருளொடு புணர்ந்த வகற்சி யானும்
காம நீத்த பாலி னானுமென்
றிருபாற் பட்ட வொன்பதின் றுறைத்தே.

இது, வாகைத்துறையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:—கூதிர்ப் பாசறை முதலாகச் சொல்லப்பட்ட

பதினெட்டுத்துறையும் வா

கைத்துறையாம். எனவே, மேற் சொல்லப்பட்ட ஏழ் வகையும் திணையென்று கொள்க.

கூதிர் வேனில் என்று இரு பாசறை காதலின் ஒன்றி கண்ணிய வகையும்-கூதிர்

ப்பாசறையும் வேனிற்பாசறையும் என்று சொல்லப்பட்ட இருவகைப் பாசறைகளையும்

போரின்மீது கொண்ட காதலாற் பொருந்திக் கருதிய போர்நிலை வகையும்.

இவை இரண்டும் ஒரு வகை. [இச்சூத்திரத்தில் வரும் இன்னும் ஆனும் இடைச்

சொற்கள்.]

உதாரணம் :—

"கவலை மறுகிற் கடுங்கண் மறவர்
உவலைசெய் கூரை யொடுங்கத்—துவலைசெய்
கூதிர் நலியவு முள்ளான் கொடித்தேரான்
மூதின் மடவாண் முயக்கு." [வெண்பா-வாகை-௧௫]

பிறவும் அன்ன.

ஏரோர் களவழி அன்றி களவழி தேரோர்

தோற்றிய வென்றியும்-ஏரோர் கள

வழி கூறுதலும் அன்றிப் போரோர் களவழி தேரோர் தோற்றுவித்த வென்றியும்.

அது களம்பாடுதலும் களவேள்வி பாடுதலுமாம்.

[களவழி-களத்தில் நிகழும்செயல்கள்.]

**உதாரணம் :—**

“ இருப்புமுகஞ் செறித்த வேங்தெழின் மருப்பிற்
பெருங்கை யானை கொண்மூ வாக
நீண்மொழி மறவ ரெறிவன ருயர்த்த



வாண்மின் னாக வயங்குகடிப் படைந்த
குருதிப் பல்லிய முரசுமுழக் காக
அரசராப் பனிக்கு மணங்குறு பொழுதின்
வெவ்விசைப் புரவி வீசுவளி யாக
விசைப்புறு வல்வில் வீங்குநா ணுதைத்த
கணைத்துளி பொழிந்த கண்ணகன் கிடக்கை

ஈரச் செறுவிற் றேரே ராக
விடியல் புக்கு நெடிய நீட்டிநின்
செருப்படை மிளிர்த்த திருத்துறு செஞ்சாற்
பிடித்தெறி வைவேற் கணையமொடு வித்தி,
விழுத்தலை சாய்த்த வெருவரு பைங்கூழ்ப்
பேய்மகள் பற்றிய பிணம்பிறங்கு பல்போர்க்
கான நரியொடு கழுகுகளம் படுப்பப்
பூதங் காப்பப் பொலிகளந் தழீஇப்
பாடுநர்க் கிருந்த பீடுடை யாள
தேய்வை வெண்காழ் புரையும் விசிபிணி
வேய்வை காணா விருந்திற் போர்வை
அரிக்குரற் றடாரி யுருப்ப வொற்றிப்
பாடி வந்திசிற் பெரும பாடான்
றெழிலி தோயு மிமிழிசை யருவிப்
பொன்னுடை நெடுங்கோட் டிமயத் தன்ன
ஓடை நுதல வொல்குதலை யறியாத்
துடியடிக் குழவிப் பிடியிடை மிடைந்த
வேழ முகவை நல்குமதி

தாழா வீகைத் தகைவெய் யோயே.”

[புறம்-௩௬௯] இஃது ஏரோர் களவழி.

“ ஓஒ வுவமை யுறழ்வின்றி யொத்ததே ,

காவிரி நாடன் கழுமலங் கொண்டநாள்
மாவுதைப்ப மாற்றார் குடையெலாங்
கீழ்மேலாய்
ஆவுதை காளாம்பி போன்ற புனனாடன்
மேவாரை யட்ட களத்து.” [களவழி-௩௬] இது

போரோர் களவழி.

“ நளிகட லிருங்குட்டத்து
வளிபுடைத்த கலம்போலக்
களிறுசென்று களனகற்றவுங்
களனகற்றிய வியலாங்கண்
ஒளிறிலைய வெஃகேந்தி
அரசுபட வமருழக்கி
உரைசெல முரசுவெள்ளி
முடித்தலை யடுப்பாகப்
புனற்குருதி யுலைக்கொளீஇத்



தொடித்தோட் டுடுப்பிற் றுழந்த வல்சியின்

அடுகளம் வேட்ட வடுபோர்ச் செழிய
ஆன்ற கேள்வி யடங்கிய கொள்கை
நான்மறை முதல்வர் சுற்ற மாக
மன்ன ரேவல் செய்ய மன்னிய
வேள்வி முற்றிய வாள்வாய் வேந்தே
நோற்றோர் மன்றநின் பகைவர் நின்னொடு
மாற்றா ரென்னும் பெயர்பெற்
றாற்றா ராயினு மாண்டு வாழ்வோரே." [புறம்-உசு]

இது களவேள்வி.

தேரோர் வென்ற கோமான் தேர்முன் குரவையும்-தேரோரைப் பொருது வென்ற அரசன் தேர்முன் ஆடு குரவையும்.

உதாரணம் :—

" களிற்றுக்கோட் டன்ன வாலெயி றழுத்தி
விழுக்கொடு விரைஇய வெண்ணிணச் சுவையினள்
குடர்த்தலை துயல்வரத் துள்ளி யுணத்தின
ஆனாப் பெருவளஞ் செய்தோன் வானத்து
வயங்குபன் மீனினும் வாழிய பலவென
உருகெழு பேய்மக ளயரக்
குருதித்துக ளாடிய களங்கிழ வோயே." [புறம்-௩௭௧]

ஒன்றிய மரபின் தேர்ப்பின் குரவையும்-பொருந்திய மரபின் தேர்ப்பின் ஆடு குர

யையும்.

உதாரணம் :—

" வஞ்சமில் கோலானை வாழ்த்தி வயவரும்
அஞ்சொல் விறலியரு மாடபவே—வெஞ்சமத்துக்
குன்றோர் மழகளிறுங்
கூந்தற் பிடியும்போற்
பின்றேர்க் குரவை பிணைந்து." [வெண்பா-வாகை-அ]

பெரும்பகை தாங்கும் வேலும்-பெரிய பகையினைத்
தாங்கும் வேலினைப் புகழுமிட

மும்.

உதாரணம் :— " இவ்வே,
பீலி யணிந்து மாலை சூட்டிக்
கண்டிர ளேன்காழ் திருத்திநெய் யணிந்து
கடியுடை வியனக ரவ்வே யவ்வே
பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து
கொற்றுறைக் குற்றில மாதோ
என்றும்
உண்டாயிற் பதங்கொடுத்
தில்லாயி னுடனுண்ணும்
இல்லோ ரொக்கற் றலைவன்
அண்ணலெங் கோமான் வைந்நுதி வேலே." [புறம்-௯௫]

" நிலைதிரி பெறியத் திண்மடை கலங்கிச்
சிதைதலுய்ந் தன்றோ நின்வேல் செழிய
" [புறம்-௨௫] என்பதும் அது.

அரும்பகை தாங்கும்
ஆற்றலும்-பொருதற்கரிய பகையைப் பொறுக்கும் ஆற்றலும்.

**உதாரணம்:—**

" களம்புக லோம்புமின் றெவ்விர்
போரெதிர்ந்
தெம்முளு முளனொரு பொருநன் வைகல்
எண்டேர் செய்யுந் தச்சன்
திங்கள் வலித்த காலன் னோனே "
[புறம்-௮௭] எனவும்

" என்னைமுன் னில்லன்மின் றெவ்விர்
பலரென்னை
முன்னின்று கன்னின் றவர் "
[குறள்-௭௭௧] எனவும் வரும்.

புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கமும் - பொருந்தாத வாழ்க்கையினையுடைய வல்லாண் பக்கமும்.

உதாரணம் :—

"எருது காலுறாஅ திளையர் கொன்ற
சில்விளை வரகின் புல்லென் குப்பை
தொடுத்த கடவர்க்குக் கொடுத்த மிச்சில்
பசித்த பாண ருண்டுகடை தப்பலின்
ஒக்க லொற்கஞ் சொலியத் தன்னூர்ச்
சிறுபுல் லாளர் முகத்தவை கூறி
வரகுகட னிரக்கும் பெருந்தகை
அரசுவரிற் றுங்கும் வல்லா னன்னே." [புறம்-௩௨௭]

ஒல்லார் நாண பெரியவர்க் கண்ணி சொல்லிய வகையின் ஒன்றொடு புணர்த்து

தொல் உயிர் வழங்கிய அவிப்பலியும்-பொருந்தாதார் நாணுமாறு தலைவரைக் குறித்து முன்பு சொன்ன வஞ்சின மரபின் ஒன்றொடு பொருந்தித் தொன்றுதொட்டு வருகின்ற

உயிரை வழங்கிய அவிப்பலியும்.

உதாரணம் :—

"சிறந்த திருவெனச் செஞ்சோறு வாய்ப்ப

மறந்தரு வானம ரென்னும்—பிறங்கழலுள்

ஆருயி ரென்னு மவிவேட்டா ராங்கஃதால்

வீரியரெய் தற்பால வீடு" [வெண்பா-வாகை-௬௰]

எனவும்,

"இழைத்த திகவாமைச் சாவாரை யாரே

பிழைத்த தொறுக்கிற் பவர்"

[குறள்-௭௭௬]

எனவும் வரும்.

14



ஒல்லார் இடவயின் புல்லிய பாங்கும் - பொருந்தாதார் இடத்தின்கண் பொருந்திய பக்கமும்.

அஃதாவது, போரில்வழி நாடு கைத்தென்று கொண்டு உவத்தல். [கைத்து-கைய க்கப்பட்டது.

உவத்தல்-வெகுளிவிட்டிருத்தல்.]

உதாரணம் :—

"மாண்டனை பலவே போர்மிகு குருசினீ
மாதிரம் விளக்குஞ் சால்புஞ் செம்மையும்
முத்துடை மருப்பின் மழகளிறு பிளிற
மிக்கெழு கடுந்தார் துய்த்தலைச் சென்று
துப்புத்துவர் போகப் பெருங்கிளை யுவப்ப
ஈத்தான் றாஅ விடனுடை வளனும்
துளங்குகுடி திருத்திய வலம்படு வென்றியும்
எல்லா மெண்ணி னிடுகழங்கு தபுந
கொன்னொன்று மருண்டனெ னடுபோர்க் கொற்றவ
நெடுமிடல் சாயக் கொடுமிட றுமியப்
பெருமலை யானையொடு புலங்கெட விறுத்துத் தடந்தா
ளாரை படிந்திரை கவரும்
மூடந்தை நெல்லின் கழையமல் கழனிப்
பிழையா விளையு ணாடகப் படுத்து
வையா மாலையர் வசையுநர்க் கறுத்த
பகைவர் தேஎத் தாயினுஞ்
சினவா யாகுத லிறும்பூதாற் பெரிதே" [பதிற்று-௩௨]

என்பதனுள் பகைவர் நாடு கைக்கொண்டிருந்தவாறு அறிக.

பகட்டினானும் ஆவினானும் துகள் தபு சிறப்பின்

சான்றோர் பக்கமும்-பகட்டினு
னும் ஆவினுனும் குற்றம்தீர்ந்த
சிறப்பினையுடைய சான்றோர் பக்கமும்.

பகட்டால் புரை தீர்ந்தார் வேளாளர். ஆவால்
குற்றம் தீர்ந்தார் வணிகர். இவ்
விரு குலத்தினும் அமைந்தார் பக்கமும். அவர்
குலத்தினுள் அளவால் மிக்க சீர்மைய
ராதலின் வேறு ஓதப்பட்டது.

உதாரணம் :—

"உண்டா லம்மவிவ் வுலக மிந்திரர்
அமிழ்த மியைவ தாயினு மினிதெனத்
தமிய ருண்டலு மிலரே முனிவிலர்
துஞ்சலு மிலர்பிற ரஞ்சுவ தஞ்சிப்
புகழெனி னுயிருங் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளல ரயர்விலர்
அன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுந ருண்மை யானே." [புறம்-௧௮௨]

கடிமனை நீத்த பாலும்-கடிமனை நீத்த பக்கமும்.



அஃதாவது, பிறர்மனை நயவாமை. மேல் 'காம நீத்த

பாலினும்' என்று ஓதி நின்றாராகலின், இது

மனையறத்தின் நின்றோரை நோக்க வரும்.

உதாரணம் :—

"பிறன்மனை நோக்காத பேராண்மை
சான்றோர்க்
அறனொன்றோ வான்ற வொழுக்கு."

[குறள்-க சஅ]

எட்டு வகை நுதலிய அவையகமும்-எட்டுப் பாகுபாட்டைக் குறித்த அவையகமும்.

எட்டுவகை குறித்த அவையகம் என்றமையான், ஏனைய அவையின் இவ்வகை மிகுதி உடைத்தென்றவாறு.
அவையாவன:—குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, நடுவுநிலைமை, அழுக்காறாமை, அவாவின்மை என்பன.

அவை எட்டினும் அவை வருமாறு :—

"குடிப்பிறப் புடுத்துப் பனுவல் சூடி
விழுப்பே ரொழுக்கம் பூண்டு காமுற
வாய்மைவாய் மடுத்து மாந்தித்
தூய்மையின்
காத லின்பத்துட் டங்கித் தீதறு

நடுவுநிலை நெடுநகர் வைகி வைகலும்
அழுக்கா றின்மை யவாஅ வின்மையென
இருபெரு நிதியமு மொருதா மீட்டும்
தோலா நாவின் மேலோர் பேரவை
உடனம ரிருக்கை

யொருநாட் பெறுமெனின்
பெறுகதில் லம்ம யாமே வரன்முறைத்
தோன் றுவழித் தோன்றுவழிப் புலவுப்

பொதிந்து
நின் றுழி நின் றுழி ஞாங்கர் நில்லாது
நிலையழி யாக்கை வாய்ப்பவிம்

மலர்தலை புகைத்துக் கொட்கும் பிறப்பே." [ஆசிரியமாலை]

கட்டமை ஒழுக்கத்து கண்ணுமையும்-கட்டுதல் அமைந்த ஒழுக்கத்தினைக் குறித்த நிலையினும்.

அஃதாவது, இல்லறத்திற்கு உரித்தாக நான்கு

வருணத்தார்க்கும் சொல்லப் பட்ட அறத்தின்கண் நிற்றல். அவையாவன :—அடக்கமுடைமை, ஒழுக்கமுடைமை, நடுவுநிலைமை, வெஃகாமை, புறங்கூறாமை, தீவினை யச்சம், அழுக்காறாமை, பொறை

புடைமை என்பன. மிகுதியாகலின், வாகை யாயின.

அடக்கமுடைமையாவது, பொறிகள் ஐம்புலன்கள்மேல் செல்லாமை யடக்குதல்.

உதாரணம் :—

"ஒருமையு ளாமைபோ லைந்தடக்க
லாற்றின்
எழுமையு மேமாப்
புடைத்து." [குறள்-கஉசு]

ஒழுக்கமுடைமையாவது, தங்குலத்திற்கும் இல்லறத்திற்கும் ஒத்த ஒழுக்க முடையராதல்,



உதாரணம் :—

"ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்கம்
உயிரினு மோம்பப் படும்."

நடுவுநிலைமையாவது, பகைவர்மாட்டும் நட்டார்மாட்டும் ஒக்க நிற்கும் நிலைமை.

உதாரணம் :—

"சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ
லமைந்தொருபால்

கோடாமை சான்றோர்க் கணி." [குறள்-க
கஅ] வெஃகாமையாவது, பிறர்பொருளை விரும்பாமை.

உதாரணம் :—

"படுபயன் வெஃகிப் பழிப்பன செய்யார்
நடுவின்மை நாணு பவர்." [குறள்-கஎஉ]

புறங்கூறாமையாவது, ஒருவரை அவர் புறத்துரையாமை.

உதாரணம் :—

"அறங்கூறா னல்ல செயினு மொருவன்
புறங்கூறா னென்ற லினிது." [குறள்-கஅக]

தீவினையச்சமாவது, தீவினையைப் பிறர்க்குச் செய்தலை
அஞ்சுதல்.

உதாரணம் :—

"தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்

தீவினை யென்னுஞ் செருக்கு."

[குறள்-உ0க]

அழுக்காறாமையாவது, பிறர் ஆக்கம் முதலாயின கண்டு

பொருமையால் வரும் மனக்கோட்டத்தைச் செய்யாமை.

உதாரணம் :—

"ஒழுக்காறாக் கொள்க வொருவன்றன் னெஞ்சத்
தழுக்கா றிலாத வியல்பு."

[குறள்-கசுக]

பொறையுடைமையாவது, பிறர் தமக்கு மிகுதியாகச் செய்தவழி வெகுளாமை.

உதாரணம் :—

"மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தம்
தகுதியால் வென்று விடல்."

[குறள்-கருஅ]

பிறவும் இந்நிகரனவெல்லாம் கொள்க.

இடையில் வண்புகழ்க்கொடையும்-இடைதலில்லாத வளவிய புகழினைத் தரும் கொடையும்.

அஃதாவது, கொடுத்தற்கு அரியன கொடுத்தல். இதுவும் பாகுபாடு மிகுதிப்படுதலின் வாகையாயிற்று.

உதாரணம் :—

"மன்னு வுலகத்து மன்னுதல் குறித்தோர்

துன்னருஞ் சிறப்பி னுயர்ந்த செல்வர்
இன்மையி னிரப்போர்க் கீயா மரபின்
தொன்மை மாக்களிற் றொடர்பறி

யலரே

தாடாழ் படுமணி யிரட்டும் பூநுதல்
ஆடியல் யானை பாடுநர்க் கருகாக்
கேடி னல்லிசை வயமான் றோன்றலைப்
பாடி நின்றனெ னாகக் கொன்னே
பாடுபெறு பரிசிலன் வாடினன்

பெயர்தலென்

நாடிழந் ததனினு நனியின் னாதென
வாடந் தனனே தலையெனக் கீயத்
தன்னிற் சிறந்தது பிறிதொன்

றின்மையின்

ஆடுமலி யுவகையின் வருவல்

ஓடாப் பூட்கையின்

இழுமையோற் கண்டே." [புறம்-கசுறு]

பிழைத்தோர்த் தாங்கும் காவலும்-தம்மாட்டுப் பிழைத்தோரைப் பொறுக்கும் ஏமமும்.

**உதாரணம் :—**

" தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப

தன்றிமற்

றெம்மை யிகழ்ந்த

வினைப்பயத்தால்—உம்மை

எரிவாய் நிரயத்து வீழ்வர்கொ லென்று

பரிவதூஉஞ் சான்றோர் கடன்"

[நாலடி-துறவு-அ] எனவும்,

" அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத்

தம்மை

இகழ்வார்ப் பொறுத்த றலை"

[குறள்-கடுக]

எனவும் வரும.

பொருளொடு புணர்ந்த பக்கமும்-மெய்ப்பொருள் உணர்ந்த பக்கமும்.

உதாரணம் :—

" ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயனின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு
" [குறள்-௩௫௪] எனவும்,

" சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்"
[குறள்-௩௫௯]
எனவும் வரும்.

இன்னும் பொருளொடு புணர்ந்த பக்கமும் என்றது, அறம் பொருள் இன்பம்
மூன்றினும் அறனும் இன்பமு அன்றி ஒழிந்த பொருளொடு பொருந்திய பக்கமு மென்றுமாம். பொருளாவது, நாடும் அரணும் பொருளும் அமைச்சும் நட்பும் படையும்.

" படைகுடி கூழமைச்சு நட்பர ணாறும்
உடையா னரசரு ளேறு" [குறள்-௩௮௧]
என்பதனுனும் கொள்க. அவையிற்றின் மிகுதி கூறலும் வரைகையாம்.

நாடாவது,

" தள்ளா விளையுளுந் தக்காரும் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு." [குறள்-எஙக]

அரணாவது,

" கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி
யகத்தார்
நிலைக்கெளிதா நீர தரண்." [குறள்-எசரு]

பொருளாவது,

" உறுபொருளு முல்கு பொருளுந்தன்
னொன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்."
[குறள்-எருசு] அமைச்சாவது,

" வன்கண் குடிகாத்தல் கற்றறிந்
லாள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு."
[குறள்-சுஙஉ] நட்பாவது,

" அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்கண்
அல்ல லுழப்பதா நட்பு." [குறள்-எஅஎ]

படையாவது,

"அழிவின் றறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை." [குறள்-எகச]

பக்கம் என்றதனுல் ஒற்று, தூது, வினைசெயல்வகை, குடிமை, மானம் என வருவனவெல்லாம் கொள்க. அவற்றுட் சில வருமாறு :—

"கடாஅ வுருவொடு
கண்ணஞ்சா தியாண்டும்
உகாஅமை வல்லதே யொற்று.
[குறள்-ருஅரு]

"கற்றுக்கண் ணஞ்சான்
செலச்சொல்லிக் காலத்தால்
தக்க தறிவதாந் தூது."
[குறள்-கூஅகூ]

பிறவும் அன்ன. 'இன்னும் பொருளொடு புணர்ந்த பக்கம்' என்றதனுற் புதல்வர்ப் பேறுங் கொள்க.

உதாரணம் :—

" படைப்புப் பல படைத்துப்
பல்லாரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினு

மிடைப்படக்

குறுகுறு நடந்து சிறுகை நீட்டி

இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்
நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்து

மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைதாம் வாழு நாளே.''

[புறம்-கஅஅ]

அருளொடு புணர்ந்த அகற்சியும்-அருளொடு
பொருந்தின துறவும்.

அஃதாவது, அருளுடைமை, கொல்லாமை,
பொய்யாமை, கள்ளாமை, புணர்ச்சி விழையாமை,
கள்ளுண்ணாமை, துறவு
என்பனவற்றைப் பொருந்துதலாம். அவற்றுள்,
அருளுடைமை யொழிந்த எல்லாம் விடுதலான்
'அகற்சி' என்றார்.

அருளுடைமையாவது, யாதானும் ஓர் உயிர் இடர்ப்படுமிடத்துத் தன்னுயிர் வருந்தினுற்போல வருந்தும் ஈரமுடைமை.

" அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள. " [குறள்-உசக]

கொல்லாமையாவது, யாதொன்றையும் கொல்லாமை.

" அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும். " [குறள்-கூஉக]

பொய்யாமையாவது, தீமை பயக்கும் சொற்களைக் கூறுமை.

" வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
தீமை யிலாத சொலல். " [குறள்-உகக]

கள்ளாமையாவது, பிறர்க்குரிய பொருளைக் களவினுற் கொள்ளாராதல்.

" களவென்னுங் காரறி வாண்மை யளவென்னும்
ஆற்றல் புரிந்தார்க ணில். " [குறள்-உஅள]

புணர்ச்சி விழையாமையாவது, பிரமசரியம் காத்தல்.

" மாக்கேழ் மடநல்லா யென்றரற்றுஞ் சான்றவர்
நோக்கார்கொ னொய்யதோர் புக்கில்லை—யாக்கைக்கோர்

ஈச்சிற கன்னதோர் தோலறினும் வேண்டுமே
காக்கை கடிவதோர் கோல். ” [நாலடி-தூய்தன்மை-௧]

கள்ளுண்ணாமையாவது கள் உண்டலைத்தவிர்தல்.

“ களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத்
தொளித்ததூஉ மாங்கே மிகும். ” [குறள் ௯௨௮]

துறவாவது, தன்னுடைய பொருளைப் பற்றறத் துறத்தல்.

“ யாதனின் யாதனி னீங்கியா னோதல்
அதனி னதனி னிலன். ” [குறள்-௩௪௧]

காமம் நீத்த பாலும்-ஆசையை நீத்த பக்கமும்.

உதாரணம் :—

“காமம் வெகுளி மயக்க மிவைமூன் றன்
நாமங் கெடக்கெடு நோய். ”

[குறள்-௩௬௦]

என்று இரு பால்பட்ட ஒன்பதின் துறைத்து-என்று இரண்டு கூறுபட்ட ஒன்பது துறைத்து. (௧௭)

௭௯.

காஞ்சி தானே பெருந்திணைப் புறனே

பாங்கருஞ் சிறப்பிற் பன்னெறி யானும்

நில்லா வுலகம் புல்லிய நெறித்தே.

இது, காஞ்சித்திணையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:—காஞ்சி பெருந்திணை புறன்-காஞ்சி என்னும் திணை பெருந்திணை என்னும் அகத்திணைக்குப் புறனும்; பாங்கு அருஞ்சிறப்பின் பல் நெறியானும் நில்லா உல



கம் புல்லிய நெறித்து-அது பாங்காதல் அரிய சிறப்பினாற் பலநெறியானும் நில்லாத உலகத்தைப் பொருந்திய நெறியை யுடைத்து.

பாங்கருமையாவது, ஒருவற்கு ஒருதுணையாகாமை. நிலையாமை மூவகைப்படும், இளமை நிலையாமை செல்வம்நிலையாமை யாக்கைநிலையாமை என. இவற்றுள்,

இளமைநிலையாமை யாவது,

" பனிபடு சோலைப் பயன்மர மெல்லாம்
கனியுதிர்ந்து வீழ்ந்தற் றிளமை—நனிபெரிதும்
வேற்கண்ண னென்றிவளை வெஃகன்மின் மற்றிவளும்
கோற்கண்ண ளாகுங் குனிந்து." [நாலடி-இளமை-எ]

செல்வம் நிலையாமையாவது,

" அறுசுவை யுண்டி யமர்ந்தில்லா

ளூட்ட

மறுசிகை நீக்கி யுண்டாரும்-வறிஞராய்ச்
சென்றிரப்ப ரோரிடத்திற் கூழெனிற்
செல்வமொன்
றுண்டாக வைக்கற்பாற் றன்று.
[நாலடி-செல்வம்-க]

யாக்கை நிலையாமையாவது முன்னர்க் காட்டுதும்.

அதற்கு இது புறனாயவாறு என்னையெனின், "ஏறிய மடற்றிறம்" [அகத்திணை-நுச] முதலாகிய கோந்திறக் காமப் பகுதி அகத்திணை ஐந்தற்கும் புறனாயவாறு போல இது புறத்திணை ஐந்தற்கும் புறனாகலானும், இதுபோல அதுவும் நிலையாமைகோந்திறம் பற்றியும் வருதலானும் அதற்கு இது புறனாயிற்று (கஅ)

என. மாற்றருங் கூற்றஞ் சாற்றிய பெருமையும்

கழிந்தோ ரொழிந்தோர்க்குக் காட்டிய முதுமையும்
பண்புற வரூஉம் பகுதி நோக்கிப்
புண்கிழித்து முடியு மறத்தி னானும்
ஏமச் சுற்ற மின்றிப் புண்ணோற்
பேஎ யோம்பிய பேஎய்ப் பக்கமும்
இன்னனென் றிரங்கிய மன்னை யானும்
இன்னது பிழைப்பி னிதுவா கியரெனத்
துன்னருஞ் சிறப்பின் வஞ்சினத் தானும்
மின்னகை மனைவி பேஎய் புண்ணோன்

துன்னுதல் கடிந்த தொடாஅக் காஞ்சியும்
நீத்த கணவற் றீர்த்த வேலிற்
பெயர்த்த மனைவி வஞ்சி யானும்
நிகர்த்துமேல் வந்த வேந்தனொடு முதுகுடி
மகட்பா டஞ்சிய மகட்பா லானும்
முலையு முகனுஞ் சேர்த்திக்
கொண்டான்
தலையொடு முடிந்த நிலையொடு தொகைஇ
ஈரைந் தாகு மென்ப பேரிசை



மாய்ந்த மகனைச் சுற்றிய சுற்றம்
மாய்ந்த பூசன் மயக்கத் தானும்
தாமே யெய்திய தாங்கரும் பையுளும்
கணவனொடு முடிந்த படர்ச்சி நோக்கிச்
செல்வோர் செப்பிய மூதா னந்தமும்

நனிமிகு சுரத்திடைக் கணவனை யிழந்து
தனிமகள் புலம்பிய முதுபா லையும்
கழிந்தோர் தேஎத்துக் கழிபட ருறீஇ
ஒழிந்தோர் புலம்பிய கையறு நிலையும்
காதலி யிழந்த தபுதார நிலையும்
காதல னிழந்த தாபத நிலையும்
நல்லோள் கணவனொடு நனியழல் புகீஇச்
சொல்லிடை யிட்ட மாலை நிலையும்
அரும்பெருஞ் சிறப்பிற் புதல்வற் பயந்த
தாய்தப வரூஉந் தலைப்பெய னிலையும்
மலர்தலை யுலகத்து மரபுநன் கறியப்
பலர்செலச் செல்லாக் காடு வாழ்த்தொடு
நிறையருஞ் சிறப்பிற் றுறையிரண் டுடைத்தே.

இது, காஞ்சித்துறையாமாறு உணர்த்துதல்
நுதலிற்று.

இ-ள் :—'மாற்றருங் கூற்றம் சாற்றிய பெருமை'
முதலாகத் 'தலையொடு முடிந்த

நிலையொடு' கூடப் பத்தாகும் என்பர் சிலர். 'பூசல்
மயக்கம்' முதலாகக் 'காடுவாழ்த்து'

உட்பட வருவனவற்றொடும் இருவகைப்பட்ட துறையை

யுடைத்து.

[எனவே, முற்கூறிய பத்தும் ஒருவகை யென்பதும்

பிற்கூறிய பத்தும் மற்றொரு

வகை யென்பதும் பெறப்பட்டன.]

மாற்று அருங் கூற்றம் சாற்றிய

பெருமையும்-மாற்றுதற்கு அரிய கூற்றம் ஒருமெ

னச்சொல்லப்பட்ட பெருங்காஞ்சியும்.

**உதாரணம் :—**

"இருங்கட லுடுத்தவிப் பெருங்கண்

மாநிலத்

துடையிலே நடுவணத் திடைபிறர்க் கின்றித்

தாமே யாண்ட வேமங் காவலர்

இடுதிரை மணலினும் பலரே சுடுபிணக்

காடுபதி யாகப் போகித் தத்தம்

நாடு பிறர்கொளச் சென்றுமாய்ந்

தனரே

அதனால்,

நீயுங் கேண்மதி யத்தை வீயா

துடம்பொடு நின்ற வுயிரு மில்லை

மடங்க லுண்மை மாயமோ வன்றே



முள்ளி கள்ளி நள்ளிருஞ் சுடலை
வெள்ளில் போகிய வியலு ளாங்கண்
உப்பிலாஅ வவிப்புழுக்கல்
கைக்கொண்டு பிறக்குநோக்கா
திழிபிறப்பினோ னீயப்பெற்று
நிலங்கல னாக விலங்குபலி மிசையும்
இன்னா வைகல் வாரா முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பக முழுதுடன் றுறந்தே."

[புறம்-௩௬௩]

கழிந்தோர் ஒழிந்தோர்க்குக் காட்டிய

முதுமையும்-அறிவான்மிக்கோர் அல்லாதார்க் குச் சொன்ன

முதுகாஞ்சியும்.

உதாரணம் :—

"பல்சான் றீரே பல்சான் றீரே
கயன்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுட்
பயனின் மூப்பிற் பல்சான் றீரே
கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திற லொருவன்
பிணிக்குங் காலை யிரங்குவிர் மாதோ
நல்லது செய்த லாற்றீ ராயினும்
அல்லது செய்த லோம்புமி னதுதான்
எல்லாரு முவப்ப தன்றியும்
நல்லாற்றுப் படூஉ நெறியுமா ரதுவே."

[புறம்-க கரு]

பண்பு உற வருஉம் பகுதிநோக்கி புண்கிழித்து முடியும் மறனும்-இயல்புற வரும் பகுதிநோக்கிப் புண்கிழித்து முடியும் மறக்காஞ்சியும்.

உதாரணம் :—

"நகையமரா ரய நடுங்க நடுங்கான்
தொகையமரோட்டிய துப்பிற்—பகைவர்முன்
நுங்கிச் சினவுத ஞேஞெ னுதிவேலாற்
பொங்கிப் பரிந்திட்டான் புண்."

[வெண்பா-காஞ்சி-கரு]

ஏமச்சுற்றம் இன்றிப்புண்ணோன் பேஎய் ஓம்பிய

பேஎய்ப்பக்கமும்-ஓம்பும் சுற்றம் இன்மையாற் புண்ணோனைப் பேய் ஓம்பிய பேய்ப்பக்கமும்.

உதாரணம் :—

" ஆயு மடுதிறலாற் கன்பிலா

ரில்போலும்

தோயுங் கதழ்குருதி

தோள்புடைப்ப—பேயும்

களம்புகலச் சீறிக்

கதிர்வேல்வாய் வீழ்ந்தான்

உளம்புகல வோம்ப லுறும்."

[வெண்பா-காஞ்சி-௰௬]

இன்னன் என்று இரங்கிய மன்னையும்-இத்தன்மையான் என உலகத்தார் இரங்கிய மன்னைக் காஞ்சியும்.



உதாரணம் :—

"சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு

மன்னே

சிறுசோற் ருனு நனிபல கலத்தன்

மன்னே

பெருஞ்சோற் ருனு நனிபல கலத்தன்.

மன்னே

என்பொடு தடிபடு வழியெல்லா மெக்கீயு

மன்னே

அம்பொடு வேனுழை வழியெல்லாந்

தானிற்கு மன்னே

நரந்த நாறுந் தன்கையாற்
புலவுநாறு மென்றலை தைவரு மன்னே
அருந்தலை யிரும்பாண ரகன்மண்டைத்

துளையுரீஇ

இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பார்வை சோர
அஞ்சொனுண் டேர்ச்சிப் புலவர் நாவிற்
சென்றுவீழ்ந் தன்றவன் றிருந்திறத்

தியங்கிய வேலே

ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
இனிப்பா டுநரு மில்லைப் பாடுநர்க்கொன்

நீகுநரு மில்லை
பனித்துறைப் பகன்றை நறைக்கொண்

மாமலர்

சூடாது வைகி யாங்குப் பிறர்க்கொன்
றீயாது வீயு முயிர்தவப் பலவே."

[புறம்-உ௩௬]

இன்னது பிழைப்பின் இது ஆகியன் என துன் அருஞ் சிறப்பின் வஞ்சினமும்-

இன்னவாறு செய்தலைப் பிழைத்தேனாயின் இன்னேன் ஆகக் கடவேன் எனக் கூறிய துன்னற்கு அரிய சிறப்பினையுடைய வஞ்சினக்காஞ்சியும். [துணிவு பற்றி 'ஆகியன்' என இறந்த காலத்தாற் கூறினர்.]

உதாரணம் :—

" நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்
இளைய னிவனென வுளையக் கூறிப்
படுமணி யிரட்டும் பாவடிப் பணைத்தாள்
நெடுநல் யானையுந் தேரு மாவும்
படையமை மறவரு முடையம் யாமென்
றுறுதுப் பஞ்சா துடல்சினஞ் செருக்கிச்

சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொ
டொருங்ககப் படேஎ னாயிற் பொருந்திய
என்னிழல் வாழ்நர் சென்னிழற் காணாது
கொடியனெம் மிறையெனக் கண்ணீர்

பரப்பிக்

குடிபழி தூற்றுங் கோலே னாகுக
ஓங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் றலைவ னாக



உலகொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர்பா டாது வரைகவென் னிலவரை
புரப்போர் புன்கண் கூர
இரப்போர்க் கீயா வின்மையா னுறவே."

[புறம்-எ௨]

இன்னகை மனைவி பேஎய் புண்ணோன் துன்னுதல் கடிந்த தொடாக்காஞ்சியும்- இனிய நகையார்ந்த மனைவி பேய் புண்ணோனைக் கிட்டுதலைக் காத்த தொடாக்காஞ்

உதாரணம் :—

" தீங்கனிப் புறவமொடு வேம்புமனைச் செரீஇ
வாங்குமருப் பியாழொடு பல்லியங் கறங்கக்
கைபயப் பெயர்த்து மையிழு தெழுதி
ஐயவி சிதறி யாம்ப லூதி
இசைமணி யெறிந்து காஞ்சி பாடி
நெடுநகர் வரைப்பிற் கடிநறை புகைஇக்
காக்க வம்மோ காதலந் தோழி
வேந்துறு விழுமந் தாங்கிப்
பூம்பொறி கழற்கா னெடுந்தகை புண்ணே."
[புறம்-உ௮௧]

நீத்த கணவன் தீர்த்த வேலின் பேர்த்த மனைவி ஆஞ்சியும்-தன்னை நீத்த கணவன் விடுத்த வேலினானே மனைவி தன் உயிரையும் பெயர்த்த ஆஞ்சியும்.

உதாரணம் :—

" கௌவைநீர் வேலிக் கடிதேகாண் கற்புடைமை
வெவ்வேல்வாய் வீழ்ந்தான் விறல்வெய்யோன்—அவ்வேலே
அம்பிற் பிறழுந் தடங்க ணவன்காதற்
கொம்பிற்கு மாயிற்றே கூற்று."

[வெண்பா-காஞ்சி-உ௯]

நிகர்த்து மேல் வந்த வேந்தனொடு முது குடி மகட்பாடு அஞ்சிய மகட்பாலும்- ஒத்து மாறுபட்டுத் தன்மேல் வந்த வேந்தனொடு தன் தொல்குலத்து மகட்கொடை அஞ்சிய மகட்பாற்காஞ்சியும்.

உதாரணம் :—

" நுதிவேல் கொண்டு நுதல்வியர் துடையாக்
கடிய கூறும் வேந்தே தந்தையும்
நெடிய வல்லது பணிந்துமொழி யலனே
இஃதிவர் படிவ மாயின் வையெயிற்
றரிமதர் மழைக்க ணம்மா வரிவை
மரம்படு சிறுதீப் போல
அணங்கா யினடான் பிறந்த வூர்க்கே."

[புறம்-௩௪௯]

கொண்டோன் தலையொடு முலையும் முகனும்
சேர்த்தி முடிந்த நிலையொடு
தொகைஇ ஈர் ஐந்து ஆகும் என்ப-தன்னைக் கொண்டான் தலையொடு தனது முலை
யையும் முகத்தையும் சேர்த்தி இறந்த நிலையும் கூடிப் பத்தாகும் என்பர் சிலர்,

ாகள்

உதாரணம் :—

"கொலையானுக் கூற்றே கொடிதே கொழுநன்
தலையானு டையலாள் கண்டே—முலையான்
முயங்கினள் வாண்முகமுஞ் சேர்த்தின ளாங்கே
உயங்கினு ளோங்கிற் றுயிர்."

[வெண்பா-காஞ்-கரு.]

பேர் இசை மாய்ந்த மகனை சுற்றிய சுற்றம் மாய்ந்த பூசல் மயக்கமும் பெரிய இசையையுடையனுய் மாய்ந்தவனைச் சுற்றிய சுற்றத்தார் அவன் மாய்ந்தமைக்கு அழுத மயக்கமும்.
[மகன்-ஆண்மகன்.]

உதாரணம் :—

" மீனுண் கொக்கின் றூவி யன்ன
வானரைக் கூந்தன் முதியோள் சிறுவன்
களிறெறிந்து பட்டன னென்னு

முவகை

ஈன்ற ஞான்றினும் பெரிதே கண்ணீர்
நோன்கழை யலமரும் வெதிரத்து
வான்பெய றூங்கிய சிதரினும் பலவே."

[புறம்-உஎஎ]

தாம் எய்திய தாங்கு அரும்
பையுளும்-சிறைப்பட்டார் தாம் உற்ற பொறுத் தற்கு அரிய
துன்பத்தினைக் கூறுங் கூற்றும்.

உதாரணம் :—

" குழவி யிறப்பினு மூன்றடி

பிறப்பினும்

ஆளன் றென்று வாளிற் றப்பார்
தொடர்ப்படு ஞமலியி னிடர்ப்படுத்

திரீஇய

கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்
மதுகை யின்றி வயிற்றுத்தீத் தணியத்

•

தாமிரந் துண்ணு மளவை
ஈன்ம ரோவிவ் வுலகத் தானே."

[புறம்-எச]

கணவனொடு முடிந்த படர்ச்சி நோக்கிச் செல்வோர் செப்பிய மூதானந்தமும்- கணவனொடு இறந்த செலவை நோக்கிச் செல்வோர் செப்பிய மூதானந்தமும்.

உதாரணம் :—

" ஒருயி ராக வுணர்க வுடன்கலந்தார்க்
கீருயி ரென்ப ரிடைதெரியார்—போரில்
விடனேந்தும் வேலோற்கும்

வெள்வளையி னாட்கும்

உடனே யுலந்த துயிர்."

[வெண்பா-சிறப்பிற்பொதுவியல்-௯]

நனி மிகு சுரத்திடைக் கணவனை இழந்து தனிமகள் புலம்பிய முதுபாலையும்-மிகுதி மிக்க சுரத்திடைக் கணவனை யிழந்து தனியளாய்த் தலைமகள் வருந்திய முதுபாலையும்.

உதாரணம் :—

" ஐயோ வெனின்யான் புலியஞ் சுவலே
எடுத்தனன் கொளினகன்

மார்பெடுக் கல்லேன்

என்போற் பெருவிதிர்ப் புறுக நின்னை

இன்னு செய்த வறனில் கூற்றே
நிரைவளை முன்கை பற்றி
வரைநிழற் சேர்க நடத்திசிற் சிறிதே." [புறம்-உருரு]

கழிந்தோர் தேஎத்துக் கழிபடர் உறீஇ ஒழிந்தோர் புலம்பிய கையறு
செத்தோர்மாட்டுச் சாவாதார் வருத்தமுற்றுப் புலம்பிய கையறு நிலையும்.

உதாரணம் :—

" செற்றன் றாயினுஞ் செயிர்த்தன் றாயினும்
உற்றன் றாயினு முய்வின்று மாதோ
பாடுநர் போலக் கைதொழு தேத்தி
இரந்தன் றாகல் வேண்டும் பொலந்தார்
மண்டமர்க் கடக்குந் தானைத்
திண்டேர் வளவற் கொண்ட கூற்றே." [புறம்-உஉசு]

காதலி இழந்த தபுதார நிலையும்-காதலியை இழந்த
கணவனது தபுதார நிலையும்.

உதாரணம் :—
" யாங்குப் பெரிதாயினு நோயள வெனைத்தே
உயிர்செகுக் கல்லா மதுகைத் தன்மையின்
கள்ளி போகிய களரி மருங்கின்

வெள்ளிடைப் பொத்திய விளைவிற கீமத்
தொள்ளழற் பள்ளிப் பாயல் சேர்த்தி
ஞாங்கர் மாய்ந்தனண் மடந்தை
இன்னும் வாழ்வ லென்னிதன் பண்பே." [புறம்-உசரு]

காதலன் இழந்த தாபத நிலையும்-காதலனை இழந்தவள் நிற்கும் தாபதநிலையும்.

உதாரணம் :—

"அளிய தாமே சிறுவெள் ளாம்பல்
இளைய மாகத் தழையா யினவே
இனியே,
பெருவளக் கொழுநன் மாய்ந்தெனப் பொழுதுமறுத்
தின்னா வைக லுண்ணும்
அல்லிப் படூஉம் புல்லா யினவே."
[புறம்-உசஅ]

நல்லோள் கணவனொடு நளி அழல் புகீஇ இடையிட்ட மாலை சொல் நிலையும்-

கணவனொடு கிழத்தி பெரிய அழற் புகுவழி இடையிட்ட மாலைக்காலத்துக் கூறும் கூற்றும்.

உதாரணம் :—

“பல்சான் றீரே பல்சான் றீரே
செல்கெனச் சொல்லா தொழிகென

விலக்கும்

பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே
அணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந் திட்ட
காழ்போ னல்விளர் நறுநெய் தீண்டா
தடையிடை மிடைந்த கைபிழி பிண்டம்



வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய் தட்ட
வேளை வெந்தை வல்சி யாகப்
பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியும்
உயவற் பெண்டிரே மல்லே மாதோ
பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட் டீம
நுமக்கரி தாகுக தில்ல வெமக்கெம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென

வரும்பற

வள்ளித ழவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே.” [புறம்-உ௪௬]

அரும்பெருஞ் சிறப்பின் புதல்வன் பயந்த தாய் தபவரூஉம் தலைப்பெயல் நிலையும்-அரும்பெருஞ் சிறப்பினையுடைய மகற்பெற்ற தாய் சாதற்கண் அவனைத் தலைப் பெயல் நிலையும். [தலைப்பெயல்-சேர்தல்.]

**உதாரணம் :—**

"இடம்படு ஞாலத் தியல்போ கொடிதே
தடம்பெருங்கட் பாலக னென்னுங்—கடன்கழித்து
முன்னெயிற்றுப் பேதையாள் புக்காண் முரணவியா
வன்னெயிற்றுக் கூற்றத்தின் வாய்."

[வெண்பா-சிறப்பிற் பொதுவியல்-௫]

மலர்தலை உலகத்து மரபு நன்கு அறியபலர் செல செல்லா காடுவாழ்த்தொடும்-இடம் அகன்ற உலகத்தின் மரபு நன்கு விளங்கப் பலரும் மாயத் தான் மாயாத புறங் காடுவாழ்த்துதலும்.

**உதாரணம் :—**

" களரி பரந்து கள்ளி பொங்கிப்
பகலுங் கூவுங் கூகையொடு பிறழ்வா
வீம விளக்கிற் பேஎய் மகளிரோ
டஞ்சுவந் தன்றி மஞ்சுபடு முதுகாடு
நெஞ்சமர் காதல ரழுத கண்ணீர்
என்புபடு சுடலை வெண்ணீ றவிப்ப
எல்லார் புறனுந் தான்கண் டுலகத்து
மன்பதைக் கெல்லாந் தானாய்த்
தன்புறங் காண்போர்க் காண்பறி யாதே." [புறம்-௩௫௬]

நிறை அருஞ் சிறப்பின் இரண்டு துறை உடைத்து-ஆக நிறையும் அருஞ்சிறப் பினையுடைய இரண்டு துறைகளையுடைத்து.

[இச்சூத்திரத்தில் வந்த அத்தும் ஆனும் முறையே சாரியையும் இடைச்சொல்லு மாம்.] (கக)

எஅ. பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே
நாடுங் காலை நாலிரண் டுடைத்தே.

இது, பாடாண்டிணை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று



இ-ள் :—பாடாண் பகுதி கைக்கிளைப் புறன்-பாடாண்திணைப் பகுதி கைக்கிளை என்னும் அகத்திணைக்குப் புறனும்; நாடும் காலை நால் இரண்டு உடைத்து-அஃது ஆராயுங் காலத்து எட்டுவகையினை உடைத்து.

அவையாவன:—கடவுள்வாழ்த்துவகை, வாழ்த்தியல்வகை, மங்கலவகை, செவியறி வுறுத்தல், ஆற்றுப்படைவகை, பரிசிற்றுறைவகை, கைக்கிளைவகை, வசைவகை என் பன.

அவையாமாறு முன்னர்க் காட்டுதும்.

அதற்கு இது

புறனுயவாறு என்னை யெனின், கைக்கிளையாவது ஒரு நிலத்திற்கு உரித்தன்றி ஒருதலைக் காமமாகி வருமன்றே; அதுபோல இதுவும் ஒருபாற்கு உரித் தன்றி ஒருவனை ஒருவன் யாதானும் ஓர் பயன் கருதியவழி மொழிந்துநிற்ப தாகலானும், கைக்கிளையாகிய காமப்பகுதிக்கண் மெய்ப்பெயர்பற்றிக் கூறுதலானும், கைக் கிளைபோலச் செந்திறத்தாற் கூறுதலானும் அதற்கு இதுபுறனுயிற்று. நோந்திறமாவது கழிபேரிரக்கம்; செந்திறமாவது அஃது அல்லாதன. (உ0)

எகூ. அமராகண முடிபு மறுவகை
யானும
புரைதீர் காமம் புல்லிய வகையினும்
ஒன்றன் பகுதி யொன்று மென்ப.

இது, பாடாண் பாட்டிற்கு உரியதோர் பொருண்மை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:—அமரர்கண் முடியும்
அறுவகையானும்-அமரர்கண் முடியும் கொடிநிலை கந்தழி வள்ளி புலவராற்றுப்படை புகழ்தல் பரவல் என்பவனவற்றினும்,

புரைதீர் காமம் புல்லிய வகையினும்-குற்றந் தீர்ந்த

காமத்தைப் பொருந்திய வகையினும்.

அஃதாவது, ஐந்திணை தழுவிய அகம்.

ஒன்றன் பகுதி ஒன்றும் என்ப-அவையிற்றின் ஒரு கூற்றின் பாகுபாடு பாடாண் டிணை யாதற்குப் பொருந்தும் என்பர் புலவர்.

அஃதாவது, கொடிநிலை முதலிய ஆறும் கடவுட்புகழ்ச்சியன்றிப் பாட்டுடைத்தலை வனைச் சார்த்திவருதல், காமப்பகுதியிற் பாடும் பாட்டுடைத்தலைவனைச் சார்த்தி வருதல், என்ற இவ்விருவகையானும் ஒருவனைப் புகழ்தலாற் பாடாண்பாட்டு ஆயிற்று.

இன்னும் ' புரைதீர் காமம் புல்லிய வகையினும் ஒன்றன் பகுதி' என்றவதனன், ஐவகைப்பொருளினும் ஊடற்பொருண்மை பாடாண்பகுதிக்கு ஒன்றும் என்ற வாறும். இன்னும் இதனனே இயற்பெயர் சார்த்தி வாராது நாடும் ஊரும் இது வென விளங்கவரும் ஊரன் சேர்ப்பன் என்னும் பெயரினன் ஒரு கூறு குறிப்புப் பற்றி வரும் பகுதியும் பாடாண்பாட்டாம் என்று கொள்க.

அ௦. வழக்கியன் மருங்கின் வகைபட
நிலைஇப்
பரவலும் புகழ்ச்சியுங் கருதிய
பாங்கினும்
முன்னோர் கூறிய குறிப்பினுஞ் செந்துறை
வண்ணப் பகுதி வரைவின் றாங்கே.

இது, சில பொருட்கண் வரும் வேறுபாடு
உணர்த்துதல் நுதலிற்று.

போருளதிகாரம் - புறத்திணையியல்

ரஉக

இ-ள் :—வழக்கியல் மருங்கின் வகைபட நிலைஇ பரவலும் புகழ்ச்சியும் கருதிய பாங்கினும்-மேற் சொல்லப்பட்டன வழக்கு இயலும் பக்கத்து வகைபெற நிறுத்திப் பரவலும் புகழ்ச்சியும் கருதிய பக்கத்தினும், முன்னோர் கூறிய குறிப்பினும்-முதலாசிரியர்
கூறிய காமக்குறிப்பினும், செந்துறை வண்ணம் பகுதி

வரைவு இன்று ஆங்கு-செந்

துறைப்பாட்டின்கண் வரும் வண்ணப்பகுதி வரைதல்

இல்லை அவ்விடத்து.

குறிப்பு என்பது காமமாமாறு வருகின்ற

சூத்திரத்துள் "காமப் பகுதி கடவுளும்

வரையார்" [புறத்திணை-உரு] என ஒட்டி

எழுந்தமையான் உணர்க.

இதனற் சொல்லியது, தேவபாணியும் அகப்பொருள் பாடும் பாட்டும் இசைத் தமிழில் வரைந்து ஓதினாற்போலச் செந்துறைப்பாட்டிற்கு உரிய செய்யுள் இவை

என்று உரைத்தல் இல்லை பாடாண்பாட்டின்கண்

வருங்காலத்தென்பது. எனவே எல்

லாச் செய்யுளும் ஆம் என்றவாறு.

இனி, புகழ்தல் படர்க்கைக்கண்ணும், பரவல்

முன்னிலைக்கண்ணும் வருமாறு:—

"கண்ணகன் ஞால மளந்ததூஉங்

காமருசீர்த்

தண்ணறும் பூங்குருந்தஞ் சாய்த்ததூஉம்—நண்ணிய

மாயச் சகட முதைத்ததூஉ மிம்மூன்றும்

பூவைப்பூ வண்ண னடி." [திரிகடுகம்-கடவுள் வாழ்த்து]

இது புகழ்தல்.

“வைய மகளை யடிப்படுத்தாய் வையகத்தார்
உய்ய வுருவம் வெளிப்படுத்தாய்—வெய்ய
அடுந்திற லாழி யரவணையா யென்னும்
நெடுந்தகை நின்னையே யாம்.”

[வெண்பா-பாடாண்-௩]

இது பரவல்.

“வெறிகொ ளறையருவி வேங்கடத்துச் சேறி
நெறிகொள் படிவத்தோய் நீயும்—பொறிகட் கிருளீயு ஞாலத்
திடரெல்லா நீங்க
அருளீயு மாழி யவன்.” [வெண்பா-பாடாண்-௪௨]

இது புலவராற்றுப்படை.

“மாயவன் மாய மதுவான் மணிநிரையுள்
ஆயனா வெண்ண லவனருளான்—காயக்
கழலவிழக் கண்கனலக் கைவளையார் சோரச்
சுழலழலுள் வைகின்று சோ.”

[வெண்பா-பாடாண்-௪௯] இது கந்தழி. வள்ளி
என்பது ஈண்டு வெறியாட்டு.

“வேண்டுதியா னீயும் விழைவோர்
விழுமிதே

ஈண்டியம் விம்ம வினவளையார்—பூண்டயங்கச்

சூலமோ டாடுஞ் சுடர்ச்சடையோன் காதலற்கு
வேலனோ டாடும் வெறி.” [வெண்பா-பாடாண்-சக]

இது வள்ளி. கொடிநிலை வந்தவழிக்காண்க. இனி, அவை சார்ந்து வருமாறு முன்னர்க் காட்டுதும்.





இனிக் காமப்பகுதி வருமாறு:—

“ மலைபடு சாந்த மலர்மார்ப யாநின்
பலர்படி செல்வம் படியேம்—
புலர்விடியல்
வண்டினங்கூட் டுண்ணும் வயல்சூழ் திருநகரிற்
கண்டனங் காண்டற் கரிது.” [வெண்பா-பாடாண்-சஎ]

இஃது ஊடற்பொருண்மைக்கண் வந்தது. இனி, இயற்பெயர் சார்த்தியும் வரும். “ வையை தன்
நீர்முற்றி மதில்பொரூஉம் பகையல்லா னேராதார்

போர்முற்றொன் றறியாத புரிசைசூழ் புனலூரன்"

[கலி-மருதம்-உ]

என்பது குறிப்பினாற் பாட்டுடைத்தலைமகனே கிளவித்தலைமகனாக வந்தது.

"பூந்தண்டார்ப் புலர்சாந்திற்
றென்னவ னுயர்கூடல்
தேம்பாய வவிழ்நீலத் தலர்வென்ற
வமருண்கண்
ஏந்துகோட் டெழில்யானை
யொன்னாதார்க் கவன்வேலிற்
சேந்துநீ யினையையா லொத்ததோ
சின்மொழி."

[கலி-குறிஞ்சி-உக]

இது காமத்தின்கண் வந்தது.

(உஉ)

அக. காமப் பகுதி கடவுளும் வரையார்
ஏனோர் பாங்கினு மென்மனார் புலவர்.

இது, கடவுள்மாட்டு வருவதோர் பாடாண்பக்கம்

உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்:—காமப்பகுதி கடவுளும் வரையார்-காமப்பகுதி கடவுள்மாட்டும் வரையார், ஏனோர்பாங்கினும் (வரையார்) என்மனார் புலவர்-ஏனோர்மாட்டும் வரையார் என்பர் புலவர்.

என்றது, கடவுள்மாட்டுத் தெய்வப்பெண்டிர் நயந்த பக்கமும் மானிடப்பெண்டிர் நயந்த பக்கமும் பாடப்பெறும் என்றவாறு.

உதாரணம் :—

" நல்கினு நாமிசையா ளென்னுஞ் சேவடிமேல்
ஒல்கினு முச்சியா ளென்னும்—மல்கிருள்
ஆட லயர்ந்தாற் கரிதா லுமையாளை
ஊட லுணர்த்துவதோ ராறு."

[வெண்பா-பாடாண்-சு அ]

இது தெய்வப்பெண்டிர் நயந்த பக்கம்.

" அரிகொண்ட கண்சிவப்ப வல்லினென் னாகம்
புரிகொண்ட நூல்வடுவாப் புல்லி—வரிவண்டு
பண்ணலங்கூட் டுண்ணும் பனிமலர்ப்

பாருமரன்

உண்ணாலங் கூட்டுண்டா னூர்."
[வெண்பா-பாடாண்-சுக]

இனிது மாடப்பெண்டிர் நயந்த பக்கம்.



அ௨. குழவி மருங்கினுங் கிழவ தாகும்.

இது, குழவிப்பருவத்தும் காமப்பகுதி பாடப்பெறும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்:—குழவி மருங்கினும் கிழவது ஆகும்-குழவிப்பருவத்தும் காமப்பகுதி கூறல் பெறும் (அவர் விளையாட்டு மகளிரொடு பொருந்தியக்கண்).

உதாரணம் :—

" வரிப்பந்து கொண்டொளித்தாய் வாள்வேந்தன் மைந்தா
அரிக்கண்ணி யஞ்சி யலற—எரிக்கதிர்வேற்
செங்கோல னுங்கோச் சினக்களிற்றின் மேல்வரினும்
எங்கோலந் தீண்ட லினிது." [வெண்பா-பாடாண்-௫ய]

(௨.சு)

அரு. ஊரொடு தோற்றமு முரித்தென
மொழிப

வழக்கொடு சிவணிய வகைமை யான.

இதுவும் அது.

இ-ள் :—ஊரொடு தோற்றமும் உரித்து என
மொழிப-ஊரின்கண் காமப்பகுதி

நிகழ்தலும் உரித்து என்று சொல்வர் புலவர், வழக்கொடு
சிவணிய வகைமையான்-அது

நிகழுங்காலத்து வழக்கொடு பொருந்திநடக்கும்
வகைமையின்கண்.

'ஊரொடு தோற்றம்' என்பது பேதை முதலாகப்
பேரிளம்பெண் ஈருக வரு

வது. 'வழக்கு' என்பது சொல்லுதற்கு ஏற்ற நிலைமை.
'வகை' என்பது அவரவர்

பருவத்திற்கு ஏற்கக் கூறும் வகைச்செய்யுள். உதாரணம்
வந்தவழிக் கண்டுகொள்க.

அசு. மெய்ப்பெயர் மருங்கின்

வைத்தனர் வழியே.

இதுவும், பாடாண்பாட்டிற்கு உரியதோர் மரபு
உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—மெய்ப்பெயர் மருங்கின் வைத்தனர் வழியே-மேற்சொல்லப்பட்டனவும் இனிக்கூறுகின்றனவும் ஒருவற்குக் காரணமாகி மெய்ப்பெயராகி வரும் பொதுப்பெயரானன்றி இயற்பெயரின்பக்கத்து வைத்தனர் நெறிப்பட. (உசு)

அரு. கொடிநிலை கந்தழி வள்ளி

யென்ற

வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே

இது, சார்ந்து வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—வடு நீங்கு சிறப்பின் கொடிநிலை கந்தழி வள்ளி என்ற முதலன மூன்றும்-குற்றம் தீர்ந்த சிறப்பினையுடைய கொடிநிலை முதலாகச் சொல்லப்பட்ட மூற்பட்ட மூன்றும், கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வரும்-பாட்டுடைத்தலைமகனைச்

சார்த்தி வருங்காலத்துக் கடவுள் வாழ்த்தொடு பொருந்தி வரும்.

**உதாரணம் :—**

'பூங்க ணெடுமுடிப் பூவைப்பூ மேனியான்
பாம்புண் பறவைக் கொடிபோல—வோங்குக
பல்யானை மன்னர் பணியப் பனிமலர்த்தார்க்
கொல்யானை மன்னன் கொடி." [வெண்பா-பாடாண்-௩௧.]

இது கொடிநிலை.

"அன்றெறிந் தானு மிவனே லரண்வலித்
தின்றிவன் மாறு யெதிர்வார்யார்—கன்றும்
அடையார் மணிப்பூ ணடையாதார் மார்பிற்
சுடராழி நின்றெறியச் சோ."

[வெண்பா-உழிஞை-எ]

இது கந்தழி.

வள்ளியிற் சார்ந்து வருமாறு வந்தவழிக் கண்டுகொள்க. "வந்தது கொண்டு

வாராதது முடித்தல்" [தொல்-மரபி-௱௰] என்பதனால் புலவராற்றுப்படை முதலா

கிய மூன்றும் சார்த்தி வருமெனவும் கொள்க. முருகாற்றுப்படையுள்,

"மாடமலி மறுகிற் கூடற் குடவயின்
இருஞ்சேற் றகல்வயல் விரிந்துவா யவிழ்ந்த
முட்டாட் டாமரைத் துஞ்சி" [திருமுருகு-எக-எ௩]

என்றவழி, ஒரு முகத்தாற் பாண்டியனையும் இதனுட்சார்த்தியவாறு காண்க.

இனிப் பரவற்குச் சார்ந்து வருமாறு:—"கெடலரு மாமுனிவர் கிளர்ந்துடன்" என்னுங் கலிப்பாட்டினுள்,

" அடுதிற லொருவிற் பரவுது மெங்கோன்
தொடுகழற் கொடும்பூட் பகட்டெழின் மார்பிற்
கயலொடு கலந்த சிலையுடைக் கொடுவரிப்
புயலுறழ் தடக்கைப் போர்வே லச்சுதன்
ஒன் று முதுகட லுலக முழுவதும்
ஒன் றுபுரி திகிரி யுருட்டுவோ னெனவே "
[யாப்-விரு-அ௩-மேற்

கோன்] என்பதனுட் பாட்டுடைத்த லைமகனைச் சார்த்தியவா று காண்க. பிறவும்
அன்ன.
(உஎ)

அ௬. கொற்ற வள்ளை யோரிடத்
தான.

இதுவும், பாடாண்டிணைக்கு உரியதோர் பொருள் வேறுபாடு உணர்த்துதல் நுத
லிற்று.

இ - ள் :—கொற்றவள்ளை ஓர் இடத்து
ஆன-கொற்றவள்ளையும் ஓர் இடத்துப்

பாடாணபாடடாம.

என்றது, துறைகூறுதல் கருத்தாயின் வஞ்சியாம்;

புகழ்தல் கருத்தாயின் பாடாண்

டிணையாம் என்றவாறு.

உதாரணம் :—

“வல்லா ராயினும் வல்லுந ராயினும்
புகழ்தலுற் றோர்க்கு மாயோ னன்ன
உரைசால் சிறப்பிற் புகழ்சான் மாற
நின்னொன்று கூறுவ துடையே னீயே
பிறர்நாடு கொள்ளுங் காலை யவர்நாட்
டிறங்குகதிர்க் கழனிநின் னிளைஞருங் கவர்க
நனந்தலைப் பேரூ ரெரியு நக்க
மின்னுநிமிர்ந் தன்னநின் னொளிறிலங்கு நெடுவேல் ஒன்னார்ச்
செகுப்பினுஞ் செகுக்க வென்னதூஉங்



கடிமரந் தடித லோம்புநின்
நெடுநல் யானைக்குக் கந்தாற் றாவே.”

[புறம்-௫எ] (௨அ)

அஎ. கொடுப்போ ரேத்திக் கொடாஅர்ப் பழித்தலும்

அடுத்தூர்ந் தேத்திய வியன்மொழி வாழ்த்தும்

சேய்வரல் வருத்தம் வீட வாயில்
காவலர்க் குரைத்த கடைநிலை யானும்
கண்படை கண்ணிய கண்படை

நிலையும்

கபிலை கண்ணிய வேள்வி நிலையும்
வேலை நோக்கிய விளக்கு நிலையும்
வாயுறை வாழ்த்துஞ் செவியறி

வுறூஉவும்

ஆவயின் வரூஉம் புறநிலை வாழ்த்தும்
கைக்கிளை வகையோ டுளப்படத்

தொகைஇத்

தொக்க நான்கு முளவென மொழிப.

இது, பாடாண்டிணைக்குத் துறையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்:—'கொடுப்போ ரேத்திக் கொடாஅர்ப் பழித்தல்' முதலாக 'வேலை நோக் கிய விளக்கு நிலை' ஈறாகச் சொல்லப்பட்டனவும், 'வாயுறை வாழ்த்து' முதலாகக் 'கைக்கிளை' உளப்பட்ட நால்வகையும் பாடாண்டிணைக்குத் துறையாம் என்று சொல்லு வர் புலவர் என்றவாறு.

கொடுப்போர் ஏத்திக் கொடார்ப் பழித்தல் என்றது, கொடுப்போர் ஏத்தல் என வும், கொடார்ப் பழித்தல் எனவும்,

கொடுப்போர் ஏத்திக் கொடார்ப் பழித்தல் எனவும் மூவகைப்படும்.

இதனாற் பெற்றது, ஈவோரைப் புகழ்தலும், ஈயாதோரைப் பழித்தலும், ஈவோ ரைப் புகழ்ந்து ஈயாதோரைப் பழித்தலும் என் றவா று.

கொடுப்போர் ஏத்தல் வருமாறு:—

"தடவுநிலைப் பலாவி ளுஞ்சிற் பொருநன்
மடவன் மன் ற செந்நாப் புலவீர்
வளைக்கை விறலியர் படப்பைக் கொய்த
அடகின் கண்ணுறை யாக யாஞ்சில
அரிசி வேண்டினே மாகத் தான்பிற
வரிசை யறிதலிற் றன்னுந் தூக்கி
இருங்கடறு வளைஇய
குன் றத் தன் னதோர்
பெருங்களிறு நல்கி யோனே
யன் னதோர்
தேற்ரு வீகையு முளதுகொல்
போற்ரு ரம்ம பெரியோர்தங் கடனே." [புறம்-கசo]

"பாரி பாரி யென் றுபல வேத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்

பாரி யொருவனு மல்லன்
மாரியு முண்டீவ் வுலகுபுரப் பதுவே." [புறம்-கOஎ]



கோடார்ப் பழித்தல் வருமாறு :—

" ஒல்லுவ தொல்லு மென்றலும் யாவர்க்கும்
ஒல்லா தில்லென மறுத்தலு மிரண்டும்
மாண்வினை மருங்கிற் கேண்மைப் பாலே

ஒல்லா தொல்லு மென்றலு மொல்லுவ
தில்லென மறுத்தலு மிரண்டும் வல்லே
இரப்போர் வாட்ட லன்றியும் புரப்போர்
புகழ்குறை படூஉம் வாயி லத்தை
அனைத்தா கியவினி யிதுவே யெனைத்தும்
செய்தகா ணுசது கண்டன மதனுன்
நோயில ராகநின் புதல்வர் யானும்
வெயிலென முனியேன் பனியென

மடியேன்

கல்குயின் றன்னவென் னல்கூர் வளிமறை
நாணல தில்லாக் கற்பின் வாணுதல்
மெல்லியற் குறுமக ளுள்ளிச்
செல்வ லத்தை சிறக்கரின் றேளே."

[புறம்-கசுசு]

கொடுப்போர் ஏத்திக் கொடார்ப் பழித்தல் வருமாறு:—

" களங்கனி யன்ன கருங்கோட்டுச்
சீறியாழ்ப்
பாட்டின் பனுவற் பாண ருய்த்தெனக்
களிறில வாகிய புல்லரை நெடுவெளிற்
கான மஞ்ஞை கணனொடு சேப்ப
ஈகை யரிய விழையணி மகளிரொடு
சாயின் றென்ப வாஅய் கோயில்
சுவைக்கினி தாகிய குய்யுடை யடிசில்
பிறர்க்கீ வின்றித் தம்வயி றருத்தி
உரைசா லோங்குபுக ழொரீஇய
முரசுகெழு செல்வர் நகர்போ லாதே."

[புறம்-கஉஎ]

இதனுள் ஏத்தப்பட்டவன் ஆய்; பழிக்கப்பட்டவர் செல்வர்.

அடுத்து ஊர்ந்து ஏத்திய இயல்மொழி
வாழ்த்தும்-வென்றியும் குணனும் அடுத் துப் பரந்து ஏத்திய இயல்மொழி வாழ்த்தும்.

அஃது, இயல்மொழி எனவும், வாழ்த்து எனவும், இயல்மொழி வாழ்த்து எனவும்

மூவகைப்படும்.

உதாரணம் :—

" ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு
கழாஅலின்
நீர்த்துறை படியும் பெருங்களிறு போல
இனியை பெரும வெமக்கே மற்றதன்

துன்னருங் கடாஅம் போல
இன்னாய் பெருமநின் னொன்னா தோர்க்கே." [புறம்-கூச.]

இஃது இயல்மொழி.

" ஆன்முலை யறுத்த வறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருவுசிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவே
நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
அறம்பா டின்றே யாயிழை கணவ
காலை யந்தியு மாலை யந்தியும்
புறவுக் கருவன்ன புன்புல வரகின்
பாற்பெய் புன்கந் தேனொடு மயக்கிக்
குறுமுயற் கொழுஞ்சூடு கிழித்த வொக்கலோ
டிரத்தி நீடிய வகன்றலை மன்றத்துக்
கரப்பி லுள்ளமொடு வேண்டுமொழி பயிற்றி
அமலைக் கொழுஞ்சோ றார்ந்த பாணர்க்
ககலாச் செல்வ முழுவதுஞ் செய்தோன்
எங்கோன் வளவன் வாழ்க வென்றுநின்
பீடுகெழு நோன்றாள் பாடே னாயிற்
படுபறி யலனே பல்கதிர்ச் செல்வன்
யானோ தஞ்சம் பெருமவிவ் வுலகத்துச்
சான்றோர் செய்த நன்றுண் டாயின்
இமயத் தீண்டி யின்குரல் பயிற்றிக்
கொண்டன் மாமழை பொழிந்த

நுண்பஃ றுளியினும் வாழிய பலவே." [புறம்-நஅ]

இது வாழ்த்து.

"ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புலம் வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மினென்
றறத்தாறு நுவலும் பூட்கை மறத்திற்
கொல்களிற்று மீமிசைக்
கொடிவிசும்பு நிழற்றும்
எங்கோ வாழிய குடுமி தங்கோச்
செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த
முந்நீர் விழவி னெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே."
[புறம்-௯]

இஃது இயல்மொழி வாழ்த்து.

"பார்ப்பார்க் கல்லது பணிபறி யலையே
பணியா வுள்ளமோ டணிவரக் கெழீஇ
நட்டோர்க் கல்லது கண்ணஞ் சலையே
வணங்குசிலை பொருதநின் மணங்கம ழகலம்

மகளிர்க் கல்லது மலர்ப்பறி யலையே நிலந்திறம் பெயருங் காலை
யாயினும் இளந்த சொன்னீ பொய்ப்பறி யலையே சிறியிலை
யுழிஞைத் தெரியல் சூடிக் கொண்டு மிலைசுடத் தண்டமிழ்
செறித்துக்
குன்றுநிலை தளர்க்கு முருமிற் சீறி
ஒருமுற் றிருவ ரோட்டிய வொள்வாட் செருமிகு தானை
வெல்போ ரோயே ஆடுபெற் றழிந்த மள்ளர் மாறி நீகண்
டனையே மென்றனர் நீயும் நுந்நகங் கொண்டினும் வென்றோ
யதனாற் செல்வக் கோவே சேரலர் மருக காறிரை யெடுத்த
முழங்குகுரல் வேலி நனந்தலை யுலகஞ் செய்தநன்
றுண்டெனின் அடையடுப் பறியா வருவி யாம்பல்
ஆயிர வெள்ள ஊழி
வாழி யாத வாழிய பலவே" [பதிற்றுப்-கூரு]

என்பதும் அது. பிறவும் அன்ன.

சேய் வரல் வருத்தம் வீட வாயில் காவலர்க்கு உரைத்த கடைநிலையும்-சேய் மைக்கண்ணின்று வருகின்ற வருத்தம் தீர வாயில் காவலர்க்கு உரைத்த வாயில்

நிலையும்.

உதாரணம் :—

" வாயி லோயே வாயி லோயே
வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி
விதைத்துத்தாம்
உள்ளியது விளைக்கு முரனுடை யுள்ளத்து
வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கைப்
பரிசிலர்க் கடையா வாயி லோயே
கடுமான் றோன்ற னெடுமா னஞ்சி
தன்னறி யலன்கொ லென்னறி யலன்கொல்
அறிவும் புகழு முடையோர் மாய்ந்தென
வறுந்தலை யுலகமு மன்றே யதனாற்
காவினெங் கலனே சுருக்கினெங் கலப்பை
மரங்கொ றச்சன் கைவல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத் தற்றே
எத்திசைச் செல்லினு மத்திசைச் சோறே."
[புறம்-உ0அ]

கண்படை கண்ணிய கண்படை நிலையும்-இறைவன்
கண்படை நிலையைக் குறித்த கண்படை நிலையும்.

என்றது, அரசன் இனிது துயின்றது கூறல் என்றவாறும்.



உதாரணம்:—

" மேலா ரிறையமருண் மின்னார் சினஞ்சொரியும்
வேலான் விறன்முனை
வென்றடக்கிக்—கோலாற்
கொடிய வுலகிற் குறுகாமை யெங்கோன்
கடியத் துயிலேற்ற கண்."

[வெண்பா-பாடாண்-அ]

கபிலை கண்ணிய வேள்விநிலையும்-கபிலையைக் குறித்த வேள்விநிலையும்.

உதாரணம் :—

" பருக்காழும் செம்பொன்னும் பார்ப்பார் முகப்பக்
குருக்கட் கபிலை
கொடுத்தான்—செருக்கோ
டிடிமுரசத் தானை யிகலிரிய வெங்கோன்

கடிமுரசங் காலைச்செய் வித்து."

[வெண்பா-பாடாண்-கச]

வேலை நோக்கிய விளக்குநிலையும்-வேலினைக் குறித்த விளக்குநிலையும். நோக்குத லாவது, விளக்கு ஏதுவாக வேலின் வெற்றியைக் காட்டுதல்.

உதாரணம் :—

"வளிதுரந்தக் கண்ணும் வலந்திரியாப் பொங்கி
ஒளிசிறந்தாங் கோங்கி
வரலால்—அளிசிறந்து



நன்னெறியே காட்டு நலந்தெரி கோலாற்கு
வென்னெறியே காட்டும் விளக்கு. [வெண்பா-பாடாண்-கஉ]

வாயுறை வாழ்த்தும்-வெஞ்சொல்லைப் பிரித்தலின்றிப் பிற்பயக்குமென்று வேம்பும் கடுவும்போல ஓம்படைக் கிளவியாலே மெய்யுறக் கூறுதலும்.

[வாயுறை வாழ்த்தின் இலக்கணம் :—]

" வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்

வேம்புங் கடுவும் போல வெஞ்சொல்
தாங்குத லின்றி வழிநனி பயக்குமென்
றோம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே." [தொல்-செய்யு-கசஅ]

**உதாரணம் :—**

" காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே
மாநிறை வில்லதும் பன்னாட் காகும்
நூறுசெ றுவாயினுந்
தமித்துப்புக் குணினே
வாய்புகு வதனினுங் கால்பெரிது கெடுக்கும்
அறிவுடை வேந்த னெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்தும்
மெல்லியன் கிழவ னாகி வைகலும்
வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப வெடுக்கும் பிண்ட நச்சின்
யானை புக்க புலம்போல்
தானு முண்ணா னுலகமுங் கெடுமே." [புறம்-கஅச]

செவியறிவுறூவும்-உயர்ந்தோர் மாட்டு அவிந்து ஒழுகுதல் வேண்டும் எனச் செவியறிவுறுத்துக் கூறுதலும்.

**[செவியுறையின் இலக்கணம் :—]**

" செவியுறை தானே

பொங்குத லின்றிப் புரையோர் நாப்பண்
அவிதல் கடனெனச் செவியுறுத் தற்றே" [தொல்-செய்யு-௧௪௦]

உதாரணம் :—

" அந்தணர் சான்றோ ரருந்தவத்தோர் தம்முன்னோர்
தந்தைதா யென்றிவர்க்குத்
தார்வேந்தே—முந்தை
வழிநின்று பின்னை வயங்குநீர் வேலி
மொழிநின்று கேட்டன் முறை."
[வெண்பா-பாடாண்-௩௩]

ஆவயின் வரூஉம் புறநிலை வாழ்த்தும்-மன்னன் இடத்ததாகி வரும் புறநிலை வாழ்த்தும், அது,

" வழிபடு தெய்வ நிற்புறங் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமி னென்னும் புறநிலை
வாழ்த்தே"[தொல்-செய்யு-௧௧௩.]

என்பதனால், இனிது வாழ்மின் என்னும் பொருள்மேல் வரும்.

உதாரணம் .—

" தென்ற லிடைபோழ்ந்து தேனார் நறுமுல்லை
முன்றின் முகைவிரியு முத்தநீர்த் தண்கோனூர்க்
குன்றமர்ந்த கொல்லேற்றா னிற்காப்ப
வென்றுந்
தீரா நண்பிற் றேவர்
சீர்சால் செல்வமொடு பொலிமதி
சிறந்தே." [யா-வி.௫௫- மேற்கோள்]

கைக்கிளை வகையொடு-ஆண்பாற்கூற்றுக் கைக்கிளையும் பெண்பாற்கூற்றுக் கைக்கிளையும்.

இவையும் பாடாண் பாட்டாம் என்றவாறு.

உதாரணம் :—

" துடியடித் தோற்செவித் தூங்குகை நால்வாய்ப்
பிடியேயா னின்னை யிரப்பல்—கடிகமழ்தார்ச்
சேலேக வண்ணனெஞ் சேரி
புகுதுங்காற்
சாலேகஞ் சார நட" [முத்தொள்-௪௫]

எனவும்,

" அணியாய செம்பழுக்காய் வெள்ளிலையோ டேந்திப்
பணியாயோ வெம்பெருமா
னென்று—கணியார்வாய்க்
கோணலங் கேட்பதூஉங் கொங்கர்
பெருமானூர்

தோணலஞ் சேர்தற் பொருட்டு ”

எனவும் வரும். பிறவும் அன்ன.

உளப்பட தொகைஇ தொக்க நான்கும் உள என மொழிப-உளப்படத் தொகைஇத் தொக்க நான்கும் (முன்னையவும் இத்திணைக்கு) உள என மொழிப.

அஅ. தாவி னல்லிசை கருதிய

கிடந்தோர்க்குச்

சூத ரேத்திய துயிலெடை

நிலையும்

கூத்தரும்

பாணரும் பொருநரும் விறலியும்



ஆற்றிடைக் காட்சி யுறழத்

தோன்றிப்

பெற்ற பெருவளம் பெறாஅர்க்

கறிவுறீஇச்

சென்றுபய னெதிரச் சொன்ன

பக்கமும்

சிறந்த நாளினிற் செற்ற நீக்கிப்
பிறந்த நாள்வயிற் பெருமங் கலமும்
சிறந்த சீர்த்தி மண்ணு மங்கலமும்

நடைமிகுத் தேத்திய குடைநிழன்

மரபும்

மாணார்ச் சுட்டிய வாண்மங் கலமும்
மன்னெயி லழித்த மண்ணுமங்

கலமும்

பரிசில் கடைஇய கடைக்கூட்டு

நிலையும்

பெற்ற பின்னரும்

பெருவள னேத்தி

நடைவயிற் றோன்றிய விருவகை

விடையும்

அச்சமு முவகையு மெச்ச மின்றி

நாளும் புள்ளும் பிறவற்றி

னிமித்தமும்

காலங் கண்ணிய

வோம்படை யுளப்பட

ஞாலத்து வரூஉம் நடக்கையது

குறிப்பிற்

கால மூன்றொடு கண்ணிய வருமே.

இதுவும் அது.

இ-ள்:—'துயிலெடைநிலை' முதலாகப் 'பரிசில் விடை' ஈறாகச் சொல்லப்பட்டனவும், நாளும் புள்ளும் நிமித்தமும் ஓம்படையும் உட்பட்ட உலக வழக்கின் அறியும் மூன்றுகாலமும் பற்றி வரும் பாடாண்டிணை என்றவாறு.

கிடந்தோர்க்கு தாவில் நல் இசை கருதிய சூதர் ஏத்திய துயில் எடைநிலையும்-கிடந்தோர்க்குக் கேடு இல்லாத நற்புகழைப் பொருந்தவேண்டிச் சூதர் ஏத்திய துயில் எடைநிலையும்.

உதாரணம்:—

"அளந்த திறையா ரகலிடத்து மன்னர்
வளந்தரும் வேலோய் வணங்கக்—களந்தயங்கப்
பூமலர்மேற் புள்ளொலிக்கும் பொய்கைசூழ் தாமரைத்
தூமலர்க்க ணேர்க துயில்." [வெண்பா-பாடாண்-௩]

கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும் ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றி ,பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇ சென்று பயன் எதிர சொன்ன பக்கமும்– கூத்தராயினும் பாணராயினும் பொருநராயினும் விறலியாயினும் நெறியிடைக் காட்சிக் கண்ணே எதிர்ந்தோர் உறழ்ச்சியால் தாம் பெற்ற பெருவளன் நுமக்குப் பெறலாகும் எனவும் சொன்ன பக்கமும்.

'பக்கமும்' என்றதினான், ஆற்றினது அருமையும் அவன் ஊரது பண்பும் கூறப்

படும். அவற்றுள்,

கூத்தராற்றுப்படை வருமாறு :—

"திருமழை தலைஇய" [மலைபடுகடாம்-க] என்னும் பாட்டுட் காண்க.





பாணாற்றுப்படை வருமாறு :—

"பாணன் சூடிய பசும்பொற் றாமரை
மாணிழை விறலி மாலையொடு விளங்கக்
கடும்பரி நெடுந்தேர் பூட்டுவிட் டசைஇ
ஊரீர் போலச் சுரத்திடை யிருந்தீர்
யாரீ ரோவென வினவ லானாக்

காரென் னொக்கற் கடும்பசி யிரவல
வென்வே லண்ணற் காணா வூங்கே
நின்னினும் புல்லியே மன்னே யினியே
இன்னே மாயினே மன்னே யென்றும்
உடாஅ போரா வாகுத லறிந்தும்
படாஅ மஞ்ஞைக் கீத்த வெங்கோ
கடாஅ யானைக் கலிமான் பேகன்
எத்துணை யாயினு மீத்த லன்றென
மறுமை நோக்கின்றோ வன்றே, பிறர்
வறுமைநோக் கின்றவன் கைவண் மையே." [புறம்-கசுக]

பொருநராற்றுப்படை வருமாறு:—

"சிலையுலா நிமிர்ந்த சாந்துபடு மார்பின்
ஒலிகதிர்க் கழனி வெண்குடைக் கிழவோன்
வலிதுஞ்சு தடக்கை வாய்வாட் குட்டுவன்
வள்ளிய னாதல் வையகம் புகழினும்
உள்ள லோம்புமி னுயர்மொழிப் புலவீர்
யானும்,
இருணிலாக் கழிந்த பகல்செய் வைகறை
ஒருகண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றிப்
பாடிமிழ் முரசி னியறேர்த் தந்தை
வாடா வஞ்சி பாடினே னாக
அகமலி யுவகையோ டணுகல் வேண்டிக்

கொன்றுசினந் தணியாப் புலவுநாறு
மருப்பின்

வெஞ்சின வேழ நல்கின னஞ்சி
யானது பெயர்த்தனெ னாகத் தானது
சிறிதென வுணர்ந்தனை நாணிப் பிறிதுமோர்
பெருங்களிறு நல்கி யோனே யதற்கொண்
டிரும்பே ரொக்கல் பெரும்புலம் புறினுந்

துன்னரும் பரிசி றருமென

என்றுஞ்செல் லேனவன் குன்றுகெழு
நாட்டே." [புறம்-நகச]

விறலியாற்றுப்படை வருமாறு :—

"மெல்லியல் விறலிநீ நல்லிசை செவியிற்
கேட்பி னல்லது காண்பறி யலையே
காண்டல் வேண்டினை யாயின் மாண்டநின்
விரைவளர் கூந்தல் வரைவளி யுளரக்
கலவ மஞ்ஞையிற் காண்வர வியலி

மாரி யன்ன வண்மைத்
தேர்வே ளாயைக் காணிய சென்மே."

[புறம்-௧௩௩]

சிறந்த நாளினிற் செற்றம் நீக்கி பிறந்த நாள்வயின் பெருமங்கலமும்-சிறந்த நாட் கண் உண்டாகிய செற்றத்தை நீக்கிப் பிறந்த நாட்கண் உளதாகிய பெருமங்கலமும்.

உதாரணம் :—

அந்தண ராவொடு பொன்பெற்றார் பாவலர்
மந்தரம்போன் மாண்ட
களிறூர்ந்தார்—எந்தை
இலங்கிலைவேற் கிள்ளி யிரேவதிநா
ளென்னோ
சிலம்பிதன் கூடிழந்த வாறு."

[முத்தொள்-௭௰]

சிறந்த சீர்த்தி மண்ணு மங்கலமும்-ஆண்டுதோறும் முடி புனையும்வழி நிகழும் மிகப்புண்ணிய நீராட்டு மங்கலமும்.

இதற்குச் செய்யுள் வந்தவழிக் காண்க.

கடை மிகுத்து ஏத்திய குடை நிழல் மரபும்-ஒழுக்கத்தை மிகுத்து ஏத்தப்பட்ட குடை நிழல் மரபு கூறுதலும்.

உதாரணம் :—

" திங்களைப் போற்றுதுந் திங்களைப் போற்றுதும்
கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ்
அங்க ணுலகளித்த லான்."

[சிலப்-மங்கல-க]

மாணார்ச் சுட்டிய வாள் மங்கலமும்-பகைவரைக் கருதிய வாள் மங்கலமும்.

உதாரணம் :—

" பிறர்வேல் போலா தாக விவ்வூர்
மறவன் வேலோ பெருந்தக வுடைத்தே
இரும்புற நீறு மாடிக் கலந்திடைக்
குரம்பைக் கூரைக் கிடக்கினுங் கிடக்கும்
மங்கல மகளிரொடு மாலை சூடி
இன்குர லிரும்பை யாழொடு ததும்பத்
தெண்ணீர்ப் படிவினுந் தெருவினுந் திரிந்து
மண்முழு தழுங்கச் செல்லினுஞ் செல்லுமாங்

திருக்கடற் றூனை வேந்தர்
பெருங்களிற்று முகத்துஞ் செலவா னதே" [புறம்-கூகூ]

மன் எயில் அழித்த மண்ணு மங்கலமும்-நிலைபெற்ற எயிலை அழித்த மண்ணு நீராடு மங்கலமும்.

இஃது உழிஞைப் படலத்துக் கூறப்பட்ட தாயினும், மண்ணு நீராடுதலின் இதற்கும் துறையாயிற்று. இவ்வாறு செய்தனை எனப் புகழ்ச்சிக்கண் வருவது பாடாண் டிணையாம். இவ்வுரை மறத்துறை ஏழற்கும் ஒக்கும். உதாரணம் வந்தவழிக் காண்க.

பரிசில் கடைஇய கடைக்கூட்டு நிலையும்-பரிசில் கடாவுதலாகிய கடைக்கூட்டு நிலையும்.

உதாரணம் :—

" ஆடெரி மறந்த கோடிய ரடுப்பின்
ஆம்பி பூப்பத் தேம்புபசி யுழவாப்
பாஅ லின்மையிற் றோலொடு திரங்கி
இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை



சுவைத்தொ றழூஉந் தன் மகத்துமுக நோக்கி
நீரொடு நிறைந்த வீரிதழ் மழைக்கணென்
மனையோ ளெவ்வ நோக்கி நினைஇ

நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண
என்னிலை யறிந் தனை யாயி னிந்நிலைத்
தொடுத்துங் கொள்ளா தமையலெ னடுக்கிய
பண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்
மண்ணார் முழவின் வயிரியர்
இன்மை தீர்க்குங் குடிப்பிறந் தோயே." [புறம்-கசுச]

இன்னும் இதனானே, பரிசில்பெறப் போகல் வேண்டுமென்னும் குறிப்பும் கொள்க.

உதாரணம் :—

" நல்லியா ழாகுளி பதலையொடு
சுருக்கிச்
செல்லா மோதில் சில்வளை விறலி
களிற்றுக்கணம் பொருத கண்ணகன்
பறந்தலை
விசும்பா டெருவை பசுந்தடி தடுப்பப்
பகைப்புல மரீஇய தகைப்பெருஞ்
சிறப்பிற்
குடுமிக் கோமாற் கண்டு
நெடுநீர்ப் புற்கை நீத்தனம் வரற்கே" [புறம்-கசு]

பெற்ற பின்னரும் பெருவளன் ஏத்தி நடைவயின் தோன்றிய இருவகை விடையும்-பரிசில் பெற்ற பின்னரும் அவன் கொடுத்த மிக்க வளனை ஏத்தி வழக்கின்கண் தோன்றிய இருவகை விடையும். அவையாவன, தான் போதல் வேண்டும் எனக் கூறுதலும், அரசன் விடுப்பப்போதலும்.

வளன் ஏத்தியதற்குச் செய்யுள்:—

" தென்பரதவர் மிடல்சாய

வடவடுகர் வாளோட்டிய
தொடியமை கண்ணித் திருந்துவேற் றடக்கைக்
கடுமா கடைஇய விடுபரி வடிம்பின்
நற்றார்க் கள்ளின் சோழன் கோயிற்
புதுப்பிறை யன்ன சுதைசெய் மாடத்துப்
பனிக்கயத் தன்ன நீணகர் நின்றேன்
அரிக்கூடு மாக்கிணை யிரிய வொற்றி
எஞ்சா மரபின் வஞ்சி பாட
எமக்கென வகுத்த வல்ல மிகப்பல
மேம்படு சிறப்பி னருங்கல வெறுக்கை
தாங்காது பொழிதந் தோனே யதுகண்
டிலம்பா டுழந்தவென் னிரும்பே ரொக்கல்
விரற்செறி மரபின செவித்தொடக் குநரும்
செவித்தொடர் மரபின விரற்செறிக் குநரும்
அரைக்கமை மரபின மிடற்றியாக் குநரும்
மிடற்றமை மரபின வரைக்கியாக் குநரும்
கடுந்தே ரிராம னுடன்புணர் சீதையை
வலித்தகை யரக்கன் வௌவிய ஞான்றை
நிலஞ்சேர் மதாணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை யிழையணிப் பொலிந்தாங்
கறாஅ வருநகை யினிது பெற்றிகுமே
இருங்கிளைத் தலைமை யெய்தி
அரும்பட ரெவ்வ முழந்ததன் றலையே." [புறம்-௩௭௮]

தான் பிரிதல் வேண்டிக் கூறியதற்குச் செய்யுள் :—

" ஊஉனு மூஉனு முனையி னினிதெனப்
பாலிற் பெய்தவும் பாகிற் கொண்டவும்
அளவுபு கலந்து மெல்லிது பருகி
விருந்துறுத் தாற்றி யிருந்தனே மாகச்
சென்மோ பெருமவெம் விழவுடை நாட்டென
யாந்தன் னறிய வினவின மாகத்

தான்பெரி, தன்புடை மையி னெம்பிரி வஞ்சித்
துணரி யதுகொளா வாகிப் பழமூழ்த்துப்
பயம்பகர்ப் பறியா மயங்கரின் முதுபாழ்ப்
பெயல்பெய் தன்ன செல்வத் தாங்கண்
ஈயா மன்னர் புறங்கடைத் தோன்றிச்
சிதாஅர் வன்பிற் சிதர்ப்புறத் தடாரி
ஊஉனுகிர் வலந்த தெண்க ணொற்றி
விரல்விசை தவிர்க்கு மரலைப் பாணியின்
இலம்பா டகற்றல் யாவது புலம்பொடு
தெருமர லுயக்கமுந் தீர்க்குவோ மதனல்
இருநிலங் கூலம் பாறக் கோடை
வருமழை முழக்கிடைக் கோடிய பின்றைச்
சேயை யாயினு மிவணை யாயினும்
இதற்கொண் டறிவை வாழியோ கிணைவ

சுனைகனி யொருவழிப் படர்கென் றோ

னேயெந்தை

ஒலிவெள் ளருவி வேங்கட நாடன்

உறுவருஞ் சிறுவரு மூழ்மா றுய்க்கும்

அறத்துறை யம்பியின் மான மறப்பின்

றிருங்கோ ளீராப் பூட்கைக்

கரும்ப னூரன் காதன் மகனே."

[புறம்-௩௮௧] அரசன் விடை கொடுப்பப் போந்தவன் கூற்று

:—

"நின்னயந் துறைநர்க்கு நீநயந் துறைநர்க்கும்

பன்மாண் கற்பினின் கிளைமுத லோர்க்கும்

கடும்பின் கடும்பசி தீர யாழநின்

நெடுங்குறி யெதிர்ப்பை நல்கி யோர்க்கும்

இன்னோர்க் கென்னா தென்னொடுஞ் சூழாது

வல்லாங்கு வாழ்து மென்னாது நீயும்

எல்லோர்க்குங் கொடுமதி மனைகிழ வோயே

பழந்தூங்கு முதிரத்துக் கிழவன்

திருந்துவேற் குமண னல்கிய வளனே."

[புறம்-௧௬௩]

'இருவகை விடையும்' என்றதனால், பரிசில் பெற்றவழிக்கூறுதலும் பெயர்ந்தவழிக்

கூறுதலும ஆம.

அச்சமும் உவகையும் எச்சம் இன்றி நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும் காலம் கண்ணிய ஓம்படை—அச்சமும் உவகையும் ஒழிவு இன்றி நாளானும் புள்ளானும் பிற நிமித்தத்தானும் காலத்தைக் குறித்த ஓம்படையும்.



அச்சமாவது, தீமை வரும் என்று அஞ்சுதல். உவகையாவது, நன்மை வரும் என்று மகிழ்தல். நாளாவது, நன்னாள் தீநாள். புள்ளாவன, ஆந்தை முதலியன. பிற நிமித்தமாவன, அலகு முதலாயின. காலங்கண்ணுதலாவது, வருங்காலங் குறித்தல்.

**உதாரணம் :—**

"ஆடிய வழற் குட்டத்
தாரிரு ளரையிரவின்
முடப்பனையத்து வேர்முதலாக்
கடைக்குளத்துக் கயங்காயப்
பங்குனியுய ரழுவத்துத்
தலைநாண்மீ னிலைதிரிய
நிலைநாண்மீ னெதிரேர்தரத்
தொன்னாண்மீன் றுறைபடியப்
பாசிச் செல்லா தூசி முன்னா
தளக்கர்த் திணை விளக்காகக்
கனையெரி பரப்பக் காலெதிர்பு பொங்கி

ஒருமீன் வீழ்ந்தன் ருல் விசும்பி னானே
அதுகண், டியாமும் பிறரும் பல்வே றிரவலர்
பறையிசை யருவி நன்னாட்டுப் பொருநன்
நோயில னாயி னன்றுமற் றில்லென
வழிந்த நெஞ்ச மடியுளம் பரப்ப
அஞ்சினம்" [புறப்-உ௨௯]
என்பது பிறவாறு நிமித்தம் கண்டு அஞ்சியது.

" புதுப்புள் வரினும் பழம்புட் போகினும்
விதுப்புற லறியா வேமக் காப்பினை
அனையை யாகன் மாறே
மன்னுயி ரெல்லா நின்னஞ் சும்மே"

[புறம்-உ௦] என்பது புட்பற்றி வந்தது.

" காலனுங் காலம் பார்க்கும் "

[புறம்-சக]
என்னும் புறப்பாட்டு, நிமித்தம் பற்றி வந்தது.

" நல்லவை செய்த லாற்றீ ராயினும்
அல்லவை செய்த லோம்புமின் "

[புறம்-கரு] என்பது ஓம்படை பற்றி வந்தது.

உளப்பட னாலத்து வரும் நடக்கையது குறிப்பின் காலம் மூன்றொடு கண்ணிய வருமே-இவை உளப்படத் தோன்றும் வழக்கினது கருத்தினானே காலம் மூன்றனொடும் பொருந்தக் கருதுமாற்றான் வரும் மேற்கூறி வருகின்ற பாடாண்டினை.

